வெளியீடு எண் 121.



# சங்கற்பநிராகரணம் - - சார்புக்கட்டுரை

- து. ந. உலகநாதன் -





திருவாவடுதுறை ஆதீனம்.

உ
சிவமயம்

## வெளியீட்டுரை

சங்கற்பநிராகரணம் என்னும் இந்நூல், மெய்கண்ட சந்தானத்து ஸ்ரீ உமாபதிதேவநாயனுர் அருளிச் செய்த எட்டுச் சாத்திர நூல்களில் ஒன்ரும். இஃது, உண்மைச் சமய வாழ்வு யாது என்பதை நியாய முறையில் எடுத்து உரைப்பது. உலகத்து மக்கள் யாவர்க்கும் இந்நூல் உரியது. தமிழ்மக்கள் யாவரும் சிறப்புமுறையில் இந்நூலைக் கற்று உண்மைதெளிந்து உய்யவேண்டும் என்னும் திருவுள்ளம் கொண்டு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், இதனை நிகழும் விளம்பி ஆண்டின் ஆனித்திருமஞ்சன விழா மலராக வெளியிட்டருளுகின்ருர்கள்.

ஓதி இன்புறுக உலகம்.



வெளியீடு எண் 121.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதி தேவநாயனுர் அருளிச்செய்த

# சங்கற்பநிராகரணம்

நூலின்

## சார்புக்கட்டுரை

தா. ந. உலகநாதன்.

இஃது

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்ருவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.




திருவாவடுதுறை ஆதீனம்
1958.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம்

—சிவஞானயோகிகள்.

௦

உ

துறைசை

இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீசுப்பிரமணியதேசிகபரமாசாரியசுவாமிகள் தோத்திரம்

இப்புவி என்மனம் இன்னுரு எண்ணிட
 என்கண் நோக்கிடவே
ஒப்பிலி தன்புகழ் என்நா ஓதிட
 உபதேசம் செவிகள்
கப்புக கழலடி பொடிமணம் என்உடல்
 பூசிமு கந்திடவே
எப்பொழு துந்துறை சைப்பதி சுப்பிர
 மணியருள் ஏற்குவனே.

—தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

௨

துறைசை

இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீசுப்பிரமணியதேசிகபரமாசாரியசுவாமிகள்

## தோத்திரம்

இப்புவி என்மனம் இன்னுரு எண்ணிட
என்கண் நோக்கிடவே
ஒப்பிலி தன்புகழ் என்நா ஓதிட
உபதேசம் செவிகள்
கப்புக கழலடி பொடிமணம் என்உடல்
பூசிமு கந்திடவே
எப்பொழு துந்துறை சைப்பதி சுப்பிர
மணியருள் ஏற்குவனே.

— தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

துறைசை

இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீசுப்பிரமணியதேசிகபரமாசாரியசுவாமிகள்

# தோத்திரம்

இப்புவி என்மனம் இன்னுரு எண்ணிட
என்கண் நோக்கிடவே
ஒப்பிலி தன்புகழ் என்நா ஓதிட
உபதேசம் செவிகள்
கப்புக கழலடி பொடிமணம் என்உடல்
பூசிமு கந்திடவே
எப்பொழு துந்துறை சைப்பதி சுப்பிர
மணியருள் ஏற்குவனே.

— தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

துறைசை

இருபத்தொன்றுவது குருமஹாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீசுப்பிரமணியதேசிகபரமாசாரியசுவாமிகள்

## தோத்திரம்

இப்புவி என்மனம் இன்னுரு எண்ணிட
என்கண் நோக்கிடவே
ஒப்பிலி தன்புகழ் என்நா ஓதிட
உபதேசம் செவிகள்
கப்புக கழலடி பொடிமணம் என்உடல்
பூசிமு கந்திடவே
எப்பொழு துந்துறை சைப்பதி சுப்பிர
மணியருள் ஏற்குவனே.

—தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முகவுரை

பரைவி ளங்கிடப் பால்மதி சூடினேன்
தரைவி ளங்கிடத் தந்த முதற்பொருள்
மரைவி ளங்கிடப் பாத மலரிணை
உரைவி ளங்கிட உள்கித் தரிப்பனே.

மக்களாகப் பிறந்தோர் யாவரும் நல்வாழ்வு எய்தப்பெறவேண்டும். நல்வாழ்வுவாழ விரும்புபவர் யாவரும் தமக்குள் சூழ்நிலைகளையும், தம் சொந்த நிலைகளையும் சீர்தூக்கிப் பார்த்துச் சூழ்நிலைகளை வெறுத்து ஒதுக்காமலும் பகைக்காமலும், தமது சொந்த நிலைக்கு ஏற்றவாறு இணக்கிக் கொள்ள வேண்டும். இந்த இரகசியம் உணர்ந்த யாவரும் எந்தத்துறையிலும் முன்னேற்றமும் முழுப்பயனும் தட்டாமல் எய்துவர்.

இந்த முறையிலேயே சமயவாழ்வு மேற்கொண்ட அனைவரும் நடத்தல் நல்லது. கிணற்றுத் தவளை போன்று தாம் குறுகிய நோக்கமுடையராய்த் தம் சமயம் ஒன்றையே பெரியதெனவும் உரியதெனவும் மதித்துப் போலி ஒழுக்கங்களையும் பொய்பட்ட

நடத்தைகளையும் புரிதல் நன்றன்று. எல்லாச் சமயங்களின் கொள்கைகளையும் பகையுணர்ச்சியின்றிப் பரிசிலனை செய்துபார்த்து, உண்மை உணர்ந்து அவ்வழி ஒழுகி உவப்புறுதலே சீரியதாகும். இந்த வழியில் இந்நூல் நமக்குப் பெரிதும் துணைபுரிகின்ற தொன்றும். இந்நூலின் பெயர் சங்கற்பநிராகரணம் என்பதாகும். இதன் ஆசிரியர் சந்தானுசாரியர்களுள் ஒருவராகிய ஸ்ரீ உமாபதிதேவநாயனுர் ஆவர். இவ்வாசிரியர் வரலாறும் பிறவும் இந்நூலில் 'நூலும் நூலாசிரியரும்' என்னும் தலைப்பின்கீழ்த் தனிப்படத் தரப்பட்டுள.

இவர், இந்தநூலை மக்களாவார் ஓதி உண்மை கண்டு தெளிவு அடையவேண்டும் என்ற நோக்கங் கொண்டே இயற்றி அருளியுள்ளார்கள். சித்தாந்த சைவம் என்பது, உலகின் பல்வேறு சமயங்களின் அடிப்படை ஒருமையைச் சாதித்து, உண்மையும் மறுக்கமுடியாததுமான கொள்கைகளைப் போதித்து, மக்களை வேறுபாடு கருதாமல் ஒன்றுபடுத்தி உயர் நெறியில் செலுத்துவதாகும். "Sri Umapathi Deva Nayanar's aim is not to hate or degrade any of the religions in the world, but to show the underlying unity in the variety of religions" என்பது நம்மால் கருதப்படத்தக்கதாகும். ஆதலால், மக்கள் யாவரும் இந்த நூலினை ஓதியும் கேட்டும் உய்தி பெறுதல் இன்றியமையாத கடமையாகும்.

இந்தச் சீரிய கருத்தினைத் திருவுள்ளத்துக் கொண்டுதான், தற்போது தமிழகத்துத் துறைசையம்பதியிலே எழுந்தருளியுள்ளவர்களாகிய 21-ஆவது

குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள், தாம் இயற்றிவரும் தருமோபகாரங்களில் ஒன்ருக இந்நூலின் சார்புக்கட்டுரையை அடியேனல் எழுதுவித்து, நிகழும் விளம்பி ஆண்டு ஆனித்திங்கள் ஸ்ரீ நடராஜப்பெருமான் திருமஞ்சன நன்னுள்வெளியீடாக ஆதீன ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகத்தே அச்சிடுவித்து இலவசமாக வழங்கியருளுகின்ருர்கள். உலகம் திருந்திய வாழ்க்கைநெறியிலே பொருந்தி ஒழுகி, நல்லின்பினை நாளும் அருந்தி மகிழ வேண்டும் என்பதே ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் நோக்கமாகும். இதன்பொருட்டுப் பற்பல உதவிகளை இவர்கள் ஆற்றியருளுதல் நம்பேற்றின் பயனுகும். இங்ஙனம் இப்பெரும் பணியுள் அறிவில்லா அடியேனைப் புகுவித்து ஆட்கொண்டருளுகின்ற திருவருளை வாழ்த்தி நன்றி கூறுகிறேன்.

மற்றும், இச்சார்புக் கட்டுரையினை மக்களாவார்க்கு அறிமுகப்படுத்தும்பொருட்டு அணிந்துரை அளித்தருளியவர், இந்த ஆதீனத்து அடியவரும் அடியேனது அரிய நண்பரும் ஆகிய வித்துவான், திரு. T. S. தியாகராஜதேசிகர் அவர்கள் ஆவர். இவர் அடியேன் புரியும் இவ்வகைத் தொண்டிற்கெல்லாம் உடனிருந்து ஊக்கமளித்து உவப்பூட்டி வருபவர்களாவர். இவர்களுடைய இத்தகைப் பேருதவியினைப் பெரும்பேறெனை மதித்து நன்றிபுரிகின்றேன்.

மேலும், இந்நூல் உருவடைதற்காம் பல்வகை உதவிகளையும் நல்வகையில் நடத்தியுதவும் நண்பர்களுக்கெல்லாம் எனது பணிவு உரியதாகுக!

இந்த நூலகத்தே அறிவுக் குறைபாட்டினால் அடியேன் செய்துவிட நேர்ந்த பிழைபாடுகளைக் களைந்து, குணங்கொண்டு ஆசிர்வதிக்குமாறு அனைவரையும் வேண்டுகின்றேன்.

உலகம் உண்மைச் சமய ஒழுக்கம் பற்றி உய்தி பெறுவதாக என அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அம்பலவாணர் ஆன்ம வயித்தியர் திருவடிகளை வழுத்துகின்றேன்.

இங்ஙனம்.

21-G. துக்காராம்தெரு,
கடலூர் N. T.
விளம்பி, ஆனி.

சார்புக்கட்டுரை நூலாசிரியன்,
திருவாவடுதுறை ஆதீனப் புலவன்,
**தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.**

உ

சிவமயம்

# அணிந்துரை

நிற்கின்ற போதே நிலைஉடையான் கழல்
கற்கின்ற செய்ம்மின் கழிந்தறும் பாவங்கள்
சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்
மற்றொன் றிலாத மணிவிளக் காமே.

—திருமந்திரம் 292.

## பொதுவுரை :

சிறப்பு என்பது வீடு. பிறப்பு என்பது பந்தம். பிறப்பில் உடலோடு கூடி உள்ளோம். சிறப்பில் சிவத்தோடு கூடி இன்புடன் வாழ்கிறோம். என்றாலும், வீடுபேறு பெறுதற்குக் கருவியாகவே உடல் தரப்பட்டுள்ளது. உடல் வேலை செய்து செய்து இளைப்புறுகிறது; ஓய்வை நாடுகிறது. அங்ஙனமே, உயிரும் பிறப்பு இருப்பு இறப்புக்களால் இளைப்புறுகிறது; அமைதியை அவாவுகிறது. ''எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்'' என்கின்றனர் ஞானிகள். இந்த இளைப்பை நீக்கிக் கொள்ளுவதற்கு வழிகள் எவை என்பதை நாம் அறியவேண்டும்; அநுபவிக்கவும் வேண்டும். அறிவதற்குத் துணையாக இருப்பனவே சமயங்களும் சாத்திரங்களும். அநுபவிப்பதற்குத் துணையாவார் ஆசாரியரே ஆவர். இந்த இரண்டின் தொடர்பினை அறிந்தே இத்தகையவர்களைச் சமயாசாரியர்கள் என்கின்றனர் பெரியோர்.

சமயங்களை விளக்குவனவே சாத்திரங்கள். ஆசாரியரையும் இறைவனையும் மகிழ்விப்பனவே தோத்திரங்கள். ஆகவே, சமயவாழ்க்கையினருக்கு இவ்விரண்டின் தேவையும் உண்டு. சாத்திரத்தால் நல்லறிவு தலைப்படும். தோத்திரத்தால் அமைதி - ஆனந்தம் தலைப்படும். சமயங்கள் பலவாகும். ஆதலின், சாத்திரங்களும் பலவே. எல்லாச் சமயங்களும் பேரின்பநெறிக்கே வழிகளாக உள்ளன. நோயுடையானுக்குப் பத்தியம் முக்கியம். மருந்து தேவை. சுகம் பயன். இப்படியே சமயவிதிகள் பத்தியமுறையில் உள்ளன. சமய அநுட்டானமே மருந்தாம். சமய அதீத அநுபவமே இன்பாம் பயன். உடலின் நல்ல சுகத்துக்கு நல்ல மருத்துவரையும், நல்ல மருந்தையும், சிறந்த பத்தியங்களையுமே நாடுகிறோம். இதனால், நல்லசுகம் - பூரணசுகம் விரைவில் கிடைக்கப்பெறுகிறோம். இப்படியே ஆன்ம சுகத்துக்கும் நல்ல ஆசாரியரையும், நல்ல அநுஷ்டானத்தையும் நல்ல சமயநெறிகளையும் நாம் இவ்வாழ்வின் போதே அறிந்து அடைந்தாகவேண்டும். இந்த நன்மைகளை ஆராய்ச்சிமுறையிலும் நியாயமுறையிலும் நமக்கு மெய்கண்ட சாத்திரங்களும், பண்டார சாத்திரங்களும் தெரியக் கூறுகின்றன. மெய்கண்ட சாத்திரங்கள் சித்தாந்த சைவநெறிகளை எடுத்துரைப்பனவாகும். இவ்வகையான சாத்திரங்கள் பதினன்காகும். இவற்றுள் ஒன்றே இச்சங்கற்பநிராகரணம் என்னும் நூல். இதனில் ஸ்ரீ உமாபதிசிவாசாரியசுவாமிகள் சமயங்களின் எல்லாக் கொள்கைகளையும் தந்து, வெறுப்பற்ற நல்லமுறையிலே பரிசீலனைசெய்து, சிறந்தசமயநெறி இன்னது தான் என மக்கட்குத் தெருட்டியுரைத்துள்ளார்.

## இந்நூலும் உரையும் :

இந்நூல் யாவராலும் ஓதியுணரத்தக்கது. இந்நூலுக்கு ஆதீன உரை உண்டு. நூலுள், உலகின் யாவகைச் சமயங்களும் - மாயாவாதம் முதலாகச் சைவவாதம் இறுதியாகக்

கூறப்பட்டு, அதன் பயனுக்ச் சித்தாந்த சைவத்தின் பெருமை புலப்படுத்தப்படுகின்றது. இத்தகையதொரு சமயவாதநூல் தேவையா என்பதுபற்றி இந்த நூலாசிரியரே நூற்காரணம் என்னும் தலைப்புள்ள செய்யுளில் தெரிவித்துள்ளார். இந்த நூல் முழுதும் ஆசிரியப்பாவினுல் இயன்றுள்ளது. 1049 வரிகளைக் கொண்டுளது. இறுதியில் ஒரு வெண்பாவும் உள்ளது. இத்தகைய அரியநூலின் பழைய உரையினை இத்துறைசை ஆதீனத்துத் தலைவர்களுள் ஒருவரோ, அன்றித் தம்பிரான் மார்களில் ஒருவரோ செப்பியருளியுள்ளார்கள். ஆகவே, இவ்வுரை உபதேச சம்பிரதாயப்படி அமைந்துள்ளதாகும்.

## இச்சார்புக்கட்டுரை நூல் :

இக்காலத்தே இவ்வுரையினையும், நூலினையும் எம்போன்றூர் படித்து நன்கறிதல் அத்துணை எளிதன்று. இவையிற்றை உள்ளவாறு அறிதற்கு எளியதொரு நடையமைந்த விளக்கவுரை தேவையாகிறது. இந்தத் தேவையினை இந்தச் சங்கற்ப நிராகரணச் சார்புக்கட்டுரை என்ற நூல் பூர்த்திசெய்வதாக உள்ளது. இந்தக் கட்டுரை நூலைப் படிப்பதனுல் பற்பல சமயங்களின் கொள்கைகளையும் தெளிவாக அறியலாகும். நிராகரணம்பற்றிய விளக்கங்களும் கருத்தூன்றிக் கற்கத் தக்கனவாகும். இந்தக் கட்டுரை நூலிலே, முதற்கண் உள்ள விநாயகர் காப்புச்செய்யுட்கு நல்லதொருவிளக்கம் தரப்பட்டுள்ளது. இதனுல், விநாயகர் வழிபாடுபற்றிய முறைமைகளை அறியலாம். நூற்காரண விளக்கம் இதனை அடுத்து நின்று, இந்நூலின் இன்றியமையாமையைத் தெள்ளெனத் தெரிவிக்கின்றது. இதன்கண், இம்முதல்நூல் சிதம்பரதலத்திலே ஆனித் திருவிழா நாட்களில் ஆரும்நாளிலே அவைக்கண் ஆராயப்பட்டசெய்தி கூறப்படுதல் காணலாம். இந்நூலினைப் பற்றிய ஏனைய விவரங்களையும், நூலாசிரியர் வரலாற்றினையும் இக்கட்டுரைநூலின் தொடக்கம் சொல்லிச்செல்லுகிறது.

ஒவ்வொரு மதவாதியும் கூறும் அவ்வம்மதத்தின் சங்கற்பங்கள் - கொள்கைள் இன்னின்னவை என்று தெளியத் தெரியும் வண்ணம் அவ்வவற்றிற்குரிய செய்யுட்கள் பிரித்துத் தனித்தனி தரப்பட்டு விளக்கப்பெற்றுள்ளன. அங்ஙனமே, சித்தாந்த சைவத்தின் சிறப்புடைக் கொள்கைகளை நாமறியும் பொருட்டு நிராகரணப்பாடல்களும் விளக்கங்களும் அமைந்துள்ளன. முதல்நூலாசிரியர், வாதமுறையில் இந்த நூலினிடத்தே ஆங்காங்கு எடுத்துக் காட்டுகின்ற தருக்க வகைகளின் விளக்கங்களும், நுட்பங்களும் கற்போர்க்கு எளிதின் விளங்குமாறு இந்தச்சார்புக்கட்டுரைநூல் சாற்றுகின்றது. மற்றும், ஆங்காங்கு தேவைப்படுகின்ற இடங்களிலெல்லாம் இலக்கணம்பற்றிய விதிமுறைகளும் விவரிக்கப்பட்டிருத்தல் காணலாம்.

உவமைகளின் விளக்கங்களும், பொருள்களின் பொருத்தங்களும் சிறந்தமுறையில் செப்பமுற இந்தக்கட்டுரைநூலில் கழறப்படுகின்றன. இந்தநூலின் இறுதியில் தரப்படுகின்ற வெண்பாவின் பதசாரங்களும், விளக்கங்களும் தனிச்சிறப்புடன் விளங்குகின்றன என்னலாம். கட்டுரை, எளியநடையில் யாவருக்கும் பயன்படும்படி அமைந்துள்ளது. ஆதலால், இதனைக் கற்பார் யாவரும் இந்தநூலின் செய்திகளையும் சமயக்கோட்பாடுகளையும் தெற்றென உளங்கொளப்பெறுவர் என்பதில் ஐயமின்றாம். நூலின் இடையிடையே சித்தாந்த நுணுக்கங்கள் தக்க உதாரணங்களால் நன்கு விளக்கம் பெற்றுள்ளன.

இக்கட்டுரைநூலின் இறுதியில் சித்தாந்தசைவசமயத்தின் அருமை பெருமைகள் ஒருவாறு கற்போருள்ளம் கொள்ளுதற்பொருட்டுச் சுருக்கமாகத் தந்திருப்பது போற்றற்குரியதாகும். இந்த விளக்க நூலைப்பற்றி அடியேன் உரைப்பதினும் இதனைக்கற்கும் வாய்ப்புடையோர் நன்கறியலாகும்.

## சார்புக்கட்டுரை நூலாசிரியர்:

மேற்கூறப்பட்ட சிறப்புக்களைக்கொண்ட இந்தச் சார்புக் கட்டுரை நூலைத் துறைசையாதீனம் ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் அருளாணைப்படி ஆக்கித்தந்த ஆசிரியர், இவ்வாதீன வித்துவான், உயர்திரு. தே. ஆ. ஸ்ரீநிவாஸா சாரியார் அவர்கள் ஆவார்கள். இவர்கள் ஸ்ரீ - ல - ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் திருவருளுக்கு இலக்காகி மெய்கண்ட சாத்திரநூல்கள் பதினான்கனுள் திருவுந்தியார், திருக்களிற் றுப்படியார் முதலிய பத்து நூல்களுக்கும் தெளிவான விளக்க வுரைகண்ட சித்தாந்த சாத்திர விற்பன்னர். ஸ்ரீ - ல - ஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்களின் பரமகருணையால், இவர்கள் சைவசித்தாந்த சாத்திரப் பெருங்கடலில் திளைத்தெழுந்த ஒரு ஞானப் பெருங்கொண்டலாகத் திகழ்ந்து சைவசமயப் பணி ஆற்றிவருதல் மிகவும் பாராட்டற்குரியது.

## ஆதீனத்தின் பெருமை:

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தின் பெருமையினை உலகம் நன்கு அறியும். தமிழ் - வடமொழி - சைவம் முதலியவற்றினை இவ்வாதீனம் பண்டுதொட்டே நன்கு போற்றிவருகின்றது. ஞானப்பனுவல்கள் யாவும் இவ்வாதீ னத்துக் கல்விக்களஞ்சியத்தே சமைந்து மிளிர்கின்றன. ஞான நூல்களை ஆக்கியும், உரைகளை உதவியும், உபதேசங்களை உஞற் றியும் இன்னோரன்ன பல பரம உபகாரங்களை இவ்வாதீன குரவர்களும் தம்பிரான்மார்களும் வழிவழியாக வழங்கியருளி யுள்ளார்கள். இந்த முறையில் தற்போது திருவாவடுதுறை ஆதீனத்திலே ஞானபீடத்திலே எழுந்தருளியிருந்துகொண்டு தமிழுலகில் - சைவ உலகில் - ஞான நெறியில் அருளாட்சி ஆற்றிவருபவர்கள் இருபத்தோராவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ - ல - ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

ஆவார்கள். இவர்களுடைய திவ்விய சங்கற்பத்தினால்தான் இந்நாளில் பலரும் இலவசமாக அடையும்வண்ணம் வெளி வந்து உலவுகின்றன பற்பல ஞானசாத்திரப் பனுவல்கள். பழம் பணிகள் புதுக்கப்படுகின்றன; புதுப்பணிகள் குயிற்றப் படுகின்றன. மக்களாவார் பாவநிராகரணம் செய்தொழுகு தற்கண் இவை பெரிதும் பயன்படுகின்றன. அறிஞர்கள் பலர் சித்தாந்த மாநாடுகளில் அறிவுரைகள் பல ஆற்றிவருகின் றனர். இங்ஙனம் சிவஞான அமுது ஊட்டப்படுகின்றது. மக்கள் கண்ணாலும் செவியாலும் இவ்வரிய அமுதினை மாந்தி ஞான விடாய்ப்புத் தணியப்பெற்று வருகின்றனர் என்பது மிகைச்சொல்லன்று. இம்முறையில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் சங்கற்பநிராகரணச் சார்புக்கட்டுரை என்னும் இந்நூல் இவ்வாண்டு, ஸ்ரீ நடராஜப் பெருமான் ஆனித்திருமஞ்சன மலராக வெளிவருகின்றது.

இங்ஙனம் அருள் ஞான வள்ளலாக ஞானபீடத்தில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் பேரருள் உலகில் நாளும் ஓங்கி நலம் விளைப்பதாக. சித்தாந்த சைவச் செந்நெறி நீடூழி வாழ்க.

இங்ஙனம்,

திருவாவடுதுறை ஆதீன அடியவன்
வித்துவான்,
**T. S. தியாகராஜ தேசிகன்.**

கடலூர், N. T.
20—6—1958.

உ

சிவமயம்

# நூலாசிரியரும் நூலும்

" கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றுஈண்டு வாரா நெறி."

—குறள் 356.

## ஸ்ரீ உமாபதிதேவநாயனார் வரலாறு :

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்பது முதுமொழி. பரமன், ஆன்மகோடிகளுக்காக அசைந்தருளி ஆட்டியருளுகின்ற பெரும் தத்துவத்தினை நம்மனோர்க்குக் கண்கூடாகக் காட்டும் சிறப்புடைய தலமாகும் சிதம்பரம் என்பது. இந்தத்தலத்தே, 'நாம் அவர்களுள் ஒருவர்' என்று மன்றுளாடுபவர் திருவாய்மலர்ந்தருளப்பெற்ற பெருமை உடையது தில்லைவாழந்தணர் மரபு. இம்மரபில் ஒருவர் மகப்பேறின்றி இறைவனை வேண்டிவந்தார். இறைவன் திருவருளால் ஓர் ஆண்மகவு பிறந்தது. தந்தையார் இம்மைந்தர்க்கு உமாபதி எனத் திருநாமம் சூட்டினர். இப்புதல்வர் முன்னைப் பெருந்தவமுடையவர். முதுக்குறைவு துணையாக ஆரியமும் சீரிய தமிழும் பயின்றனர். மெய்க்கலைகள் யாவும் தேர்ந்தனர். பின்னர், தந்தையாரால் சிவதீக்ஷை பெற்றனர். ஆன்மார்த்த பூசையையும், கோயிற் பூசையையும்

கைக்கொண்டனர். மன்றுடியை அன்றுடம் பூசித்து நேசித்து வாழ்ந்துவரலாயினர். இங்ஙனம் பக்குவமுற ஒழுகிவருகையில் தமிழில் கோயிற்புராணம், திரு முறைகண்ட புராணம், திருத்தொண்டர் புராணவர லாறு, திருத்தொண்டர் புராணசாரம், திருப்பதிகக் கோவை, சேக்கிழார்புராணம் என்னும் நூல்களையும், வடமொழியில் பௌட்கராகமத்துக்கு வியாக்கியான மும் செய்தருளினர். இங்ஙனம் இருந்துவருநாட் களிலே இவர்க்குச் சோழவரசரால் முத்துச்சிவிகை, மேளவாத்தியம், பகல்தீவட்டி முதலிய விருதுகள் அளிக்கப்பட்டன. கோயிற்பூசை முடித்துத் தமது ஆச்சிரமத்துக்கு இவர் சிவிகையூர்ந்து செல்வது வழக்கம். எனினும், இவர் நாலாம் சத்திநிபாதம் நணுகப்பெற்றமையின் வீடுபேற்றில் மிக்க அவா உடையராயினர்; ஞானசாரியரொருவரைத் தேடி அடைய நாடினர்.

இவ்வாறிருக்க, ஒரு வைகாசிமாதத்தே நடுப் பகலில் வழக்கம்போல் இவர் பூசைமுடித்து விருதுக ளுடன் சிவிகையூர்ந்து தம்மிருப்பிடம் செல்லலானர். அப்போது, திருக்களாஞ்சேரியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மறைஞானசம்பந்த சிவாசாரிய சுவாமிகள் ஒரு தெருவில் திண்ணையொன்றிலிருந்துகொண்டு தம் மாணவர்கட்குப் பாடம் போதித்துக் கொண்டிருந் தனர். அம்மாணவர்களுள் ஒருவர், தீக்ஷிதசுவாமிகள் செல்லும்படியினைக் குறித்துத் தெரிவிக்கலானர். உமாபதியாருக்குப் பக்குவமுதிர்வு அணுகியவேளை அதுவாகும். இது தெரிந்த ஸ்ரீ மறைஞானசம்பந்தர் பல்லக்கிலிருப்பார் செவியிற்படுமாறு "பகற்குருடு" என்று கூறுதலும் திருவருட்கிருபையினல் உமாபதி

சிவாசாரிய சுவாமிகட்கு மெய்ம்மைநிலை வெளிப்பட்டது. உடனே, முன்பு ஒருகால் ஆளுடைய பிள்ளையார் புரிந்தவிதமாக, உமாபதியார் பல்லக்கினின்றும் கீழேகுதித்து ஸ்ரீ மறைஞானசம்பந்தர் திருவடிகளில் நெடுமரம்போன்று வீழ்ந்து பணியலுற்றார். ஸ்ரீ மறைஞானசம்பந்தர், உமாபதியார்க்குப் பின்னும் முதிர்ச்சி விளைதற்பொருட்டு வீதிவழியே எழுந்து விரைந்து சென்றுகொண்டிருந்தனர். இந்நிகழ்ச்சி, ஆவணங்காட்டி ஓடிய சிவபெருமானாகிய முதியவரை ஆலாலசுந்தரராகிய ஆளுடைநம்பிகள் தொடர்ந்து ஓடியவாறு இருந்தது என்னலாம். இறுதியில், செங்குந்தர் வாழும் தெருவிலே செல்லலுற்ற ஸ்ரீ மறைஞானசம்பந்தர் பசித்துக் களைத்தார்போன்று, செங்குந்தரொருவர் வார்த்திட்ட கஞ்சியைக் கையேந்தி உண்ணலுற்றார். அப்போது, உடன் தொடர்ந்து வருகிற உமாபதியாரும் குருசீடபாவனை தோன்றுமாறு உச்சிட்டத்தை ஏற்றுப் புசித்தனர். உடனே, ஞானதீக்கை, உபதேசமாதியன நிகழ்ந்தன. அன்று தொட்டு ஸ்ரீ உமாபதியார், தம் ஞானதேசிகர்க்கு அருட்பணிவிடை புரிந்து வரலானார். ஞானதேசிகரும் தம் சீடர்க்கு எல்லாத் தகுதிகளையும் தந்தருளினர். ஞானாபிடேகம் பெற்றபின்னர் துவிதீய ஆசாரியராக விளங்கி வரலானார் நம் ஸ்ரீ உமாபதிசிவாசாரியார். தமது ஞானாசாரியர்பால் சித்தாந்த நுண்பொருள்கள் யாவற்றையும் நன்கு உணர்ந்துகொண்டு அநுபூதிச் செல்வராக விளங்கி வரலாயினர். இங்ஙனம் இருக்கையில் ஞானதேசிகர் சிவபரிபூரணமுற்றதும், வேதசிவாகம விதிப்படி பூசை, மாகேசுரபூசை சிறப்புறப்புரிந்து யாவரும் போற்ற எழுந்தருளியிருந்தார்.

ஆயினும், சுவாமிகளைப் பிரித்துவிட்ட தில்லை வாழந்தணர்கள், உமாபதியார் சபைக்குள் புகுந்து பூசைபுரிய விரும்பிலர். ஆதலால், நம் ஸ்ரீ உமாபதி சிவம் தில்லைக்குக் கீழ்புறமுள்ள ஒரு திருமடத்தே போயிருக்கலானார். கவுடநாட்டு மன்னன் மகனான சுவேதவர்மன் என்பான் தன்னைப் பீடிக்கலுற்ற வெண்குட்டம் நீங்குதற்பொருட்டுப் புலிக்கால் முனிவர் முதலானோர் ஆணைப்படிச் சிவகங்கையில் நீராடி உடல்நலம் எய்தப்பெற்றான். இந்தத் தில்லைப் பதியில், சுவேதவர்மன் இரண்யவர்மன் ஆயினன். இதற்கு அறிகுறியாக அக்கொற்றவன் குடியிருத்தற்குத் தில்லையின் கீழ்புறம் ஒருநகரினை அமைக்கலானான். அந்த நகரமே கொற்றவன்குடி எனப் பெயர் பூண்டது. இக் கொற்றவன்குடியில் உள்ள திருமடத்திலேதான் நம் சுவாமிகள் எழுந்தருளியிருந்து மாணவர்கட்கு ஞானோபதேசம் செய்து வருவாராயினர். மற்றும், தமிழ்ச் சிவஞானபோதத்துக்குச் சார்பு நூலாகச் சிவப்பிரகாசம் முதலான எட்டு ஞானநூல்கள் இயற்றியருளினர். இவற்றுள் ஒன்றே சங்கற்ப நிராகரணம் என்பது.

## கொடிக்கவி வரலாறு:

நமது சுவாமிகள், கொற்றவன்குடிப்பதியிலே எழுந்தருளியிருக்கும் நாளிலே, ஸ்ரீ நடராசப் பெருமானுக்கு உற்சவ துவஜாரோகணம் செய்யவேண்டி வந்தது. அன்று நம் சிவாசாரியசுவாமிகட்கு உரிய முறைநாள். ஆனால், தில்லைவாழந்தணர்கள் அவருக்குப் பதிலாக வேறொருவரை நியமித்துத் துவஜாரோகணத்தை நிறைவேற்றத் துணிந்தனர். ஆனால்

கொடிச்சீலை உயர ஏறாமல் கீழே விழுந்தது. வேத விதிப்படி பலமுறை முயன்றும் ஏற்றுக் கொடி ஏறவில்லை. யாவரும் துயருற்றனர். அப்போது தில்லையம்பலவன், 'நாம் கொற்றவன்குடியிலுள்ள எமது அடிமைத் தொண்டனாகிய உமாபதி சிவாசாரியருடைய பூசைப் பேடகத்தே எழுந்தருளி அவர் செய்யாநின்ற பூசனைகளை ஏற்றுவருகிறோம்; ஆதலின் அவரைக்கொண்டு துவஜாரோகணம் நடத்துங்கள்' என்று கூறியருளினர். உடனே, தங்கள் குற்றத்தை உணர்ந்த அந்தணர்கள் யாவரும், விருதுகளுடன் கொற்றவன்குடிக்குப் போந்து, நிகழ்ந்தனவற்றை விண்ணப்பித்தனர். சுவாமிகள், ஐயன் கருணையை எண்ணி எண்ணி உள்ளங்களிகூர்ந்து கோயிலுக்குப் போந்து செங்குந்தர்களிடம் இடபக்கொடியொன்று அளித்து வீதிவலம் செய்வித்தனர். அப்பால் ஆகம விதிப்படி யாவும் புரிந்து கொடிமரத்தருகே சென்று நின்று கொடிக்கவி எனப்படும் ஸ்ரீ பஞ்சாக்கரப் பாசுரத்தைத் திருவாய்மலர்ந்து அருளினர். உடனே கொடி ஏறியது. யாவரும் களிப்பெய்தினர். பின்னர் சுவாமிகள் கொடிக்கவிப் பாசுரவிளக்கம் அருளிச் செங்குந்தர்களை ஆசீர்வதித்து விடை ஈந்தருளினர். கொடிக்கவி நூல் தோன்றப்பட்ட வரலாறு இஃது என்பர் பெரியோர்.

## பெற்றான் முத்திபெற்ற முறைமை:

தில்லையெல்லையில் காவலாளனாக இருந்தவன் பெற்றான் சாம்பான் எனப்பட்டவன். இவன் பாவத்தால் இப்பிறப்புறினும் புண்ணியத்தால் பெருமானை உள்ளன்போடு நேசித்தவன். தில்லை மதிற்புறத்தே

நின்று சுவாமிதரிசனம் செய்து சிவனடியார்களை வழிபடுவது இவனது வழக்கம் ஆகும். நடராஜப் பெருமான் திருவருளால் அப்பெருமானுக்கு நிவேதனம் அமைத்தற்கு நாடோறும் விறகு கொடுக்கும் திருத்தொண்டு செய்யத்தக்கதெனத் துணிந்து, அதனை அன்புடன் ஆற்றிவரலாயினன். பெருமானும் இவன் தொண்டினை ஏற்றுக்கொண்டதற்கு அறிகுறியாக நாடோறும் இவற்கு இரண்டுபணம் அருளி வந்தனர். பெருமான் கட்டளையின்படி அப்பணத்தைக்கொண்டு குடும்பம் பேணி வந்தனன் சாம்பான். இங்ஙனம் சில நாட்கள் சென்றன. ஒருநாள் வழக்கம் போல் விறகு கட்டினைக் கீழைக்கோபுரவாயிலில் இறக்கிவைத்துவிட்டுச் சாம்பானார் நிற்கும்போது, பெருமானார் அந்தணக்கோலத்தோடு அணுகி, 'அன்ப! நாளைமுதல் நீ கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் திருமடத்துக்கும் விறகு கொடுத்து வருக' என்று கூறி மறைந்தருளினர். ஆணைபெற்ற பெற்றானார் அவ்வண்ணமே உமாபதியார் திருமடத்துக்கும் நாடோறும் விறகு கட்டு போட்டுவந்தனர். திருமடத்துக்கு விறகு கொடுத்துவரத் தொடங்கிய நாள் முதலாகவே முற்கூறப்பட்ட இரண்டு பணத் தொகையினை நாடோறும் நடராஜப்பெருமான் அச் சாம்பானார்க்கு உதவிவந்தனர் என்பதும் வரலாறும்.

இப்படி நிகழுகிறநாட்களிலே, பெத்தான் சாம்பானார்க்குப் பிறவித்துயரம் ஒழித்தருளவும், நாமெல்லோரும் அவர் தொண்டின் திறத்தைப் பேணும் படிச் செய்தருளவும் பெருமான் திருவுள்ளங்கொண்டருளினர். இதனால் பெருமழை பெய்தது. எங்கும் வெள்ளக்காடு. சாம்பானார் காடுசெல்லக்கூடவில்லை.

கவலைக்கடலுள் ஆழ்ந்தார். பெருமான், மெய்யடியார் கோலத்தோடு அப்பெத்தான்பக்கல் சென்று, விறகு கொடாத காரணத்தைக் கேட்டு, அன்றைய கட்டு களையும் சேர்த்து அடுத்தநாள் கோயிலுக்கும் திரு மடத்துக்கும் கொடுக்கக் கட்டளையிட்டு, வெள்ளம் தடைபுரியாதிருப்பதற்கு உபாயமும் சொல்லி,

அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டு - படியின்மிசைப்
பெத்தான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை.

என்ற திருப்பாசுரம் வரையப்பட்ட சீட்டு ஒன்றை அளித்து, அதனைத் திருமடத்தில் ஆசாரிய சுவாமிக ளிடம் அடைவிக்குமாறு பணித்து மறைந்தருளினர். சாம்பானூர் சாலவியப்பெய்தினர். தன் மனைவியாரிடம் நிகழ்ந்தன கூறி மகிழ்வுற்றிருந்தனர். இந்த நாளில் ஞானதேசிகரது திருமடத்தே மாகேசுரபூஜைக்குக் காலம் தாழ்த்தது. ஞானதேசிகர் நிகழ்ந்துவந்த செய்தி கேட்டு அறிந்தார். விறகு தரும் தொண்டு புரியும் அடியவர் வரின் தமக்குத் தெரிவிக்குமாறு அடியார்களிடம் திருவாய்மலர்ந்தருளினர்.

அம்பலவாணர் ஆணையிட்டு அருளியபடியே அடுத்தநாளில், சாம்பானூர் விறகு கட்டுகளைச் சுமந்து செல்ல விரும்பினூர். தமது வீட்டின் ஒருபுறத்தைப் பிரித்து முறித்துக் காய்ந்த விறகைக் கட்டுகளாகக் கட்டித் தம் மனைவியோடு சுமந்து வெள்ளம் வழி விடக் கோயிலுக்குச்சென்று போட்டுவிட்டுப் பின் னர்த் திருமடத்துக்கும் கொண்டுசென்று இறக்கி வைத்து நின்றூர். இவர் வரவு ஞான தேசிகர்க்குத்

தெரிவிக்கப்பட்டது. அடியார்களோடும் திருமடத்து வாயிலில் ஞானதேசிகர் எழுந்தருளினூர். பெத்தான் சாம்பானூர் பன்முறை பணிந்தெழுந்து, திருமுகத்தைத் தேசிகர் திருமுன்பு வைத்து வணங்கினர். ஆசாரியசுவாமிகள் வாசித்து மகிழ்ந்தார். சாம்பானூர் பக்குவ முதிர்வை ஓர்ந்து திருவருள் புரியலுற்ரூர். தக்ஷணமே முத்தி பயப்பது சத்தியோநிருவாண தீக்ஷை. அதனைத் திருவுளத்தே கொண்டு ஞான தேசிகர், பெற்ருன் சாம்பானூர்பால் திருநோக்கம் வைத்தருளினர். எழுந்தது ஒரு செழுஞ்சோதி. சாம் பானூர் பொய்யுடல் மறைந்தது. பெற்ருன் சாம்பானூர் நன்முத்தி பெற்ருர். யாவரும் அற்புதமெய்தி அடி பணிந்தனர். சாம்பானூர் மனைவியார் சாம்பினர். எவ் வளவு தேற்றியும் அரசனிடம் சென்று முறையிட்டுப் புலம்பினர். அரசன், சுவாமிகளை விசாரிக்குங் கருத்துடன் திருமடத்தை அணுகினன். நிகழ்ந்த யாவும் அரசற்கு எடுத்துரைக்கப்பட்டன. எனினும், மன்னன் ஞானதேசிகரை நோக்கி, 'இத் திருவருட்செயல் யாவர்க்கும் மெய்யெனப் புலப்படுமாறு செய்தருள வேண்டும்' என விண்ணப்பித்தான். ஞானதேசிகரும் அங்ஙனமே செய்தருளத் திருவுளம்கொண்டனர்.

இஃதிவ்வாறிருக்க, முன்பொருகாலத்து முனிவர் ஒருவர் காட்டிலே பரமனைநாடிக் கடுந்தவம் புரிந்து வந்தார். சிவபெருமான் அந்தணர் வடிவோடு அம் முனிவர்முன் தோன்றி வேண்டுவதென்ன என்ருர். முனிவன், அவரிடம், உள்ளொன்று கருதிப் புறம் பொன்றுகூறி வரம்வேண்டினன். உடனே, முனிவனை இன்னம் பக்குவம் அடைவித்தற்பொருட்டு முள்ளிச் செடியாகுமாறு சபித்தகன்ருர் பரமர். அவ்வாறே

இம்முனிவர், ஞானதேசிகர் திருமடத்துக் கோமுகை யருகில் முள்ளிச்செடியாய் முளைத்துக் கிடந்தனர். நாளும் திருமடத்தே திருச்சிற்றம்பல உடையவருக் கும் அம்பலவாணருக்கும் ஆட்டப்படும் அபிடேக நீரால் வளர்ந்து மாகேசுரபூசைக்குக் கறியமுதுக்குக் காயளித்து வந்தது அந்த முள்ளிச்செடி. அதனால், பரிபக்குவம் அடையப்பெற்றிருந்தது. அச்செடிக்கு முத்தியளித்து அரசன் அகமகிழச்செய்யத் திருவுளம் பற்றினர் சுவாமிகள்.

அரசனும் அனைவரும் காண ஆசாரியசுவாமிகள் அம்முள்ளிச்செடிமீது ஞானநோக்கம் புரிந்தருளினர். செழுஞ்சோதி எழுந்தது. முள்ளி மறைந்தது. முனிவர் தோன்றி வணங்கி அகன்றார். இம்முனிவர் முள்ளிமா முனீச்சுரர் எனப்பட்டார். அரசன் சுவாமிகளை அடி பணிந்து மன்னித்தருள நயந்தான். ஆசிர்வதிக்கப் பட்டான். அரசன், பெற்றான் சாம்பனார் மனைவியா ருக்கு உற்றவை தெற்றென விளக்கினன். விறகடி விளாகம் என்னும் ஊரினை அவ்வம்மைக்கு முற்றூட் டாக வழங்கினன். ஜீவதசையின்பின்னர், அந்தக் கிராமம் ஸ்ரீ உமாபதியார் ஆதினத்தே சேர்ப்பிக்கப் படவேண்டும் என்று கட்டளையிட்டான். பின்னர், சுவாமிகளிடம் விடைபெற்றுச் சென்றான் மன்னன். இதன்பிறகு, நம் சுவாமிகள், தம் சீடரொருவரைக் குடவுளுந்தளந்த முனிவராக்கி முத்திகொடுத்தரு ளினர் எனவும், கருடப்பறவையொன்றை அங்ஙனமே கருடமாமுனியாக்கி முத்திபெறச் செய்தருளினர் என வும் வரலாறுகள் கூறுகின்றன. இவ்வாறு நால்வர் பக்குவர்க்கு நல்முத்தி பயந்தருளிய பின்னர், தான் பெற்ற இன்பம் வையகமும் பெறவேண்டுமெனத்

திருவுளத்தேகொண்டு தம்மிடம் மூவகைத் தீக்கையும் சித்தாந்த உபதேசமும் பெற்ற ஸ்ரீ அருணமச்சிவாயர்க்கு ஒரு நன்னாளிலே ஞானபிடேகம் செய்து தமக்குத் துவிதீய ஆசாரியராக வைத்து அருளினர். ஸ்ரீ உமாபதியார் காலம் கி. பி. 1270 முதல் 1315 வரை என்பர்.

பின்னர், சில பகல் சென்று, தாம் பூசித்துவந்த ஆன்மார்த்த அழகிய சிற்றம்பலமுடையவரையும் அம்பலவாணரையும் என்றும் பூசித்துவரும் அதிகார மளித்து, அடைந்தார்க்கு அருளுபதேசஞ் செய்யும் முறைமையை விளக்கி, அந்நெறியில் ஸ்ரீ அருணமச்சிவாய தேவரை வைத்து, தமது கொற்றவன்குடியிலே சித்திரை மாதத்து அத்த நட்சத்திரத்திலே தமது திருவுரு ஜோதிர்மயமாக, அம்பலவாணர் திருவடி நீழலை அடைந்தருளினர் ஸ்ரீ உமாபதிதேவ நாயனுர்.

இதுகாறும் கூறியவாற்ருல் தேவசந்தானத்தார் திருவருள் மரபில்வந்த புறச்சந்தான குரவர் நால்வர் ஆவர் என நாம் அறியலாம். அவர்களாவார் ஸ்ரீ மெய்கண்டதேவர், ஸ்ரீ அருணந்திசிவம், ஸ்ரீ மறைஞான சம்பந்தர், ஸ்ரீ உமாபதிசிவம் எனப்படுபவர்களாவார். ஸ்ரீ உமாபதி சிவாசாரியாரால் நியமனம் பெற்றவர் ஸ்ரீ அருணமச்சிவாயர் ஆவர். இவர்பால் தீக்ஷை பெற்றுச் சிவஞானம் கைவரப்பெற்றவர் சித்தமூர்த்திகளாகிய ஸ்ரீ சிவப்பிரகாசர் ஆவர். ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசதேசிகர், ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகர் என்று பரவப் படுபவராகிய ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளைத் திருவாவடுதுறையிலே தாம் வகுத்த அறையிலே தமதாணைப் படி எழுந்தருளியிருந்து சிவஞானபோத உபதேச

சித்தாந்த சைவ பரம்பரை நிலவுலகில் நீடுமாறு ஆதீன முதல்வராக நியமித்தருளியுள்ளார்கள். இத் திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ நமசிவாய பரமாசாரிய மூர்த்திகளாலே நிலைநாட்டப்பெற்று விளங்கிவருகிறது. ஆதலின் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகர் ஆதீனம் எனவும் பெயர் வழங்கப்படும். ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனுர் முதல் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் இறுதியாக உள்ள ஆசாரிய பரம்பரை பூதபரம்பரை எனப்படும். முற்கூறிய தேவ பரம்பரையும் இப்பூதபரம்பரையும் உபதேசபரம்பரை என்று சிறப்புறக் கொள்ளப்படும். மேல் விளங்கி வருவது அபிஷேக பரம்பரை ஆகும்.

இங்குக் கூறிய இவற்ருல் ஸ்ரீகண்டசிவம் திரு அருள் சுரந்தருளிய ஞான வெள்ளமே, நம்மனேர் தவப்பயனுல் திருவாவடுதுறை ஆதீனத்தே பெருகி, அடைவாரைப் புனிதமுறுவித்துப் போற்றிவருகிற தென நாம் அறிதல் தக்கது.

சங்கற்ப நிராகரணம் :

மெய்கண்ட சாத்திர நூல்கள் பதினன்காகும். அவற்றுள் ஸ்ரீ உமாபதிதேவநாயனுர் அருளிச்செய்தவை எட்டு நூல்கள் ஆகும். அவை சிவப்பிரகாசம் - திருவருட்பயன் — வினவெண்பா — போற்றிப்பஃறெடை - கொடிக்கவி - நெஞ்சுவிடுதூது - உண்மை நெறிவிளக்கம் - சங்கற்பநிராகரணம் என்பனவாம். இவை சித்தாந்த அஷ்டகம் எனவும் பெயர்பெறும். இந்த எட்டு நூல்களையும் ஐயந்திரிபற ஓதி உணர்பவர்கள் சித்தாந்த சைவநெறியினை நன்கு தெளியப் பெற்றவர்களாவார். ஒருவர், சங்கற்பநிராகரணநூலை

முற்றக்கற்றுச் சமயபேதங்களையும் சித்தாந்த நெறியையும் அறிந்து, அந்த நன்னெறியின் உண்மைகளை உண்மைநெறி விளக்க நூலை ஓதுதலால் உணர்ந்து, பிறகு நெஞ்சிலே ஞானாசாரியரை நண்ணும் நாட்டத்தினை நெஞ்சுவிடுதூது நூலால் அடைந்து, அப்பால் ஆசாரியர் கற்பித்தருளும் சித்தாந்த நெறி ஒன்றையே கடைப்பிடித் தொழுகுவதெனக் கொடி கட்டித் துணிதலைக் கொடிக்கவி நூலறிவாற்கொண்டு, அங்ஙனம் தனக்கு நன்னெறிகாட்டியும் நிறுத்தியும் உதவவல்ல தேசிகரைச் சிவமெனவே போற்றும் பண்பினைப் போற்றிப்பஃறொடை நூலைப் படிப்பதனால் புரிந்து, அவ்வாசான் அருளால் தனது ஐயப்பாடுகளையெல்லாம் கேட்டுத் தெளிதலை வினாவெண்பா நூல் கற்றலால் எய்தி, இதன் பின்னர் யாவும் திருவருட்செயலால் நிகழ்வனவே என்ற துணிவு தோன்றி நிலையுறுதலை திருவருட்பயன் நூலினைப் பயின்று தோய்தலால் பெற்று, அம்முதிர்வினால் முடிவில் சிவப்பிரகாசத்தே கலந்து நிற்றலாகிய பேரின்பவாழ்வினைச் சிவப்பிரகாச நூலினாற் பயனாகக் கொள்ளல்கூடும் என்பதை மேலே காட்டப்பெற்ற இந்த எட்டுநூல்களின் வரிசையால் தெரியலாகும். எனவே, கேசாதி பாதமுறையாகச் சித்தாந்த அஷ்டக நூல்கள் கிடக்கின்றன என்னல் தகும்.

இவற்றில் சங்கற்பநிராகரணம் என்னும் இந்நூல், பல மதவாதியரின் சங்கற்பமும் அவற்றிற்கு இந்நூலாசிரியர் கூறும் நிராகரணமும் கொண்டு விளங்குவதாகும். இந்நூலை இவ்வாசிரியர் கி. பி. 1313-ல் இயற்றியருளினர். இதுவே இவ்வாசிரியர் இயற்றியருளிய எட்டு நூல்களினும் இறுதியதாகும். இந்த

நூலினிடத்தே ஆசிரியர் புறச்சமயச் சார்பாக மாயா வாதி - ஐக்கியவாதி ஆகிய இருதிறத்தர் கொள்கைகளைக் கூறியும் மறுத்தும், அகச்சமயச் சார்பில் பாடாணவாதி - பேதவாதி - சிவசமவாதி - சங்கிராந்த வாதி - ஈசுவர அவிகாரவாதி - சிவாத்துவிதவாதி என்போர் வாதம் கூறியும் மறுத்தும் இறுதியில் சைவவாதியர் சங்கற்பம்காட்டி மறுத்தும் சித்தாந்தம் செய்கின்றாராவர்.

'மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்' என்பது தமிழ்மூதாட்டியார் தந்த முதுமொழி. அவர் அவரும் தத்தம் மனம்போன வழியெல்லாம் சரியெனக் கொண்டொழுகுதல் தீதுபயக்கும். அதாவது பிறப்பை வருவிக்கும் என்பதாம். ஆதலால் ஞானவான்கள் தெளிந்து கூறியுள்ள வேதாகம உடம்பாடான சித்தாந்தநெறி இன்னதெனத்தெரிந்து அவ்வழிச்செல்லுதலே பிறவியறுக்கும் நன்மருந்தாம். ஆகவே, தருக்க முறையிலே நியாயம் உணர்த்தும் நூல்களை ஓதி நாம் உண்மை தெளியவேண்டியுளது. இந்தவகையில் இந்நூல் பெரிதும் துணைபுரிவதாகும். புறச்சமயக் கொள்கைகளையும், அகச்சமயக் கொள்கைகளையும் எடுத்துக்கூறி அவற்றின் குறைபாடு எடுத்துக்காட்டி உண்மைகாணும் முறையில் ஆராய்வு கூறிச் சித்தாந்தம் செய்கிறது இந்நூல். காய்தல் உவத்தலின்றி இந்நூலினைக் கற்றுத் தெளிவோர் மெய்ப்பொருள் கண்டு திகழ்வர் என்பது உண்மை. இந்நூலிற்குப் பழைய உரை ஒன்றுளது. இது கி - பி. 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியது என்பர். அஃதியற்றினார் இன்னாரெனத் துணிந்து கூறற்கியன்றிலது.

இந்தச் சார்புக்கட்டுரை இந்த ஆதீனத்துப் பழைய உரையினைத்தழுவி, இந்நாளில் கற்போர்க்கு எளிதில் விளங்கும்வகையில் வியாச முறையில் தரப்பட்டுள்ளது. இந்த நூலில் உள்ள செய்யுள்கள் ஆசிரியப்பாக்கள் ஆகும். இறுதியில் ஒரு வெண்பா உள்ளது. எல்லாம்கூடி இந்நூற்பாக்கள் மொத்தம் பதினொன்குதான். எனினும், படிப்போர்க்குத் தனித் தனியாகச் சங்கற்பச்செய்யுளும் நிராகரணச்செய்யுளும் இன்னின்னவை என விளங்குதற்பொருட்டு இப்பதிப்பில் தனித்தனிச் செய்யுள் எண்கள் தரப்பட்டுள. படிப்போர்க்குப் பாட்டு எளிதாக இருக்கச் செய்யக் கருதிச் சந்திகள் பிரித்துத் தரப்பட்டிருத்தல் காணலாம். சுருக்கமாகச் சொல்லின், இந்தநூலை ஓதுதலால் நாம், மாயாவாதம் முதலாகச் சைவவாதம் இறுதியாக உள்ள ஒன்பது சமயங்களின் கொள்கைகளையும், சித்தாந்தத் தெளிவையும் அறியலாம்.

முடிவுரை :

பிறப்பினை நன்னெறியிற்படுத்திச் சிறப்படையச் செய்ய வேண்டுவதே நம் கடமை ஆகும். ஆதலால், இச்சித்தாந்த சாத்திர நூல்களை ஓதவேண்டுவது வேண்டுவதொரு செயலாகும். நூல்களின் உரையினை அறிதல் அவசியமானது. இத்தகைய அபரஞான வாய்ப்பின் பின்னர், ஞானாசாரியரை அடைந்து அவரது திருவருளுக்கிலக்காகி ஞான உபதேசம் பெறவேண்டும். பின்னர், அந்நெறிநிற்றலொன்றே அமையும். இதுவே பதிஞானவாய்ப்பு எனப்படும். இதுவே திருவருட் பயனும் ஆம். இவ்வாழ்வு முறையினை ஸ்ரீ உமாபதிதேவ நாயனருடைய வரலாறு

நமக்கு நன்கு தெரிந்துணரவைக்கிறது என்னலாம். ஆதலின், இத்தகைய மெய்ஞ்ஞானப் பனுவல்களை ஓதியும், உபதேசம் பெற்றும், அடங்கியொழுகியும் உய்திபெறுவோமாக!

ஸ்ரீ உமாபதிதேவநாயனார் திருவடி வாழ்க.

தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.

உ
சிவமயம்

## ஸ்ரீ உமாபதிதேவ நாயனார் துதி

அறுசீர்விருத்தம்

இங்கற்ப முங்குறைவின் றுகமங்கள்
எடுத்துரைசெய் சித்தாந் தத்தைச்
சங்கற்ப நிராகரணம் செயுமுகத்தாற்
சாதித்தோன் தில்லை சார்ந்தே
நங்கர்ப்ப வாசமெலாம் நாசஞ்செய்
நோக்குடையோன் குரவர்ச் செம்மல்
துங்கப்பொற் பதமுதவும் உமாபதிதாள்
சுமந்தின்பம் பொருந்தி வாழ்வாம்.

—தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.

## மெய்கண்ட சாத்திரம் பதினான்கு

உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.



ஸ்ரீ உமாபதிதேவ நாயனர்

T.N. Jaganathan

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதிதேவநாயனுர்

அருளிச்செய்த

# சங்கற்பநிராகரணம்

## பொழிப்பும் - விளக்கமும்

---

### செய்யுள்—1.

காப்பு

**பிள்ளையாரை வழிபடல்**

**நேரிசை ஆசிரியப்பா**

திருந்திய அரும்தவம் பொருந்து பல்முனிவர்
கமையாக் காதல் அமையாது பழிச்சும்
நிகர்இல் செக்கர்ப் புகர்முகத்(து) எழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெரும் கோட்டுத்
தழைசெவி மழைமதம் புழைநெடும் தடக்கை
வாள்தரும் மும்மை நாட்டம் நால்வாய்ப்
பாசம் அங்குசம் தேசுஉறும் எயிறுஒண்
கனிஇவை தாங்கும் புனித நால்கரத்(து)
அங்கதம் கடகம் பொங்குஇழை ஆரம்
நிறைமணிச் சுடிகைக் கறைஅணல் கட்செவி
கொண்ட திண்பெரும் பண்டிக் குறும்தாள்
களிறுதன் இருகழல் கருதா
வெளிறுஉறு துயரம் வீட்டினம் பெரிதே.

## பொழிப்பு

ஒழுங்குபட்ட அருமையான தவத்துறையிலே பொருந்தியுள்ள பல முனிவர்களும் எக்காலத்தும் நிரம்புதலடையாத பத்தியோடும் ஓய்வில்லாமல் தோத்திரம் செய்கின்ற—

சமானமில்லாத சிவந்த வானம்போன்ற புள்ளியுடைய திருமுகத்திலே உதயமாகிய குழவிவெண் திங்களைப்போன்ற ஒற்றையான பெரிய தந்தத்தினையும்—

தழைந்த செவிகள் இரண்டையும்—

மழையைப் போலச் சொரிந்துகொண்டேயிருக்கும் மூன்று மதத்தினையும்—

இரண்டு துவாரங்களோடும் கூடிய நீளமான பெரிய துதிக்கையினையும்—

(சந்திரன் சூரியன் அக்கினி என்கிற) ஒளியை வெளிவிடுகிற மூன்று விழிகளையும்—

தொங்கிக்கொண்டிருக்கின்ற வாயினையும்—

பாசக்கயிற்றையும், தோட்டியினையும், அழகு தங்கிய தந்தத்தினையும், ஒப்பற்ற மாங்கனியினையும் தாங்கியுள்ள பரிசுத்தமான நான்கு கரத்தினையும்—

வளையினைத் தரித்த தோளினையும், கங்கணம் தங்கிய கரத்தினையும், மிகுதியான ஆபரணங்களையும் முத்துமாலையினையும் கொண்டுநிறைந்த மார்பினையும்—

மாணிக்க முடியோடு கருமையான கண்டத்தைப் பெற்ற பாம்பினைக் கச்சாகக் கட்டிய வலிய பெரும் புகழினை உடைய வயிற்றினையும்—

*குட்டையான பாதத்தினையும் உடைய—*

*பிரணவ ரூபியாகிய யானையினது இரண்டு பாதங்களாகிய தாமரையை முதற்கண் நினைத்து—*

*அறிவின்மையால் உண்டாகிய துன்பங்களைப் பெரிதென மதியாமல் முற்றும் நீக்கினோம்.*

## விளக்கம்

ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள், சங்கற்ப நிராகரணம் என்னும் பெயருள்ள இந்த நூலை இயற்றத்தொடங்கி முதல்முதலில் விநாயகரை இச்செய்யுளால் வழிபடுகின்றார். ஏடுத்த காரியம் இடையூறு இல்லாமல் முடிதற்பொருட்டுப் பிள்ளையாரை வழிபடுதல் சைவசமயத்தார் சம்பிரதாயமாகும். எந்தக் காரியத்தையும் யாவரும் அறிவின் துணைகொண்டு தான் தொடங்குவர். "அறிவிலார் மன்னும் அறங்கள் வலி இல" என்றும், "அறிவுடையார் எல்லாம் உடையர்" என்றும் பெரியோர்கள் கூறியுள்ள அநுபவ மொழிகள் இக்கருத்தை வலியுறுத்தும். கணபதிக்கடவுள் அறிவின் வண்ணத்தரே ஆதலால், துன்ப நீக்கத்துக்கும், இன்ப ஆக்கத்துக்கும் வழிபடற்பாலராக உள்ளார் என நாம் தெரியலாம். எனவே, அறிவைப் போற்றுதலையே ஆனைமுகனைப் போற்றுதலாகக் கூறப்படுகின்றதென்னலாம். தன் சிற்றறிவையும் சுட்டறிவையும் பேரறிவின்பால் ஒப்படைத்துவிடுவதே ஆனைமுகனுக்கு வந்தனையும் நிவேதனமும் செய்தல் ஆகும். இதனால் பேரறிவு, துணையாய்நின்று எடுத்தசெயல் இனிது நிறைவேற உதவும் என்பது உண்மையாம். "உணர்வுடையார்கட்கு

உலகமும் தோன்றும், உணர்வுடையார்கட்கு உறுதுய ரில்லை, உணர்வுடையார்கள் உணர்ந்த அக்காலம், உணர்வுடையார்கள் உணர்ந்துகண்டாரே'' என்பது இக்கருத்துக்குக் காப்பளிக்கும் திறத்ததாகிய சம்பிர தாயம் என்கிற தலைப்பின்கீழுள்ள திருமந்திரப் பாடலாகும்.

சம்பிரதாயம் என்றாலும் பழமையான முறை என்றாலும் ஒன்றே. அதாவது ஞானப் பெருந் தகையோராகிய ஆசாரியர்கள் அநுட்டித்துக் காட்டி யுள்ள உபாயத்தையே நாமும் சிறந்ததாகப்பற்றி ஒழுகுதலாம். இதனை, "ஞானப் பெருந்தகவோர் சம்பிரதாயம் ஒன்றிச் சதிர்க்கும்நிலை சார்ந்தனமே'' என்பார் பிறரும். இந்தச் சம்பிரதாயமுறையிலே இக் காப்புச் செய்யுளை நம் நாயனார் முதற்கண் அருளிச் செய்வாராயினர். ஸ்ரீ மெய்கண்டார் முதலிய ஞான சாரியர்கள், தத்தம் நூல் தொடக்கத்திலே இந்தச் சம்பிரதாய சதாசாரத்தைக் கடைப்பிடித்து விநாயகர் வணக்கம் கூறியிருத்தல் நாம் அறியத்தக்க சிறந்த நெறியாம்.

திருந்திய அரும்தவம் பொருந்து பல் முனிவர்:

விநாயகரை வழிபட்டுக் காட்டிய சம்பிரதாயச் செந்நெறியர் எத்தகையவர் என்பதை இவ்வரி உணர்த்துகிறது. இவர்கள் திருந்தியதும் அருமை யுடையதுமான சிவபுண்ணியப் பயன் பொருந்தப் பெற்றவராவர். தம்முடைய அறிவெல்லாம் இறைவ னுடைய முற்றறிவிலே அடங்கப்பெற்றுத் தம்மு டைய தொழிலெல்லாம் இறைபணியாகக் கொள்ளப்

பெற்றவர்கட்கு இனித் திருந்தவேண்டும் தன்மை யில்லையாதலால் திருந்திய என்றார். அதாவது, நனவு நிலையிலே இருக்கும்போதே அறிவுக்கு அப்பாற்பட்ட தூய திருவருள் வெளியுள்ளே அடங்கி நிற்கும் பேறுடையார் இவர்களாதலால் இவ்வாறு கூறினார். இவர்களை, "அறனறிந்து மூத்த அறிவுடையார்" என்று திருக்குறள் குறிக்கும். சாக்கிரத்தே அதீதத் தைப் பூண்டோர் என்றுரைக்கும் ஞானநூல்கள். இத்தகைய திருந்தியதன்மை வாய்க்கப்பெறுதல் எளி தன்று. அஃது அருந்தவத்தால் அமைவது ஆகும். "தவமும் தவமுடையார்க்காகும்" என்பது நீதிநூல். இத்தகைய தவம், யாவரும் புரிதற்கியலாத அருமைப் பாடும், புரியப்பெற்றார்க்கு எய்தற்கரிய அரிய பேற் றினை நல்கும் திறமும்பெற்றது; ஆதலால், அருந்தவம் எனப்பட்டது.

ஒருவர் தவம்புரிய, அப்பயன் வேறொருவருக்குப் போய்ச் சேருதல் ஒருபோதும் நியதியன்று. செய்த அளவுக்குப் பயனிருத்தல் ஒருதலையாதலால் பொருந் தும் என்றார். இங்ஙனம் திருந்தியதும், அருமையுடை யதும் ஆகிய புண்ணியம் பொருந்தப் பெற்றோரெல் லாரும் ஒருநெறியே பற்றிநிற்பார் என்பது நமக்குப் படுதற்பொருட்டே பல்முனிவர் என்றுள்ளார். பலரும் செல்லும் நெறி நாமும் செல்லத்தக்கது என்பது உணர்த்தி நிற்பது பல் என்னும் சொல்.

சந்தான குரவர்களும், அவரை ஒத்தாரும் முனிவர் எனத் தக்காராவர். ஏனெனில், இவர்களது சிந்தையும் நாட்டமும் எப்போதும் சிவத்தையே பேணித் தோய்ந்திருக்கும் தன்மையவாம். "சநகாதி

முனீந்திரேப்யஸ் திரிபதார்த்தார்த்த சம்மிதம்" என்ற இடத்தும் முனிவர் என்னும் பதம் பிரயோகிக்கப்பட்டிருத்தல் காணலாம். "வையகத்து ஆகமம் வேதம் மற்றுமுள்ள நூலை எல்லாம் உணர்ந்து இறைவன் கழலே நோக்கும் நோன்மை அருந்தவர்" என்று ஸ்ரீ அருணந்தியார் கூறுதலும் காணத்தக்கதாம். எனவே, இத்தகையோர் சைவநாதர் ஆவர் என்க. ஆதலால், இத்தகையோர் சித்தாந்த சைவப் பொருண்மையை உணர்ந்த தவமுதிர்ச்சியுடையோர் ஆவர்.

**கமையாக் காதல் அமையாது பழிச்சும்:**

சிவஞானமாகிய மெய்த்தவத்தினை உடையார் தன்மை இதன் முன்னர் கூறப்பட்டது. இனி, அவர்களுடைய இச்சையும், அறிவும், தொழிலும் எத்தகையவாயிருக்குமென்பதை இவ்வரியிறால் ஆசிரியர் உணர்த்துகின்றாராவர். இவர்களுடைய அறிவானது அயராதிருக்கும் இயல்பினை உடையதாகும். அதாவது நிரம்புதல் இல்லாத தன்மையது எனப்படும். ஒன்றின் நிரம்புதல் அதன்கண் செய்யப்படும் தொழிலை நிறுத்திவிடும். ஆதலால் நிரம்பாமையே மேல்மேலும் அநுபவத்தை நிகழ்ந்துகொண்டே இருக்கச்செய்ய வல்லதாகும். சுருங்க உரைப்பின் மறவாமையே அயராமையாம். அதுவே கமையாமை ஆம். கமம் என்பது நிறைவு. அஃதின்மையே கமையாமையாயிற்று. பதினோராம் சூத்திரத்து "அயரா" என்ற சொற்குப் பொருள் விரிக்கப்பட்டிருப்பதை ஈண்டைக்கு ஒப்புக்கண்டு உணர்தல் நன்றும். இதனைத் தீவிரதர நிலைமை என்றும் இசைக்கலாம். முத்தி நிலையிலும் நிகழ்ந்துகொண்டே இருப்பதே கமையா

என்று இங்குக் குறிக்கப்பட்டது. இதனால் முனிவர்களுடைய அறிவின்செயல் உணர்த்தப்பட்டதென்க.

அன்பு, பத்தி, காதல், இச்சை என்பன ஒரு பொருட் சொற்களாம். மேற்கூறப்பட்ட முனிவர்கட்கு அறிவின் தொழிலால் அயராமை நிகழ்வது போலவே, இச்சையின் தொழிலால் அன்பு செய்யும் தொழில் நிகழ்ந்துகொண்டே இருக்கும். அதாவது, அறவே உலகப்பற்று இன்றி முழுவதும் கடவுள் பற்றே இருத்தலாம். இதுவே, இங்குக் காதல் எனப்பட்டது. யாண்டும் நிகழ்வதாகிய அயரா அன்பினை மேலேசொல்லப்பட்டமுனிவர்கள் உடையர் என்பது கருத்தாம்.

இனி, செயலின் தொழிலால் இவர்கள்பால் நிகழ்வது அமையாது பழிச்சுதலே ஆம். இதற்குப் பெத்தம், முத்தி என்னும் இருவகை நிலையும் உரியவாகலின் அமையாது எனப்பட்டது. அமைவு என்பது ஓய்வாம். முத்திநிலையினும் சிவத்தின் அன்பால் ஆன்மாவின் அன்பு நிகழ அதுகாரணமாகப் பழிச்சுதல் எனப்படும் அரன்கழல் செல்லுதல் நிகழும். இதனால், அயராமைபற்றி அன்பும், அன்புபற்றி அமையாது பழிச்சுதலும் பெத்தத்தும் நிகழ்தல் தெளியலாம். ஆகவே, விநாயகராகிய ஒரு பொருளினிடத்திலே இம் முனிவர்களுடைய அறிவும் இச்சையும் செயலும் உடனாய் நிகழ்வது இவ்வரியினால் உணர்த்தப்பட்டதென்க. மேலும் முன்வரியில் பல்முனிவர் எனப்பட்டமையால், "அன்பரொடு மரீஇ" இவர்கள் எப்போதும் இருக்குமியல்பும் உணர்த்தப்பட்ட தென்னலாம். இங்ஙனம் கூறியமையால் ஊறி ஊறி உருகும்

அன்பினை உடையராய் உள்ளத்தே விமலர் உறையப் பெற்றவராய் இம்முனிவர்கள் விநாயகரைப் பழிச்சுதல் கூறப்பட்டது. இதனால், விநாயகரை, நாமும் ஆரா பேரன்புடனே அவரை உள்ளத்தே குடியாகவைத்துப் பரவுதல் வேண்டுமென்பது புலப்படுத்தப்பட்டது. இதன்மேல், விநாயகரது உருவ இலக்கணம் கூறப் படுதல் காணலாம்.

நிகர் இல் செக்கர் புகர் முகத்து எழுந்த
புனிறு வெண்பிறை தனி பெரும் கோடு...களிறு:

விநாயகர் செம்மையான திருமேனி நிறம் உடை யவர். தந்தையின் சொத்து மைந்தர்க்கு உரிமை யாதல்போலத் தந்தையாராகிய சிவபெருமானுடைய நிறமே இவர்க்கும் உரியதாயிற்று. செந்நிறம், ஒருவ னுக்கு விரைந்து காட்சிக்கெளிதாப் புலனும் இயல்பு உடையது. கருத்துக்கும் காட்சிக்கும் இந்நிறம் செம்மைபுரிவது. ஆனதுபற்றியே, அபாய அறிவிப் புக்கும், அதனை விலக்கற்கும் செந்நிறமே குறியாகக் கொள்ளப்பெற்றது. இங்கும் அபாயத்தை விலக்கற் கும் உபாயத்தை இலக்கற்கும் இந்நிறம் கொள்ளப் படுவதாயிற்று. ஏனைய நிறங்கள் இச்செந்நிறத்துக் குள்ள இயல்பு பெற்றிலவாதலின் நிகர் இல் செக்கர் என்றார். "செவ்வான் அன்னமேனி" என இந்நிறப் பண்பு வேறு நூல்களிலும் கூறப்படுதல் காணலாம். (முருகப்பிரானும் இந்தச் செந்நிறமே உடையன் என்று நூல்கள் கூறும்.)

முகத்திலே புள்ளியுடைமையே யானையின் சிறந்த இலக்கணமாகும் என்பர். பெரிய கோலம் போடு பவர்கள் அதற்கு ஆதாரமாக ஆங்காங்கு முதற்கண்

புள்ளிகளை அமைத்துப் பின்னர் அவற்றை இணைத்து உருவாக்குவர். எனவே புள்ளியானது காரணமாக நின்று காரியத்துக்கு முதன்மையாகிறது. அவ்வாறே பிரணவத் திருமேனியும், திருமுகமும் உடைய இப் பெம்மான், ஏனைய தத்துவங்கட்கெல்லாம் காரணமாக நிற்கும் இயல்பினராதலாலும், பிரணவத்திலிருந்து எல்லாத் தத்துவங்களும் விளைதலைப் புள்ளிகளைக் கொண்ட முகத்தால் உணர்த்துபவராதலாலும் புகர் முகத்து எழுந்த என்றார். அணுக்கள் அண்டமாம் இயல்பு இங்குச் சிந்திக்கத் தகுவதாம்.

செவ்வொளியுடன் விளங்கும் மேற்றிசை வானத்திலே மாலைப்போதிலே வெள்ளை நிறமுள்ள பிறைச் சந்திரன் உதயமாகி ஒளிர்வதுபோல உள்ளது விநாயகரது செவ்விய முகத்திலே ஒரு மருங்கில் உள்ள வெண்மையான வளைந்த தந்தம். இது இடது மருங்கில் உள்ளது; முகத்திலிருந்து பிரியாமல் இருப்பது; ஒடிக்கப்படாதது. (மற்றொன்று வலத் திருப்பது; ஒடிக்கப்பட்டது.) ஆனதுபற்றியே "ஒரு கோட்டன்" என்றார் சித்தியார் நூலில். இதனை "வெண்ணிலாக் கற்றைகான்று விளங்கும் ஓர் பிறைக் கோடு" என்பர் பிறநூலினர். மற்றும் கல்லாட நூலில் இக்கொம்பு, "பெருமலைச் சென்னியில் சிறுமதி கிடந்தென" எனவும் கூறப்படுகின்றது. இக்கொம்பின் வளமை இளமைத்திங்கள் போலுள்ளது. இந்தக் கொம்பு பதிஞான சொரூபமானது. ஆதலின் இம் மருப்பை, "கரணம், மாபுலன் ஆணவ கான்மியம் மரணம் ஆகத் திகழ்ந்த மருப்பு" என்பர் அருணகிரிப் புராணமுரைத்தார். இந்தக் கருத்துக்களை எல்லாம் புனிறு வெண் பிறை தனி பெரும் கோடு என்ற

சொற்றொடர்கள் தெரிவிப்பனவாம். இவ்விருவரிக ளால், அபாயம் தவிர்த்து, ஆதாரமாய் நின்று உதவி, பதிஞானம் ஊட்ட வல்லவன் விநாயகன் என்னலாம்.

தழை செவி மழை மதம் புழை நெடும் தட கை...களிறு:

விநாயகர் தழைந்த இரு செவிகளை உடையவர். இப்பெரிய பரந்த தழைந்த செவிகள் அசையும்போ தெல்லாம் காற்றெழும். காற்று, தீபத்தை அவிக்கும்; நெருப்பைப் பெருக்கும். ஆன்மாக்களிடம் சிற்றுணர் வெனப்படும் விளக்குள்ளது. இவ்விளக்கு அவிக்கப் படவேண்டும்; பேருணர்வு ஆக்கப்படவேண்டும். இதற்கேற்ப, இரு செவிகளும், உயிர்களின் பாசவெம் மையைத் தணித்தல் செய்து, நேச உண்மையை மூட்டுகின்றனவாமென்க. தாம் தழைந்திருப்பதோ டல்லாமல், உயிர்களையும் பாச நீங்கித் தழையச்செய் யும் தன்மை பெற்றிருத்தலின் தழை செவி என்றார்.

சாதாரணக் களிறு மூன்று மதங்களை உடையது. அவை கன்னமதமும் கபோலமதமும் கோசமதமும் ஆகும். விநாயகருக்கு யானையுறுப்புக் கழுத்துக்கு மேலேதான் உள்ளது. ஆதலால் மும்மதமும் மழை போலப் பொழிகின்றதென்று கூறுதல் உபசரணை ஆகும். விநாயகருக்கு இருமதமே உளது. இவற்றை ஞானமெனவும், கருணை எனவும் பெரியோர் கூறுவர். "ஞானமதம்" எனவும், "கருணைபொழி மும்மதம்" எனவும் பாடல்கள் உள்ளன. ஞானமாகக்கொள் ளின் அபரஞான பரஞானங்களாகக் கருதப்படும். கருணையாகக்கொள்ளின் அறக்கருணை மறக்கருணை எனக் கொள்ளப்படும். "ஐந்தெழுத்தின் பேதமாகிய நாலெழுத்து மூன்றெழுத்தினையும் ஐந்தெழுத்தெனவே

வழங்குவதுபோல. மும்மதத்தின் பேதமாகிய இருமத மும் மும்மதம் எனப்படும்" என்ற சிவஞானசித்தியா ருரை இங்குப் பார்த்தல் பொருந்தும். இனி. விநாயகர். தம்பால் இருமதமே இருத்தலை மும்மதமும் இருத்த லாகக் காட்டும்பொருட்டு வள்ளிநாச்சியாருக்கும் முருகப்பிரானுக்கும் திருமணம் நிகழ்த்தவேண்டிய இடத்து முழு யானையாகச் சென்று புலப்படுத்தினர் என்பர். அங்ஙனமாயகாலை மும்மதமும் உண்டெனக் கொள்ளல் பொருந்துவதாம். இதனை, திருத்தணிகைப் புராணத்து "மும்மதத்தனென்றொரு பெயர்" என்ற பாடலால் தெரியலாம். இவ்வகையான சிக்கல்களுக்கு நம்மை ஆளாக்காமல் இந்நூலாசிரியர் வெறுமனே மழைமதம் என்று கூறியுள்ளார். "கெடுப்பதும், கெட் டார்க்குச் சார்வாய் மற்றுஆங்கே எடுப்பதும்" மழை யின் இயல்பு என்பது திருக்குறளுரை. அவ்வாறே, யாவரையும் அவரவர் பெற்றிக்கேற்ப அறக்கருணை யாலும், மறக்கருணையாலும் அடியராக்கும் தன்மையர் விநாயகரென்பது தெளியலாம். பொதுவாகக் கூறு மிடத்து மழையானது நலம்புரிவதேயாகும். அங்ங னமே விநாயகரும் கருணைபுரிபவர் என்று கொள்க.

விநாயகருக்குத் திருக்கரங்கள் ஐந்தாம். இதனால் ஐங்கரன் என்றும் கூறப்படுவார். இந்த ஐந்து கைகளில் ஒன்று தும்பிக்கை. இது இரு துவாரம் உடையது. கையாகவும் நாசியாகவும் பயன்படுவது. ஏனைய கரங்களைக்காட்டிலும் நீண்டிருப்பது. எங் கிருப்பவரையும் துழாவி வளைத்துக்கொள்ளும் பெரு மையும் உடையது. இவை எல்லாம் அடங்குமாறு புழை நெடும் தடக்கை என்றுரைக்கப்பட்டுள்ளது. புழை என்ற சொல்லால் அத்துவித உண்மையும்

நெடும் தடக்கை என்பதால் யாவரையும் ஆட்படுத்தும் திறமையும் இப்பெருமான் பெற்றிருத்தல் கூறப்பட்டுளதென்க. ஏனைய நான்கு கரங்களைப்பற்றிய செய்திகள் பின்னர்க் கூறப்படும்.

வாள் தரும் மும்மை நாட்டம்...களிறு :

ஒளிகள் மூன்றும். அவை சந்திரன் சூரியன் அக்கினி என்பன ஆம். சந்திரனால் உயிர்வர்க்கம் பல்குகிறது. சூரியனால் அவை காக்கப்படுகின்றன. அக்கினியால் பதப்படுத்துதலாகிற அழிவு நிகழ்த்தப் படுகின்றது. எனவே, படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களும் முச்சுடர்களால் நிகழ்கின்றன எனப் பொதுப்பட உணரலாம். இம்மூன்றொளியும் தாம் இல்லாக்காலை மறைத்தலைச் செய்யும். உளவாங்காலை விளக்குதலைச் செய்யும். பின்னே உள்ள இரு தொழிற்கும் ஏற்பவே, முன்னே உள்ள முத்தொழில்கள் நிகழ்கின்றன என்பது உய்த்துணரின் புலப்படும். இவ்வைந்து தொழில்களும் ஆன்மாவுக்கு நன்மைதரும் இயல்பினவே. நலத்தைத்தருவதே இம் முத்தொழில்களின் நாட்டம் ஆகும். "இறைவற்குக் கண் மூன்றும் சுடர்" என்று வேறு நூல்கள் கூறும். ஆதலின், வாள்தரும் மும்மைநாட்டம் உடைமையின் விநாயகர் முத்தொழிலாற்றிக் கருணைபுரிபவர் என்று தெரியலாம்.

நால்வாய்...களிறு :

விநாயகருடைய வாய் பெரிது; தொங்கிக்கொண்டிருப்பது. தேங்காய் முதலிய கடின உணவுப் பண்டங்களையும், கரும்பு முதலிய மென்மையும் கோதும் உடன்கொண்ட இனிமைப் பண்டங்களையும் முறித்து

மென்று தின்னும் திறல் உடையது. ஆன்மகோடி கட்கு இன்பம் பயப்பனபோலத் தோன்றித் துன் பமே விளைப்பனவாகிய எப்பொருளையும் தொலைக்கும் ஆற்றல் வாய்க்கு இருத்தலால், அத்தகைய பொருள் களை ஆன்மாக்கள் விநாயகருக்குத் தந்து அச்சமற் றிருக்கலாகும். "கோட்டிடைவைத்த கவளம்போல", "வாய்புகுவதனினும் கால்பெரிது கெடுக்கும்" என் னும் இலக்கியவரிகளின் கருத்தும் இங்குச் சிந்திக்கத் தக்கதாம். பொதுப்படக் கூறின் மாரன் எனப்படும் மன்மதனுடைய துணைக் கருவிகளையெல்லாம் தின் றும் சிதறியும், ஆன்மாக்கட்கு விளைய இருக்கும் சிற்றின்பத்தீங்கினை நீக்கும் வாயாக இக்களிற்றின் நால்வாய் உளது என்னலாம். "மாரன் எடுத்து வளைக் கும் ஒரு கரும்பை ஒடித்து மலர் சிதறி......பாகர் குறிப்பின் ஒழுகி விளையாடும்...யானை" என்ற வரிகள் இங்கே ஒப்பிடத்தக்கன ஆகும்.

**பாசம் அங்குசம் தேசு உறும் எயிறு ஒண்**
**கனி இவை தாங்கும் புனித நால் கரத்து...களிறு:**

கைகள் வேலைசெய்வதற்கும் பிறருக்குக் கொடுத் தற்கும் பயன்படும் உறுப்புகளாம். விநாயகரின் ஒரு கரத்தில் பாசம் உள்ளது. இது ஆன்மாக்கள் பாசத் தால் பிணிக்கப்பட்டுள்ளதை நினைவூட்டும். கட்டும் கயிற்றைத் தன்கையில் தாங்கியிருத்தலால் தான் பாசக்கட்டுக்குட்பட்ட களிருகாமையைப் புலப் படுத்துதலைத் தெரிந்துகொள்ளலாம். பாசம் பிறவிக் குக் காரணமாவது. ஆதலால் உயிர்களைப் படைத்தல் தொழிலுக்குட்படுத்தும் குறிப்பு இப்பாசக் கரத்தால் உணர்த்தப்படுதல் காணலாம்.

இன்னொரு திருக்கரத்திலே யானையை அடக்கும் அங்குசம் உள்ளது. யானையை அடக்கும் பாகன் கையில் இருத்தற்பாலதான இக்கருவியைப் பிள்ளையார் தன்னுடைய ஒரு திருக்கரத்திலே பற்றியிருத்தலால், தான் ஏனைய யானைகளைப்போலப் பாகரால் அடக்கி நடத்தப்படுபவரல்லர் என்று நாம் உணரும் குறிப்பினை உடையார் என்னலாம். இக்கரம் அழித்தற் குறிப்புக் கொண்டதாகும். வழிபடுவாரது ஐம்புலக் களிறுகளையும் அழிக்கும் ஆற்றல் இப்பரமற்கு இருத்தலை இதுகொண்டு நாம் தெரிந்து வழிபடுதல் நன்றாம்.

மற்றொரு கரத்தே ஒடித்த தந்தத்தினைத் தாங்கியுள்ளனர் இவர். இக்கொம்பு, பகைவரைவெல்லும் கருவியாகவும், தத்துவங்களை அறிவிக்கும் நூல்வரை கருவியாகவும் பயன்படுவது. ஆகவே, ஆன்மாக்கட்குக் கலைஞானத்தை உணர்த்துவதும், ஆன்மாவின் சகச விரோதியாகிய ஆணவத்தை வெல்லத் துணை புரிவதும் என்கிற இரண்டு உதவிகளை இக்கரம் ஆற்றுதல் காணலாம். இதுபற்றியே இதனைத் தேசு உறும் எயிறு என்றார். எனவே சிவஞானத்தினை அடையச் செய்தற்கு இக்கரம் வாயில் ஆகும் எனத்தக்கது. எனவே இது மறைப்பால் நிகழும் நலம் தெரிவிப்பதாம்.

இன்னொரு கரம் ஒண்கனி தாங்குவது. இது, உணவுப் பண்டமாதலாலும், சுவையுடைப் பொருளாதலாலும் காத்தற் குறிப்புக்கொள்ளும். ஐந்தாங் கரமாகிய துதிக்கையின் தன்மையும் குறிப்பும் முன்பே சொல்லப்பட்டன. எனவே, ஐந்து திருக் கரங்களாலும், ஆன்மாக்களுக்கென்றே இறைபுரி

ஐந்தொழில்களைக் கணபதி அறிவித்துக் கொண்டுள்ளார் எனலாம்." படைப்பவன் படைக்கும்போதும்" என்று தொடங்கும் திருவாளொளிபுற்றூர்ப் புராணப் பாடல் இங்குப் பார்த்தல் நல்லது. இங்ஙனம் நாற்கரமும் நமக்கான நற்செயலே புரிந்து நம்மனோரைப் புனிதப்படுத்துதலால் இவை தாங்கும் புனித நாற்கரம் எனப்பட்டது.

**அங்கதம் கடகம் பொங்கு இழை ஆரம்**
**நிறை (மார்பும்) :**

இவ்வரி விநாயகரின் தோள், கரம், மார்பு இவற்றிலுள்ள ஆபரணங்களை உணர்த்துகின்றது. சிறப்புடைச் செய்கைகளை நிகழ்த்துபவர்கட்கு விருதும் பரிசும் வழங்குதல்போல, கயமுகனை மடித்தலும், உயிர்களைக் காத்தலும் ஆகிய செயல்களைக் கொண்டுள்ள மேற்கூறப்பட்ட உறுப்புகட்கு அச்சிறப்புக்கள் புலப்படுத்தும் குறிப்பென இந்த அணிவகைகள் உள்ளனவாகக் கூறப்பட்டுள்ளது.

**மணிச்சூடிகை கறை அணல் கட்செவி**
**கொண்ட திண் பெரும் பண்டி(யும்) :**

பிள்ளையாருக்கு வயிறு மிகவும் பெரிது; அயின்ற எல்லாம் அகத்தடக்குவது; அவற்றினை வியாப்பியமாகக்கொண்டு, தான் வியாபகமாக விளங்குவது; உயிர்களின் உடல் வளர்ச்சிக்கும், உள்ளொளி வளர்ச்சிக்கும், மூலமாக இருப்பது; சிற்பக்கலைத் தபதிகட்குத் தன்னை அமைப்பதில் சிரமம் தாராதது; பாம்பாகிய கச்சையுட்டபட்டிருப்பது. இத்தகையசிறப்புடைமையால் திண் பெரும் பண்டி எனப்பட்டது.

இதனால் விசுவவடிவாக விளங்குபவர் விநாயகர் என்பது அறியப்படும். இறைவனது விசுவரூபத் திறனைச் சதுமறைகளில் நான்காமது பேசும்.

இனி, உதரபந்தமாக இருப்பது பாம்பு எனப்படுகிறது. பாம்பு ஒளிமிக்க மாணிக்கத்தையும் உடையதால் சிறப்புப் பொருந்தியது. ஆனால் கொடுமைமிக்க நஞ்சினைப் பெற்றிருத்தலால் இழிபும் உடையது. சுருண்டு மடிந்து கிடப்பதும், எழுந்து ஆடி மகிழ்வதுமான இருவகை இயல்புகளுடையது. இக்குறிப்புக்களால் மக்களுடலில் உள்ள மூலாதாரத்துக் குண்டலியின் (சக்தியின்) இயல்பு புலப்படுத்தப்படுதல் தெரியலாம். விநாயகருக்கு இடமாகக் கூறப்படுவது ஆறு ஆதாரங்களுள்ளும் முதலதாகிய மூலாதாரமே. எனவே, இம்மூலாதார சக்தி கிளர்ச்சிபெறுமாயின் ஆன்மா சிவப்பிரகாசத்தை அநுபவிக்கிறது. இதனையே **மணிச்சுடிகை** என்ற சொற்றொடர் காட்டும். சுடிகை என்ற சொல் சகஸ்திராரத்தைக் குறிப்பதாகும். இச் சத்தி மடிந்து கிடப்பின் உலகபாச உழற்சியே உயிர் எய்தி மயங்கும். இதனைக் **கறைஅணல்** என்ற தொடர் தெரிவிக்கும்.

நாம் சிவசத்திப் புகழ்நூல்களையும் பொருள்நூல்களையும் கண்ணால் கண்டு படித்தும், ஆன்றோர் உபதேசிக்கக் கேட்டும் நலம்பெற வேண்டியிருத்தலை, பாம்புக்குரிய பெயர்களுள் **கட்செவி** என்ற சொல் பெய்திருப்பதினின்றும் அறியலாம். **மணிச் சுடிகை கறை அணல்** என்ற தொடர் முறையே சிவத்தையும் சத்தியையும் சங்கேத முகத்தால் தெரிவிப்பதாகலாம்.

குறுந்தாள் களிறுதன் இரு கழல் கருதா ;

வேழமுகத்தர்க்கு இரண்டு தாள்கள் உண்டு. அவை குறுகியவை. அவை ஞானசத்தியும், கிரியா சத்தியும் ஆம் எனப்படும். ஆன்மாக்கள் அடங்கி நிற்றற்கு இத்திருவடியே இடமாகும். அடங்குத லாவது தற்போதம் இழந்து அவர் திரு அருள்வழி நிற்றலாம். இத்திருவடிச் சிறப்பினைச் சிவஞான போதம் "இணைமலர்" என்னும். இக்குறுந்தாளினை அடைதலால் சிவஞானம் சித்திப்பதாம்.

களிறு என்றமையால் விநாயகர் ஞானவிளக்கம் செய்யும் பிரணவவடிவினர் என்றுணரலாம். ஆதலால், பரநாத பரப்பிரணவ ஒலியாற்றலே விநாயகர் சொரூபம் என்க. இதனை அகர உகரச் சேர்க்கையால் ஓங்காரம் உதயமாயிற்று என்னுமிடத்தும் அறியலாம். நம் முடைய மலத்தை ஒழித்துச் சிவத்தைப் பயக்கும் வீரச்செயலை இத்திருவடிகள் புரிகின்றமையால் இருகழல் என்றார். கழல் என்பது வீரர் காலணியாம். இத்திருவடிகளை இடையறுது சிந்தித்துப் பயனடைய வேண்டுதலின் கருதா எனச் செய்யா என்னும் வாய் பாட்டால் உரைத்தருளினர் ஆசிரியர்.

ஒருவனை அவனது இரண்டு கால்களையும் பற்றிக் கொள்வது, அவனைத் தப்பி ஓடாமல் அகப்படச் செய்யும் உபாயமாம். ஆதலின், இருகழல் கருதா என்றார். கருதுதல் ஈண்டு உள்ளத்து அன்பாற் பிணித் தலாம். மற்றும், கருதுகிறேம் என்னும் சிந்தனையை மறந்து கருதுவது சிறப்புடைத்தாதலின் கருதா எனலாயினர் என்க.

வெளிறு உறு துயரம் வீட்டினம் பெரிது ஏ :

மக்களிடம் பற்பல குறைபாடுகள் உள. அவற்றுள் வீடுபேற்றினை எய்தவொட்டாமல் வாட்டும் குறைவுபாடு அறிவுக்குறைபாடுதான். இந்த அறிவுக் குறைபாட்டினுலேதான், ஒன்றின் உண்மையை அறிய முடியாமையும், ஒன்றை வேருென்ருக அறிதலும், ஒவ்வொன்றையும் வேறுபடச் சுட்டி அறிதலும், அறிந்த ஒன்றை மறத்தலும், மறந்ததை மீள நினைத்தலும், குறையாக அறிதலும் ஆகிய இன்னோரன்ன தெளியாநிலை நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. இவற்றையெல்லாம் ஒருசேர ஒரே வார்த்தையால் சொல்லப்புகுந்தால் **வெளிறு** என்று கூறிவிடலாம். மெய்யறிவின்மையே வெளிற்றுத்தன்மை எனப்படும். இதனுல்தான் எல்லாவிதமான துன்பங்களும் மக்கட்கு உண்டாகின்றன. இவ்வெல்லாத் துயரங்களும் ஞான வாள் ஒன்ருல் அறவே வெட்டி வீழ்த்தப்படும். இந்த ஞானமே திருவடிஞானம் எனப்படும். பிள்ளையாரின் திருவடியை அடையப்பெற்றவர்கட்கே இந்தப் பதி ஞானம் பலிதமாகும். அங்ஙனம், தாம் அடைந்து பதிஞானம் கைவரப்பெற்றுப் பிறப்பு இறப்பாகிய துயரங்களையெல்லாம் வேரற வீழ்த்தொழித்த தகைமையினை ஆசிரியர் இவ்வரியில் நமக்குத் தெரிவிக்கின்ருரர். எனவே விநாயகர் வழிபாடு ஞானவாயில் ஆதல் கண்கூடாம். ஆகவே, நாமும் இபமுகத்தோனை அகத்தேகொண்டு அவர் திருவடி யடைந்து ஞானப் பிராப்தம் எய்தப்பெறுவோம்.

மற்றும், வீட்டினம் என்னும் சொல் அங்ஙனம் துயரம் ஒழியப்பெறுதல் ஒருதலை என்பதை உணர்த்தி

நிற்கின்றது என்னலாம். நமக்காக நம்மெல்லோரையும் உளப்படுத்திக்கொண்டு வீட்டினம் என்று கூறும் சிறப்புக் கருதத் தக்கதாகும். இச்செய்யுள் கேசாதி பாதமுறை பற்றியது என்க.

குறிப்பு: இங்ஙனம், விநாயகர் வழிபாடு, நூல்களில் வற்புறுத்தப் பட்டிருத்தலை நம்மனோர் கண்கூடாக நன்குணர்தற்பொருட்டே, துறைசை ஆதீனத்தே தற்போது எழுந்தருளியுள்ள குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் எடுத்தணிவயல் என்கிற தலத்திலே ஸ்ரீ பஞ்சாக்கர விநாயகப் பெருமானுக்குப் புதிதாக ஓர் ஆலயம் செயல்முறையில் நாட்டி நாட்டிற்கு நலம்செய்துள்ளார்கள் என்பதை நன்றியோடு இங்கு விண்ணப்பித்துக்கொள்ள விரும்புகின்றேன். இதனால், இந்தப் பரம்பரை (சிலப்பதிகாரத்துக் கண்ணகிக்குப் போல) விநாயகருக்குக் கலைக்கோயிலும் சிலைக்கோயிலும் நிறுவியுள்ளமை அறியலாகும் என்க.

## செய்யுள்—2.

### பாயிரம்

#### நூற்காரணம் முதலியன

பெரும்கடல் உதவும் கரும்கடு வாங்கிக்
கந்தரத்(து) அமைத்த அந்தம்இல் கடவுள்
பாலரை உணர்த்தும் மேலவர் போல,
கேட்போர் அளவைக் கோள்படு பொருளால்
அருளிய கலைகள் அலகில வால்;அவை
பலபல சமயப் பான்மைத்(து) அன்றே;
அஃதால் அந்நூல் தன்மை உன்னிய
மாந்தர் இதுவே பொருள்என்(று) அதன்நிலை
அறைதலின் வேற்றோர் பனுவல் ஏற்றோர்க்(கு)
இசையா மாறுபாடு கூறுவர்; அதனால்,
புறச்சம யங்கள் சிறப்பில ஆகி
அருள்இல் மாந்தரை வெருள்உற மயக்கி
அலகைத் தேரின் நிலையில் தீரும்;
ஈங்கிவை நிற்க, நீங்காச் சமயம்
மூஇரு தகுதி மேவிய தாமும்
ஒன்றோ டொன்று சென்றுறு நிலையில்
ஆறும் மாறு வீறுடைத்(து); இவற்றுள்,
எவ்வம் இல்லாச் சைவநல் சமயத்(து)
அலகில் ஆகமம் நிலவுதல் உள;அவை
கனகம் இரணியம் காஞ்சனம் ஈழம்
தனம்நிதி ஆடகம் தமனியம் என்(று)இப்
பலபெயர் பயப்பதுஓர் பொருளே போலப்,

பதிபசு பாச விதிமுறை கிளக்கும்;
வாய்ந்த நூல்கள் ஆய்ந்தனர் ஆகி
ஆசான் ஆகி வீசிய சமத்துடன்
ஏழஞ்(சு) இருநூ(று) எடுத்த ஆயிரம்
வாழுநல் சகனம் மருவா நிற்பப்
பொன்பொது மலிந்த அற்புதன் ஆனி
ஆரும் விழவின் பொன்தேர் ஆலயத்(து)
ஏரு எண்மர் நிரையில் இருப்ப,
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட ஒருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெய்அம் பதிதிகழ்
மெய்கண் டவன்அருள் கைகண் டவர்களில்
ஒருவர் ஒருதலை மருவி இருப்ப,
வஞ்சப் பிறவிக்(கு) அஞ்சிவந்(து) ஒருவன்
ஏ(து)இறை அருள்என ஈ(து)எனும் மாயா
வாதியை அயலினர் மறுதலைத் தருள்தர,
மற்றவர் அயலினர் அவருரை மறுத்துச்
சொற்றர, அயலினர் அவரும் தொலைவுற்(று)
இன்னே எவரும் முன்னே கழிவுழி,
ஆங்(கு)அயல் இருந்த அருளினர் அழகிது
நீங்கள் சங்கற்பம் நிராகரித் தமைஎன
மற்றவர் உரைத்த சொல்தரு பொருள்கொடு
வாத செற்ப விதண்டையும் ஏதுவும்
ஓது நால்வகை உவமையும் திகழ்தர
அருள்சேர் மாந்தர் வெருள்சே ராமல்
தர்க்கமும் விடையமும் கற்க
நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே.

## பொழிப்பு

பெரிய கடலால் தரப்பட்ட கருமையான நஞ்சினைத் திருக்கையினால் வாங்கிப் புசித்துக் கண்டத்திலே தங்கச்செய்த அநாதி நித்தனாகிய சிவபெருமான்—

குழந்தைகளுக்கு அந்த அந்தப் பருவங்கட்குத் தக்கபடி அறிவைப் புகட்டி நடத்துகிற மேன்மை வாய்ந்த தந்தை தாயரைப் போல—

கேட்கத் தொடங்கின மாணாக்கர்களின் அறிவு எல்லையின் கோட்பாட்டுக்கு அமைந்த பொருளால் செய்யத்தோன்றிய நூல்கள் எண்ணிறந்தனவாகும்.

அந்த நூல்கள் யாவும் அநேகவகையான சமயப் பகுப்புகளோடு பொருந்தி நடப்பனவாம். ஆதலால், அந்தச்சாத்திரத்தினுடைய உண்மையை ஆராயப் பெற்றவர்கள் நமக்கெல்லாம் இதுவே உண்மையான சாத்திரமும் அர்த்தமும் ஆகும் என்று கொண்டு தத்தம் சமயத்தையே திறமுடையதெனக் கூறுவர். அப்படி அவர்கள் கூறுவதனாலே—

வேறொரு சாத்திரத்தை இந்த முறையில் கொண்டவர்களுக்கு ஏனையவர் சொல்லும் சாத்திரமும் அர்த்தமும் பொருந்துவதில்லை. ஆகையால், ஒருவர் கூறுவது மற்றொருவருக்குப் பொருந்தாமையின் மாறுபட்டு வாதிப்பர்.

அப்படி மாறுபட இருப்பதனாலே உலகாயதன் - புத்தன் - சமணன் - மீமாஞ்சன் - மாயாவாதி - பாஞ்சராத்திரி என்று சொல்லப்பட்ட புறச்சமயங்களில்

உள்ள கொள்கைகள் உண்மைத்தன்மை இல்லாதவைகளாகி—

சிவனுடைய அநுக்கிரகத்துக்கு ஏதுவல்லாத அபக்குவ ஆன்மாக்களை, 'ஈது ஓர் அர்த்தம் இருந்தபடி' என்று அச்சப்படத்தக்கதாக மருட்டி—

பேய்த்தேரைத் தண்ணீரென்று கருதி இதைக் குடித்துத் தாகம் தீரலாம் என்று வந்தவனுக்கு அந்தத் தண்ணீர் பொய்யாகிப் பேய்த்தேர் மெய்யாகித் தோன்றிய தன்மைபோல—

இந்த வகையான சாத்திரங்களும் அதன் கொள்கைகளும் சத்தியமானவை போலத் தோன்றிப் பின்னர் அசத்தியமானவையாகி முடியும்.

ஆகையால், இங்குச் சொல்லப்பட்ட சமயங்களும், அவற்றின் அர்த்தங்களும் நமக்கு வேண்டுவனவல்ல.

தம்முள் ஒன்ருேடொன்று தொடர்புபட்டுள்ளவையான சைவம் - பாசுபதம் - மாவிரதம் - காளாமுகம் - வாமம் - வைரவம் என்கிற உட்சமயங்கள் ஆறு உண்டு.

இவைகளைச் சீர்தூக்கிப் பார்த்தால் அந்த அந்தச் சமயமும் தனித்தனி மகத்துவமுடையதாய் விளங்கும்.

மேற்கூறப்பட்ட இச்சமயங்களிலே சைவசமயம் ஒன்றை நோக்கின் அது சற்றும் குற்றம் சொல்ல முடியாதபடித் தம்பிரானுர் செய்தருளிய எண்ணிறந்த ஆகமங்களைக்கொண்டு நிற்கும்.

இந்த ஒரு சமயத்துக்குப் பல சாத்திரங்களை அருளிச்செய்வானேன்? என்று கேட்கலாம். ஆனால் இந்தப் பலவகைச் சாத்திரங்களும் வேறு வேறு பொருளைப்பற்றிக் கூறாமல் ஒரு பொருளையேபற்றிக் கூறுவனவாம்.

எதுபோல என்றால், கனகம் - இரணியம் - காஞ்சனம் - ஈழம் - தனம் - நிதி - ஆடகம் - தமனியம் - என்று இப்படிப் பல பெயர்களால் சொல்லப்பட்டவை யாவும் பொன் என்கிற ஒருபொருளே பற்றிநிற்பது போல வாகும்.

இவ்வாறே, சைவ சாத்திரங்களும் பதி பசு பாச இலக்கணங்களையே சொல்லாநிற்பனவாம்.

இப்படிப்பட்ட பொருத்தமுள்ள ஆகமங்களைக் கற்றுணர்ந்து ஆராய்ந்த போதவான்களாய்ச் சமயம் - விசேடம் - நிருவாணம் - அபிடேகம் என்கிற நான்கு தீக்ஷைகளையும் உடையவர்களாய் எங்கும் பிரகாசிக்கத் தக்கதாகியதும், பக்ஷப்பிரதிபக்ஷம் இல்லாததுமான சமயபோதமுடையவர்களாகிய இந்தப் பெரியோர்கள்—

சகாப்தம் ஆயிரத்து இருநூற்று முப்பத்தைந்து நடக்கின்ற காலத்திலே (கி - பி 1313)—

பொன்னினால் செய்யப்பட்ட திருவம்பலத்திலே நிறைந்து எழுந்தருளியிருக்கும் தம்பிரானாருடைய ஆனி மாதத்து ஆரும் திருவிழாவிலே (காலம்)—

பொலிவினைக்கொண்ட தேர்மண்டபத்திலே ஏறி, (இடம்)—

முன்னே கூறப்பட்ட ஆசிரியன்மார் எட்டுத் திருப்பெயர் ஒழுங்கிலே எழுந்தருளியிருக்கையில் (அவைக்களம்)—

சற்காரியவாதமின்றி ஒருமுறை சொன்னதை மறுமுறை சொல்லாமல் முன்னொடுபின் மலைந்துவரும் வர்க்கத்தோடும் கூடியிருக்கும் மாயாவாதி என்னும் சமயி ஒருபுறத்திலே கூடியிருக்கையில்—

முதிர்ந்த மூங்கில்களினிடம் உண்டாகிய முத்துக் களோடும் கூடியிருக்கும் பெண்ணைநதி சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூர் என்கிற திருப்படைவீட்டிலே திருவவதாரம் செய்தருளிய மெய்கண்டதேவநாயனு ருடைய அநுக்கிரகத்தைப்பெற்ற அடியார்களிலே ஒருவர் அந்தக் கூட்டத்தின் ஒருபுறத்திலே பொருந்தி எழுந்தருளியிருக்கும் வேளையிலே—

பொல்லாங்கை விளைப்பதாயிருக்கும் பிறவிப் பிணிக்குப் பயந்தவன் ஒருவன் வந்து இவர்களைத் தொழுது—

தம்பிரானுர் திருவருள் எத்தகையது? என்று வினவ, தன்னுடைய கொள்கையைக் கொண்டு இதுவே பொருள் என்று நாட்டிய மாயாவாதியை—

அருகே இருந்தவர் கண்டித்துத் தம்முடைய கொள்கையை விளம்பி இதுவே பொருள் என்று நாட்ட—

அவர் பக்கத்தில் இருந்தவர், அவர் சொன்ன அர்த்தத்தை மறுத்துத் தம்முடைய கொள்கையைச் சொல்லி இதுவே பொருள் என்று நாட்ட—

அவரருகே இருந்தவராலே அவரும் கண்டிக்கப் பட்டு,—

இப்படி ஒருவரையொருவர் மறுத்து எட்டுப் பேர்களும் முன்னே தள்ளுண்ட பொழுதில்—

அங்கே அவர்கள் அருகே எழுந்தருளியிருந்த ஆசாரியர்களைப் பார்த்து அருளுடைச் சைவர், நீங்கள் உங்கள் கொள்கைகளைச் சங்கற்பித்ததும் X நிராகரித்ததும் மிகவும் அழகாயிருந்தது (நன்றாயில்லை) என்று அருளிச்செய்ய—

அவர்கள் சொன்ன சொற்களில் உண்டான பொருள்களை எடுத்துக்கொண்டு யான், (ஸ்ரீ உமாபதி சிவம்)—

வாதம் செற்பை விதண்டை ஏது என்கிற தருக்க முறையாக வினை, பயன், மெய், உரு என்று சொல்லப்பட்ட நால்வகை உவமையும் இந்த நூலிலே விளங்கத்தக்கதாக—

திருவருளுக்கு ஏதுவாயுள்ள பக்குவான்மாக்களுக்கு மலைவு என்கின்ற அச்சம் வந்து தாக்காத விதமாயும் இந்த நூலில் உண்டாகிய தர்க்கங்களையும் விஷயங்களையும் கற்கத்தக்க விதமாயும்—

நல்ல கவிதைத் திறமுடைய புலவர்கள் இவனும் ஒரு நூல் செய்வதே! என்று நகைக்கத்தக்க விதமாயும்—

இந்த நூலைச் சொல்லுகின்றேன்.

*விளக்கம்*

இந்தச் செய்யுள், இந்த நூலின் வரலாற்றை முகவுரை முறையில் கூறுகின்றது. இத்தகையதொரு நூல் நமக்குத் தேவையா என்பதும், இந்த நூல் கற்பதால் கிடைக்கப்பெறும் பயன் யாது என்பதும், இந்நூல், சைவர்க்குமட்டில் உரியதா அன்றி ஏனைச் சமயத்தார்க்கும் உரியதா என்பதும், இந்நூல் அமைந்துள்ள போக்கு இத்தகைத்து என்பதும் ஆகிய பல விவரங்களை இந்தப்பாடலில் இதன் ஆசிரியர் தந்து உதவுகின்றார்.

மேலும், பேரின்ப வீட்டை அடைவதற்கு மக்கள் எல்லோர்க்கும் உரிமை உண்டு. "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பதே சித்தாந்த ஞானிகளின் திருவுள்ளம். இந்த இன்ப உரிமையை, முதற்கண் சாத்திரங்களைப் படித்துணரப் பெறுவதாலும், பின்னர், குருவினை அடையப்பெற்று ஐயம் அகன்று அவருபதேசவழியில் நிலைத்து நிற்றலாலும் எய்தலாம்.

வேதாகமங்களாகிய சாத்திரங்களை ஓதும்போது முன்னுக்குப்பின் முரண்படுவதுபோலப் பலவிடங்கள் காணப்படும். இந்த முரண்பட்ட இடங்களை அடைந்தவர்கள் தத்தம் யுக்திக்குத் தக்கவாறு பொருள் கொள்ளத் தொடங்கித் தாம் கண்டதே உண்மைப் பொருளென வாதிப்பர். இதனால், ஒன்றற்கொன்று கொள்கையில் வேறுபாடுடையவையான பற்பல சமயங்கள் எழலாயின. அந்த அந்தச் சமயவாதியரும் தத்தம் மதமே சிறந்ததென ஆரவாரமிட்டுப் பேசி

மக்களை வசப்படுத்துவர். உண்மையறியா மக்கள் அவ்வழிகளிலே செல்லலுற்று முடிவில் மயக்கம் உறுவர். விவேகம் உள்ளவர்களைக்கூட இந்த ஆரவாரம் மயக்கப்பார்க்கும். ஆதலின் இத்தகைய கதகரையும் அவருரைகளையும் நியாயமுறையில் ஆராய்ந்து முடிவுகாட்ட வேண்டுவது நல்லாசிரியர்களுடைய கடமையாகின்றது. இச்செய்தி, "முத்தி வழிக்கிது மூலம் எனத் துணிவார்களையும் - கத்தி மயக்கும் கதகரை நாம் கடிகின்றனமே" என்றொருவர் கூறுதலால் அறியலாம். ஆகவே சாமானிய மக்களாவார், பிறருடைய - வஞ்சனையுடையதும், உண்மையில்லதும், குற்றமே காண்பதும், கோணலர்த்தம் செய்வதும், கண்டனையே கருத்தாகக்கொண்டதும், தருக்கத்துக்குப் பொருந்தாததும், அற்ப இன்பம் பயப்பதும், பேரின்பம் பயவாததுமான - பேச்சில் சிக்கிக் கெடாமல் விழிப்படைவதற்காகவே இத்தகைய நூல்கள் இயற்றப்படுவன ஆயின. பிற மதங்களைக் காய்வது இத்தகைய நூல்களின் நோக்கம் அன்று. அவரவர் கொள்கைகளையும் அமைதியாகக் கேட்டுக்கொண்டு, அக்கொள்கைகளில் உள்ள குறைகளையும் பிழைகளையும் அவரவர்கட்கும் எடுத்துக்காட்டி, நியாயமுறையில் நிறைவுடையதான தங்களுடைய கொள்கைகளையும் அவரவர்களுடைய வாதங்கட்கு இடமாக்கி, முடிவில் யாவரும் ஒருமுகமாக ஒப்புக்கொள்ளச் செய்வது அல்லது சித்தாந்தப்படுத்துவதே இம்மாதிரியான நூல்களின் முழுநோக்கமும் பயனுமாம்.

உலகியலில் உள்ள குறைபாடுகளையெல்லாம் அகற்றுவதற்காகவும், உலகில் உள்ள எல்லா வல்லரசுகளும் ஒன்றுகூடி ஒரு முடிவுக்கு வரவேண்டும்

என்பதற்காகவும், அனைத்தரசுக் கூட்டு மாநாடு (Summit Conference) கூட வேண்டுமென்று இக்காலத்து அரசியல் மேதாவிகள் விரும்புகின்றனர். இவ்வாறே, உண்மையுள்ளதும் உலகப்பொதுமையும் கொண்ட தான ஒரு சமயத்தைக் காணவிரும்பும் ஞானிகள், எல்லாச் சமயத்தாரையும் ஒரேமேடைக்குக் கொண்டு வந்து வாதப் பிரதிவாதங்களைத் தருக்கரீதியில் அமைதியுடன் நிகழ்த்திச் சித்தாந்தம் செய்யவேண்டியுள்ளது. இந்த வழியை இந்த நூல் அமைப்புப் பூண்டுள்ளது என்னலாம். கேளாரும் வேட்ப மொழிவதும், கேட்டாரை மீட்டும் பிணிப்பதுமாகிய இயல்புடையதே சித்தாந்தவாதம் ஆகும். அதனை இந்நூல் செய்து தலைக்கட்டுகின்றமை நூலுட்புக்குக் காணுங்கால் அறியப்படும். ஆனமைபற்றி ஆசிரியர் இந்தப் பாயிரப் பாடலை அமைத்துக் காட்டுவாராயினர். மேலும் நூலுக்கொரு பாயிரமிருத்தல் இலக்கணமுறை ஆதலின் இச்செய்யுள் இசைத்தனர் என்றும் நாம் கொள்ளலாம். இனிப் பாயிரப்பாடல் பகரும் செய்திகளைப் பார்ப்போம்.

**பெருங்கடல் உதவும் கரும்கடு வாங்கிக்**
**கந்தரத்து அமைத்த அந்தம் இல் கடவுள் :**

இந்த வரிகள், நமக்கு எங்கும் நிறைந்துள்ளதான ஒரு பொருள் உண்டு என்பதையும், அது உயிர்களிடத்தே பேரருள் உடையது என்பதையும், அது அழிவில்லாத அநாதி நித்தப்பொருள் என்பதையும், அதனை எத்தகை ஆற்றல்கொண்டும் அழித்தல் இயலாது என்பதையும் நாம் அறியச் சொல்லுகின்றன. புறத்தும் அகத்தும் நீக்கமின்றி விளங்கும் பொருளே

கடவுள் எனத் தக்கதாகும். சிவம் என்பது இந்த நிலைமை உடையதாம். இப்பொருள், ஒன்ருய் வேருய் உடனுய் விளங்கும் பொது இயல்பும், இதனின் மேம் பட்டதான தனக்கே உரிய சிறப்பு இயல்பும் கொண் டது. ஆகையால் இத்தகையதொரு பொருளை உண் டெனக்கொண்டு யாவரும் ஒப்புக்கொள்ளக் கருதிக் கடவுள் என்ற பெயரிட்டு ஆசிரியர் கூறலுற்ருர். இச் சொல் ஒன்றே எல்லாச் சமயத்துத் தெய்வங்கட்கும் பொதுப்பெயராகப் பொருந்தியிருத்தலைக் காணலாம்.

இத்தகையதொரு பொருள் ஒருபோதோ, நீண்ட போதோ இருந்து பின்னே அழிவடைவதாயின் நமக் குப் பயன்படாது. எக்காலத்தும் எவ்விடத்தும் எந்நிலையிலும் இப்பொருள் இருந்து விளங்கினுல்தான் எக்காலத்தவர்க்கும், எவ்விடத்தவர்க்கும், எந்நிலை யினருக்கும் இது பயன்படும். மேலும் யாவற்றையும் தன்னுள்ளே தோன்றச்செய்வதும், ஒடுங்கச்செய்வது மான ஆற்றலையும் இது பெற்றிருக்கவேண்டும். இவ் வெல்லாம் உடைய பொருளே முதற்பொருள் ஆகும். ஆனதுபற்றியே அந்தம் இல் கடவுள் என்ருர். யாவரை யும் யாவற்றையும் அழியச் செய்வதும், தான் அழிவற் றிருப்பதுமே இப்பொருளின் இயல்பென்பதை இச் சொற்றெடர் தெரிவிக்கும். "அந்தம் ஆதி" என்ற சாத்திரவாசகம் ஈண்டு ஒப்புநோக்கத் தக்கதாகும்.

இம்முழுமுதற்பொருளே பரம்பொருள். இது எவராலும், எதனுலும் அழிவடையாத அநாதி நித்தத் தன்மை உடையது. இதனைக் கரும் கடு வாங்கிக் கந்தரத்து அமைத்த என்ற தொடரால் அறியலாம். தேவாசுரர்களால் வாசுகியிடமாக விளைக்கப்பட்டது

இக்கடு. இதன்கொடுமை கரும் என்பதால் தெரிவிக்கப்பட்டுள்ளது. இதனை உட்கொண்டான் பரமன். ஆனல், இதனை வாயிலும் வைத்துக்கொள்ளாமல், வயிற்றிலும் செலுத்திவிடாமல் இடைநிற்கும் கண்டத்தே அமைத்தருளி, இவ்வருஞ்செயலால் உலகம் கடவுளின் ஆற்றலை உணரவைத்திட்டான் ஆவான். இந்தக் கொடுவிடம் அவனை ஏதும் செய்யகில்லாது அமைதியாகக் கிடக்கலுற்றது. இறைவன் இதனல் அழிவெய்திலன். ஆதலால், இத்தகைய பொருளே பரம்பொருள் ஆகும் என நமக்கு இங்கு உணர்த்தப்படுதல் காணலாம். இதனல், சிவத்தின் பரத்துவம் நிலைநாட்டப்படுகின்றது என்னலாம். பரசிவனைத் துரியமூர்த்தி என்று உபநிடதங்கள் கூறுவதையும், ஏனையோரை அங்ஙனம் கூருமையும்கொண்டு சங்கார காரணனுகிய சிவமே முதல் என நாம் தெரியலாம். "பசுபதிப் பெயரிய தனி முதற்கடவுள் உம்பர்கள் எவர்க்கும் உயர்ந்தோன்" என்பதை உலகினர்க்கு உணர்த்தும்பொருட்டு இருபத்திரண்டு ஏதுக்களை அரதத்தாசாரியார் கூறலுற்ருர். அத்தகைய ஏதுக்களில் ஒன்ருக "அமைப்ப அரும் கடுவிடம் அமுது செய் திடுதலின்" என்பது கூறப்படுதலை இங்கு ஒப்பிட்டுக் கொள்ளலாகும்.

கடலானது எவ்வளவு பெருமை உடையதாயினும் அருமை உடையதாயினும் கடுத்தோற்றத்துக்கு இடமாயிருத்தலின் உயிர்கள்ஆவார் எவ்வளவுதான் சிறப்புடையராயினும் ஆணவம் எனப்படும் கொடிய மலம் உடையவரேயாவர் என்ற உண்மையினைப் பெருங்கடல் உதவும் கருங்கடு என்பதால் அறியலாம். ஆணவத்துக்கும் கருமை நிறமே இலக்கணமாகக்

கூறப்படுதல் மரபு. "சிறியனேன் இருள்மலம்" என்பது ஆன்றோர் வாக்கு.

எனவே, மேற்கூறப்பட்ட வரிகளினால், கடவுள் ஒருவர் உண்டு: அவர் அந்தமில்லாதவர்; பேரருள் மேனியர்; உயிர்கள் மலமுடையன என்கிற சித்தாந்தக் கருத்துக்கள் புலப்படுத்தப்பட்டுள்ளமை காணலாம்.

(கடவுள்) பாலரை உணர்த்தும் மேலவர்போல
கேட்போர் அளவைக் கோட்படு பொருளால்
அருளிய கலைகள் அலகில :

குழந்தைகள், வளர்க்கப்படுதற்கு உரியவராவர். இவர்களைப் புறந்தருதலும் சான்றோராக்குதலும் தாய் தந்தையர் கடமை. ஆகவே, இவர்கள் குழந்தைகளின் வயது முதலிய நிலைமைகட்கு ஏற்ப உணவும் அறிவும் ஊட்டுவர். ஊட்டப்படும் உணவினிடம் உள்ள தரா தரங்களும், அறிவினிடமான ஏற்றத் தாழ்வுகளும் உண்பிப்போரின் நிலைமையைப் பொறுத்திராமல், உண்ணும் பாலர்களின் பக்குவநிலைகளைப் பெரிதும் - முற்றும் - பொறுத்துள்ளன. கல்விச்சாலையில் வகுப்பு கட்கு ஏற்றவாறு பாடபோதனைகள் ஆசிரியர்களால் போதிக்கப்படுகின்றன. அறிவூட்டும் பாடங்கள் அந்த அந்த வகுப்புப் பாலர்களின் ஆண்டுகட்கு ஏற்ப வேறுபடுகின்றன. எனவே, பாலர்கள் எனப்படு வோர் ஓரினத்தவரே ஆயினும், அவர்கட்கு உணர்த் தப்படும் விஷயங்கள் வேறுபடுகின்றன. இவ்வாறான வேறுபாடுகள் அவர்கள் வளர்ச்சியில் நாட்டமுடைய மேலவர்களால் ஆக்கியளிக்கப்படுகின்றன.

இதேமாதிரி, கேட்கப்புகுந்த மக்களறிவுகட்கு ஏற்றவாறு பற்பல கோட்பாடுகளை உட்கொண்ட நூல்கள், அவர்களின் ஆன்ம முன்னேற்றத்தை நோக்கமாகக்கொண்டு பலப்பல விதமாகப் பரம்பொருளால் அருளிச்செய்யப்பட்டுள்ளன. இங்ஙனம் பலவிதமான கொள்கைகளுடையனவாக நூல்கள் செய்யப்பட்டமைக்கு மக்களிடம் உள்ள அறிவின் ஏற்றத் தாழ்வுகளே காரணமாகுமன்றி, இறைவனின் செயல் வேறுபாடு காரணமாகாது. இதனாலேதான் உலகத்திலே பற்பலவிதமாக வேதங்களும் ஆகமங்களும் வழங்கலாயின. கோட்பாடுகளும் பலப்பல விதமாக அநுட்டிக்கப்படுகின்றன. இந்த உவமான உவமேயங்களால், இறைவன் ஆன்மகோடிகள் பிறப்பற்றுச் சிறப்புற்று வாழ்வதொன்றே கருத்தாகக் கொண்டவன் என்பதும், அதற்கேற்பவே நூல்களைப் பலதரமுடையனவாக அருளிச்செய்துள்ளனன் என்பதும் நாம் தெரிந்துகொள்ளலாம். ஆகவே இந்தப் பன்மைக்கு இறைவன் காரணனல்லன்; ஆன்ம கோடிகளின் அறிவு வேறுபாடுகளே காரணம் என்பது தெளிவாம்.

**அவை, பலபல சமயப் பான்மைத்து அன்றே:**

மேற்கூறப்பட்டவண்ணம் நூல்கள் பலபலவாக உள்ள காரணத்தால், அந்த அந்த நூல்களையே பிரமாணமாகக் கொள்வோர் கொள்கைகளும் பல பல ஆயின. இந்த நூல்கள் யாவும் ஒரு முடிந்த நோக்கத்தின் பலபடிகளாக இருத்தலை மக்கள் கருதிப்பாராமல், அந்த அந்த நூலும், முடிந்த முடிபைக்கொண்ட ஒன்றும் எனக் கருதிவிட்டனர். உண்மையைச்

சிந்தித்துப் பார்த்தால் ஒரு முடிபுக்குரிய பல வழிக ளாகவும் பல படிக்கட்டுகளாகவும் இந்த நூல்களின் கொள்கைகள் இருப்பது புலப்படும். They are not end in themselves; they are means to an end என்பதே உண்மையாம். இங்ஙனம் கொள்கைகளை ஒருமுகப்படுத்தாமல்பன்முகப்படுத்தியமை மக்களின் சிற்றறிவைச் சார்ந்த குறைபாடு ஆகும். இதனாலேயே சமயங்கள் பலபலவாயின. ஆன்மாக்களின் குற்றத்தை வீட்டி, உண்மை அறிவை ஊட்டி, இறைவனோடு சாமியப்படுத்துவதே சமயம் எனப்படும். ஆனால், இதற்கு மாறாகச் சமயங்கள் பலவாறாகப் பேதப்பட்டு மக்கட்கு மயக்கத்தையே விளைக்கலுற்றன என்றா லும், அந்த அந்தச் சமயமும் தன்தன் எல்லை அளவுக் கேனும் தன்னை மேற்கொண்டொழுகும் மக்களைப் பக்குவஞ்செய்ய உதவுகின்றது எனக் கொள்வதே அறிவுக்குப் பொருந்துவதாகும். "ஆறு சமய முதலாம் சமயங்கள் – ஊறதெனவும் உணர்க; உணர்பவர் - வேறதறவே உணர்வார்" என்ற திருமந்திரப் பாடல் இங்கு எண்ணிப்பார்த்தல் பொருந்தும். இதனால், சமயங்கள் எண்ணிக்கையில் எவ்வளவு பல்கினாலும் அவற்றின் முழுமுதல்தெய்வம் ஒன்றே என்றே நாம் துணியவேண்டும்.

**அஃதால், அந்நூல் தன்மை உன்னிய மாந்தர்**
**இதுவே பொருள் என்று அதன் நிலை அறைதலின்**
**வேறு ஓர் பனுவல் ஏற்றோர்க்கு இசையா**
**மாறுபாடு கூறுவர் :**

மக்களின் சிற்றுணர்வு காரணமாக நூல்கள் பல வாயின. நூல்கள் பலவாயினமையால் சமயங்கள்

பலவாயின. சமயங்கள் பல ஆயினமையால் சமயத்தினரிடையே வேற்றுமை பலப்பட்டது. வேற்றுமையுணர்ச்சியானது ஒற்றுமை ஏற்படவும், உண்மை புலப்படவும் வழிதெரியாமல் மறைத்துவிட்டது. இதனால் இணக்கத்துக்கு மாறாகப் பிணக்கமே மிகுவதாயிற்று. ஒவ்வொரு நூலையும் கற்றோர்கள், அந்த நூல் எந்தப் பக்குவநிலைக்குத் தம்மை ஏற்றுதற்குப் பயன்படுவதென எண்ணிப் பார்ப்பதற்குப் பதிலாக, அது சொல்லுவதே முடிந்தநிலை எனத் தீர்மானங்கொண்டனர். ஆதலால், தத்தம் சமயநூல்கள் சாற்றுமதுவே முடிந்த முடிபாம் எனவும், மற்றவர்களுடைய நூல்கள் நுவல்வன தவறுபட்டவை எனவும் தர்க்கமிடலாயினர். இதனால் மக்களிடையே மாறுபாடு மிகுவதாயிற்று. கொடுக்கப்பட்ட கத்தியால் தருப்பை கொய்வதற்கு மாறாகப் பசுவின்வாலை அரிதலும், தன் தலையை அறுத்துக்கொள்வதுமான மடமைச்செயல் போன்றதொரு நிலைமையைச் சமயவாதிகள் மாற்சரியத்தால் மேற்கொள்ளலாயினர். இதுகாறும் கூறியவதனால், நாம் மதநூல்களின் கருத்துக்களை அறியவும், மதங்களுக்குள் ஒருமை காணவும், உண்மைநிலை உணரவும், அடையவும் முயலவேண்டும் எனத் தெரியலாம்.

அதனால், புறச்சமயங்கள் சிறப்பு இல ஆகி
அருள் இல் மாந்தரை வெருள் உற மயக்கி
அலகைத்தேரின் நிலையில் திரும் :

மக்கட்கு வேண்டுவது பிறவாப்பெருநிலை. அதாவது வீடுபேறு. இதனை விளைப்பது இறை அருள். இந்த அருளை அடைய வழிசெய்வன சமயங்கள்.

இந்தச் சமயங்கள் அருளுக்கு வழிகோலாமல் மருளுக்கு வசப்படுமாறுல் அத்தகைய சமயத்துறையுட்பட்டாரெல்லாரும் மயக்கத்துக்கே (அறியாமைக்கே) ஆளாகி அல்லலுற்று மாள்வர். பாலைவெளியில் பட்டப்பகலில் நடப்பானுக்கு, நேர்வழி தெரியாமையால் கவர்பட்ட வழிகளிலெல்லாம் திரிந்து திரிந்து செல்வதனுல் தாகம் உண்டாதல் இயல்பே. தாகத்தைத் தீர்க்க வல்லது தண்ணீரே. உள்ளத்தில் அவன் தண்ணீரை எண்ணியிருப்பினும், சற்றுத் தொலைவில் உஷ்ணத்தினுல் கண்ணுக்கு ஓடுவதுபோலத் தோன்றும் கானல் நீர் தென்படுகின்றது. அதனை, அவன் அறிவுடையவனுயின், தன் கண்ணிந்திரியம் மயங்கக்காட்டும் பொய்த்தோற்றமென மதித்து, உண்மையான நீர்நிலை யாண்டுளது எனக் காண்டற்கு அவாவி நடப்பான். அடைந்து பருகித் தாகமும் சோகமும் தணியப்பெறுவான். அவ்வாறன்றிக் கானலை நீரென்றே கருதி அது தோன்றும் இடந்தோறும் நடந்தலைவானுயின் சோக மேலிட்டுத் தாகம் தணியப்பெருமல் வருந்துவான். இப்படித்தான் உள்ளது உண்மையறியாத பலப்பல சமயங்களின் நிலை. இவை உண்மைக்குப் புறம்பான வழியில் படர்தலால் புறச்சமயங்கள் எனப்படும். உண்மையுணர்ந்தோர் இச்சமயங்களின் கொள்கைகளை மேற்கொள்ளமாட்டார். உண்மைக்கு மாறுபட்டதும், மயக்கத்தை விளைப்பதுமான இயல்பு கொண்ட சமயங்களை மேலோர்கள், பிறர் மயங்கா வண்ணம் உதவக்கருதிப் புறப்புறச்சமயம் - புறச்சமயம் - அகப்புறச்சமயம் என்றெல்லாம் அவற்றின் மயங்கும் தரங்கட்கு ஏற்பப் பாகுபடுத்தியுள்ளனர். புறப்புறச் சமயத்தார் அறுவகைப்படுவர். புறச்

சமயத்தாரும் அறுவகையினராவர். அகப்புறச் சமயத்தாரும் ஆறுவகையினரே. இதன் விரிவுகளையெல்லாம் இவ்வாதீனத்தின் 93-வது வெளியீட்டில் காணலாம்.

மேற்சொல்லப்பட்ட 3×6 பதினெட்டு வகையினரும் ஆன்மாவின் உண்மை நிலையினை அறியப் பெறாதவராதலால், இவர்கள் ஆன்மாவின் சகசமலம் எனப்படும் ஆணவமலத்தினை ஒப்புக்கொள்ளுவதிலர். தம்பால் உள்ள குற்றத்தையே உணரப்பெறாமையினால், குற்றமறுதற்கு இவர்கள் காட்டும் வழிகள் நேர்மையானவையாக உண்மையறிவினரால் கொள்ளப்படுவதில்லை. இந்த நூலிலே புறச்சமய நெறியாகிய மாயாவாதமும், அகப்புறச் சமயநெறியாகிய ஐக்கிய வாதமும் புறச்சமய நெறிகளாகப் பேசப்பட்டுப் பின்னர், அகச்சமயங்கள் ஆறும் எடுத்தோதப்படுகின்றன. பொதுவாகச் சொல்லின் புறச்சமயங்கள் என்ற வரிசையில் உலகாயதம் முதலான புறப்புறச் சமயங்களும் அடங்கும்.

இச்சமயத்தவர்கள் யாவரும் கூறும் கொள்கைகள், மக்கட்கு உண்மையுணர்த்தும் பெற்றியன அல்லவாதலால் சிறப்பில ஆகி என்றார். மக்கள் யாவரும் சிவத்தினுடைய அருளெல்லைக்குள்ளேதான் இருக்கின்றனர். ஆனால் அங்ஙனம் இருத்தலை உணரப் பெற்றிலர். ஏனெனில், அவர்கள் மேற்கொண்டுள்ள நூல்கள் அங்ஙனம் உணர்த்துவன அல்ல. இதனால் நூல்களின்மேல் ஏதும் பிழை இல்லை. அவற்றை அர்த்தங்காணும் முறையில் பிறழ்வு உள்ளது என்பர். இங்ஙனம் மாறுபட்ட உணர்வினராய்த் தாம் திருவருள் வயப்பட்டிருத்தலை உணர்வில்லராய் இருத்தலால் இத்தகையோரை இப்புறச்சமயத்தோர் வாதங்கள்

மயங்கவைத்து உண்மைக்குப் புறம்பானவர்களாக்கிக் கெடுத்துவிடுகின்றன. இதனை, அருளில் மாந்தரை வெருளுற மயக்கி என்ற இடம் உணர்த்தும். இவ்வரிகளால், நாம் திருவருள் வயப்பட்டிருத்தலை உணர்த்தும் வாதங்களைக் கேட்டலே தக்கது என்று தெரியலாம். அங்ஙனம் கேட்டலே தாகங் கொண்டோன் தண்ணீர் அருந்துதலை நிகர்க்கும்.

ஈங்கு இவை நிற்க:

இங்ஙனம் தெருளுறுத்தும் மதுகை இல்லாத சமயங்களின் கொள்கைகளை நாம் கொள்ளாமல் விலகுவோமாக! அவன் அருளே கண்ணகக்கொண்டு காணும் விருப்புடையவர்கட்கு மேற்கூறப்பட்ட புறச் சமயக் கொள்கைகளின் உணர்வு தேவையின்றாம்.

நீங்காச் சமயம், மூவிரு தகுதி மேவிய தாமும்
ஒன்றோடு ஒன்று சென்று உறும் நிலையில்
ஆறும் மாறு வீறு உடைத்து :

திருவருளுக்குப் புறம்பாகப் பேசாமல், இறைவன் திருவருளையே ஆதாரமாக்கிப் பேசும் சமயங்களே உண்மையிலிருந்து விலகாத சமயங்களாகும். ஆதலால் இவைகளை, நீங்காச்சமயம் என்றார். இவை திருவருட்டிறத்தினையே பெரிதும் போற்றிக்கூறி உண்மை தெளிவிக்கும் சமயங்களானமையின் இவ்வாறு கூறியுள்ளார் ஆசிரியர். இத்தகைய சமயங்கள் அகச்சமயம் என்று பேசப்படும். இவ்வகை சார்ந்தன ஆறு சமயங்களாம். அவை, உட்சமயம் என்றும் அழைக்கப்படும். அவை பாடாணவாதம் முதல் ஆறு எனப் பேசப்படும்.

ஆனால், இந்நூலாசிரியர் $4 \times 6 = 24$ சமயங்களையும் இரு பிரிவுகளுக்குள்ளே அடக்கி அவற்றைப் பன்னிரண்டாகப் பகுத்து அவற்றுள் உலகாயதன் - புத்தன் - சமணன் - மீமாம்சகன் - மாயாவாதி - பாஞ்சராத்திரி என்போர் மதங்கள் ஆறினையும் புறச்சமயம் என்றும், சைவம் - பாசுபதம் - காளாமுகம் - வைரவம் - வாமம் - மாவிரதம் என்போர் மதங்கள் ஆறினையும் அகச்சமயம் என்றும் பேசுவர். இதனை இவர் இந்தச் சங்கற்ப நிராகரண நூல் செய்தற்கு ஏழாண்டுகட்கு முன்பு இயற்றியருளிய சிவப்பிரகாசம் என்னும் நூலிலே "புறச்சமயத்தவர்க்கு இருளாய் அகச்சமயத்து ஒளியாய்" என்று தொடங்கும் பாடலில் பகர்ந்துள்ளார். அந்த முறைபற்றி நின்றே இந்த நூலில் அகம் என்றும் புறம் என்றும் மதங்களின் பகுப்புப் பேசப்பட்டுள்ளதென அறிதல்வேண்டும்.

புறச்சமயத்தவர் என்போர், "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயையிரண்டு" என்ற ஆறுபதார்த்தங்கள் உண்டென ஒப்புக்கொள்ளமாட்டார். இவற்றை உணர்த்தினும் ஏற்றுக்கொள்ளமாட்டார். ஆனால் பாடாணவாத சைவர் முதலியோர், சித்தாந்த சைவர் போலவே ஆறு பதார்த்தங்களையும் கொண்டவர் ஆவர்.

இவர்கள் இந்த ஆறு பதார்த்தங்களின் பொதுவும் சிறப்பும் ஆகிய இயல்புகளை உணர்த்தின் ஏற்றுக் கொள்ள வல்லுநராவர். இவர்களும் கொளுத்தின் அல்லது கொள்ளவல்லுநர் அல்லர் எனப்படுவர். ஆதலின் சித்தாந்த சைவத்தினும் ஓரளவு தாழ்ந்தேயுள்ள திறத்தினது அகச்சமயம் என்ப.

ஆணவமல உண்மையை ஒப்புக்கொள்ளுதலே அகச்சமயத்துக்குச் சித்தாந்த சைவத்தோடு ஒப்ப நிற்கும் தகுதிப்பாடாம். ஆதலால், இந்த உட்சமயங்கள் ஆறும் தனித்தனி மகத்துவம் உடையவையே ஆகும். இவை ஒன்றோடு ஒன்று புறச்சமயங்கள் போல முரண் உடையவை ஆகமாட்டா. ஆதலால், நம்மைச் சிவத்தின் உடைமைப்பொருள் என்று கூறும் திறம் கொண்டன இவை ஆறு சமயங்களும் என்க.

**இவற்றுள், எவ்வம் இல்லாச் சைவநல் சமயத்து அலகில் ஆகமம் நிலவுதல் உள :**

சற்றும் குற்றமில்லாத கொள்கைகளைக் கொண்டது சைவசமயம் ஆகும். இது சிவ சம்பந்தத்தை நன்கியம்பும் தன்மை வாய்ந்தது. இந்தச் சமயத்தின் தேர்ந்தெடுத்த கொள்கைகளை எல்லாம் எடுத்துரைக்கும் ஆகமங்கள் பலவுள. இவ்வாகமங்கள் யாவும் இறைவனால் அருளிச் செய்யப்பட்டவை ஆகும். "அண்ணல் அருளால் அருளும் சிவாகமம் - எண்ணில் இருபத்தெண் கோடி நூறாயிரம்" என்பது திருமந்திரம். மற்றும், காமிகம் வாதுளம் ஈறாக ஆகமங்கள் இருபத்தெட்டு என்பதும் உண்டு. "அஞ்சோடு இருபத்து மூன்றுள ஆகமம்" எனவும் திருமந்திரம் கூறுதல் காணலாம். மற்றும், காரணம் முதலாக ஒன்பதெனவும் திருமந்திர நூல் செப்பும். "நவாகமம் தானே நாலேழ் ஆகமம்" என்பதும் உண்டு. எவ்வாறாயினும், சைவ சித்தாந்தத்தை நன்கு தெளியச்சொல்லும் ஆகமங்கள் பல உள என்பது தேற்றமாம். இங்ஙனம் ஆகமங்கள் பலவாயினும்;

**அவை, கனகம் இரணியம் காஞ்சனம் ஈழம்
தனம் நிதி ஆடகம் தமனியம் என்று இப்
பல பெயர் பயப்பது ஓர் பொருளேபோல
பதி பசு பாச விதிமுறை கிளக்கும்:**

சைவம் சிறந்ததொரு சமயமாகும். உண்மையான முடிபு இன்னதெனக் கண்டதொரு சமயமும் ஆகும். இந்தச் சமயம், பிற எல்லாச் சமயங்களையும் தனக்குப் படிகளாகவும், அங்கங்களாகவும் கொண்டு, சிவத்தைப்போன்றே எச்சமயத்தின் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பது. இங்ஙனம், இச்சமயம் ஆன்ம கோடிகளின் முடிந்த உய்விடங் காட்டுமதாக விளங்குதற்பொருட்டுப் பற்பல நூல்களைப் பெற்றுள்ளது. இவ்வாறு பற்பல ஆகமங்களை இது பெற்றிருப்பினும், மற்ற நூல்களைப்போல, ஒன்றுக்கொன்று மாறுபாடு உடையதாகவேனும், முன்னுக்குப்பின் முரண்பாடு கொண்டதாகவேனும், பலப்பல குறிக்கோள்களைக் கொண்டதாகவேனும் இல்லை. பொன் என்பது ஒரு பொருள். அதனைத் தெரிவிக்கும் வார்த்தைகள் கனகம் முதலியவைகளாகப் பல உள்ளன. வார்த்தைகள் பலவாக இருப்பதனால், பொருள் பலவாக ஆகிற தில்லை. மேலும் ஈழம் என்ற அழகானதொரு தமிழ்ச் சொல்லும் ஆசிரியர் தந்துரைத்துக் காட்டுவதால், வேறு வேறு மொழிகளால் பெயர்கள் அமையப்பெற்றிருப்பினும், பொருள் ஒன்றேயாக உள்ளதேயல்லால் பலவாக ஆவதில்லை என்பதையும் நமக்கு அறிவிக்கின்றாராவர். இதனால் ஒருவாறு மொழிச்சர்ச்சைக்கும் முடிவு காட்டப்பட்டிருத்தல் அறியலாம். நமக்குப் பொருட்பேறுதான் முக்கியமானது. மொழிகளின்

ஏற்றத் தாழ்வுபற்றிய மோதுதல் முக்கியமன்று. இதனை ''பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும் - அண்ட முதலான் அறஞ்சொன்ன வாறே'' என்னும் திருமந்திர மொழியாலும் உணரலாகும். மற்றும் அந் நூல், ''தமிழ்ச்சொல் வடசொல் எனும் இவ்விரண்டும் உணர்த்தும் அவனை உணரலும் ஆமே'' என்றும் கூறித் தேற்றுதல் காணலாம். இவ்வாறே, சைவாகமங்கள் எண்ணிக்கையிற் பலவாக இருப்பினும் அவை யாவும், முடிந்த உள்பொருளாம் பதி பசு பாசங்களின் பொதுவும் சிறப்புமாய இலக்கணங்களையே ஒருமுகமாக உரைத்துத் தெருட்டுகின்றன. இதனை, ''பதி பசு பாசம் எனப் பகர்மூன்றில் - பதியினைப்போல் பசு பாசம் அநாதி - பதியினைச் சென்றணுகாப் பசு பாசம் - பதி அணுகிற் பசு பாசம் நிலாவே'' என்று திருமூலர் உபதேசம் வைத்தலால் உணரலாம். மற்றும், விதி முறை கிளக்கும் என்றமையால் பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் என்னும் முறைபற்றி இவ்வாகமங்கள் ஓதுவன எனத் தெரியலாம். மற்றும், சரியையாதி நால்விதிகளையும் இவ்வரி குறிக்கவல்லதாம். அன்றித் தீட்சை விதிகளைச் சொல்வதாகக் கொள்ளலும் கூடும்.

**வாய்ந்த நூல்கள் ஆய்ந்தனராகி**
**ஆசானுகி விசிய சமத்துடன் (உள்ள பெரியோர்கள்);**

மேலே கூறப்பட்ட சிறப்பமைந்த சைவாகமங்களை முறைப்படி ஓதியுணர்ந்து உரைத்து ஆராய்ந்தவர்கள் சிவநலப் பெரியோராவர். இந்த ஆகமங்களே ஆன்மாக்கட்கு உய்தி தருதற்குச் சிறந்தவை என்பது வாய்ந்த நூல்கள் என்பதால் அறியப்படும். இந்த

நூல்கள் கண்மூடிக் கதறப்படுவன அல்லவாய்க் கற்றல் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்கிறமுறை யில் அநுபவ பூர்வமாக அமைபவை என்றும் நாம் தெரிதல்வேண்டும். இத்தகைய கருத்துக்களை, "வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்" என்றும், "பூசுரர் நான்மறை மட்கலம் நிகர்க்கும்; வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே" என் றும் பெரியோர்கள் கூறுவதால் அறியலாம். இவ் வாறான நூல்களை ஓதியுணர்ந்து அடங்கியதே அல்லா மல், அந்நூல்கள் சொல்லியமுறையிலே ஒழுகும் பொருட்டாகச் சமயம் - விசேடம் - நிருவாணம் - அபிஷேகம் என்கிற நால்வகைத் தீட்சைகளையும் பெற்றுப் பெருமையுடன் திகழ்பவர்கள் சைவநலம் கனிந்த ஆசிரியர்கள். இவ்விதமாக ஞானநூல்களை ஆய்ந்தமையால் அறிவும், தீக்ஷைகளை முறையே பெற் றுள்ளமையால் ஒழுக்கமும் சான்ற சான்றோர்களாக விளங்கிய பெரியோர்கள்......அவைக்கண் கூடலுற் றனர். மற்றும், இப்பெரியோர்கள் மெய்ஞ்ஞானம் கைவரப்பெற்றவர்களாதலால், விருப்பு வெறுப்பு எனப்படும் பேதஞானம் அறவே நீங்கப்பெற்றுச் சமரச போதஞானம் பொலியப்பெற்றும் விளங்கினர். இத்தகையோரே வித்தகர் எனப்படுவர். எந்த ஒரு வியாஜம் பற்றியேனும் தம் உள்ளத்தே விருப்பு வெறுப்பு உணர்ச்சி மெள்ளப்புகுத வழிதேடுமென இவர்கள் அறிந்தவராதலால் இப்பேத உணர்வு திரும் பவும் தலைகாட்டாது ஓடச்செய்தனர் என்பதை ஆசிரியர் வீசிய என்ற சொல்லழுத்தத்தால் விளம்பு கின்றாராவர். இவ்வரிகளால் நாம் அறியக்கிடப்பது யாதெனில், சைவாகமங்களை முறையே ஓதியுணர

வேண்டும் என்பதும், சிவதீக்ஷைகளை அடைவே பெற்றொழுகவேண்டும் என்பதும், யாவும் சிவமயம் என்கிற சமரசத்தன்மை பெறவேண்டுமென்பதும் ஆம். இனி, இவ்வாறான ஆன்றோர்கள் எப்போது எங்கே குழுமினர் என்பதை ஆசிரியர் கூறுகின்றமை காணலாம்.

ஏழஞ்சு இருநூறு எடுத்த ஆயிரம்
வாழும் நல் சகனம் மருவா நிற்ப
பொன் பொது மலிந்த அற்புதன் ஆனி
ஆரும் விழவில் பொன்தேர் ஆலயத்து...இருப்ப ;

இவ்வரிகளால் ஆசிரியர், இந்த நூலினைத் தாம் செய்யப்புகுந்த காலத்தைக் குறிப்பிடுகின்றாராவர். சகனம் என்பது சகாத்தமாம். அது இங்கு 1235 ஆம் ஆண்டினைத் தெரிவிப்பதாம். இதனோடு 78 ஆண்டுகளைக் கூட்டின் (1235 + 78) = 1313 கி. பி. ஆண்டு ஆகும். இந்த ஆண்டு நடைபெறுகையிலே மேற் கூறப்பட்ட பெரியோர்கள் கூடியிருக்கலானார்கள். மற்றும், இப்படிப்பட்டதொரு வருஷத்திலே ஆனி மாதத்திலே சிதம்பரத்திலே நடராசப்பெருமானுக்கு நடைபெற்ற திருவிழா நாட்களிலே ஆறும் விழா நாளின்போது இவர்கள் கூடலாயினர் என்பது இங்குத் தரப்படுகின்றது. மேலும், இவர்கள் பொலிவினை உடைய தேர்மண்டபத்திலே கூடினர் என்கின்றார் ஆசிரியர். இவர்கள் கூடிய காரணம், மக்கட்கு உண்மைப்பொருளை உணர்த்தும்பொருட்டே ஆகும். தெய்வமுன்னிலையில் இவர்கள் கூடிப் பேசுவதால் நடுவுநிலை பிறழாமுறையில் உண்மையுணர்த்தும் பணியினை மேற்கொண்டுள்ளார் என நாம் தெரிதல் பொருந்தும். நடுவுநிலைத்தன்மை என்பது ஞானசாதனைக்கு

மிகவும் இன்றியமையாத ஒன்றாகும் என்ற கருத்தை, "நடுவு நின்றார்க்கன்றி ஞானமும் இல்லை"; "நடுவு நின்றார் சிலர்; ஞானிகள் ஆவோர்" என்கிற திருமந்திர வரிகளால் தெரிந்து கொள்ளலாம். இந்தக் குறிப் பினைக் குறிப்பாகத் தருவதே பொன் பொது மலிந்த அற்புதன் என்ற இடம். பொது என்னும் சொற் பொருள் ஈண்டுக் கருதத்தக்கதாம். தேர்த்திருவிழாவும் பொதுநீர்மை புலப்படுத்தும் கருத்து உடையதே. ஆகவே, பக்ஷபாதமின்றி மக்கட்கு உண்மையுணர்த் தும் பொருட்டாக ஞானிகளாகிய இவ்வான்றோர்கள் குழுமினர் என்க. இதனால், விழாக்காலத்தினை ஞானி கள் எவ்வாறு மக்கட்குப் பயனுடையதாகச் செய்வது வழக்கம் என்பது புலப்படும். இனியும், அவ்விதம் விழாக்கள் பயனளிப்பன ஆக வேண்டுவோம்!

ஏறு *எண்மர் நிரையில் இருப்ப :

புறச்சமயச் சார்பில் மாயாவாதி - ஐக்கியவாதி என்னும் இருவரும், அகச்சமயச் சார்பில் பாடாண வாதி - பேதவாதி - சிவசமவாதி - சங்கிராந்தவாதி - ஈசுவர அவிகாரவாதி - நிமித்தகாரண பரிணாமவாதி என்கிற அறுவரும் ஆக எண்மர் தேர்மண்டபத்தில் ஏறி வீற்றிருந்தனர் என்னலாம். வரிசையாகவும் இவர்கள் அமர்ந்திருந்தனர். அறுவர் என்பது பாட மாயின், அகச்சமயத்தவர் அறுவரைமட்டில் குறிப்ப தாகக் கொள்ளலாம். தேர் என்னும் சொல் இரதம் என்றும் (உண்மை) தேர்தற்குரிய என்றும் பொருள் குறிக்கக்கூடும். பேசுவோர்க்கு இக்காலத்து மேடை

*அறுவர் என்றும் பாடம் உண்டு.

அமைப்பதுபோலத் தேர்மண்டபங்கள் பேசுவோர்க்கு மேடைகளாகப் பயன்பட்டமை தெரியலாம். 'பொது மக்கள் அனைவரும் கூடியிருந்து கேட்டற்கு இவ் விடம் சால வசதியானதென்க. இனி, எண்மரில் இரு திறத்தினரை இன்னரெனக் குறிக்கிருராவர் ஆசிரியர். இதனுல் இஃதொரு சொற்போர்க்களம் என்பது பெறப்படும்.

**மயங்கு வாத மாயா வாதி**
**முயங்கிட ஒருதலை :**

இல்லாதது எப்போதும் இல்லாததுவே. உள்ளது எப்போதும் உள்ளபொருளே. இல்லாததிலிருந்து உள்ளது பிறவாது. உள்ளது சூட்சுமப்படுதலே இல்லாதது என்ற சொல்லால் கூறப்படும். இந்த வழக் கத்துக்குச் சற்காரியவாதம் என்று பெயர். இது சித்தாந்தத்துக்கு அடிப்படையாவது. எந்வாதமும் இதனை மாற்ருமலும், இதனின் மாருமலுமே பேசப் படுவதுதான் ஒழுங்கு. இதுவே நியாயம் எனப்படும்.

ஆனுல் மாயாவாதிகள், உலகியலுக்கு ஒருவித மாகக் கூறிவிட்டு அதனையே பாராமார்த்தத்துக்கு வேறுவிதமாக மாற்றிக்கூறுவர். முன்பு உண்டு என்ற தனையே பின்பு இல்லை என்பர். இவ்விதமான வாதம் கேட்போர்க்கும் மயக்கம் தரும். ஆதலால், ஆசிரியர் இதனை மயங்குவாதம் எனலானுர். இங்ஙனம் ஒரு தன்மைப்படாத வாதத்தைக்கொண்டோர் மாயா வாதி எனப்படுவர். இத்திறத்தோர் ஒருபுறம் அமர்ந் திருந்தனர் ஆவர். இங்ஙனம் கொள்கையில் எவ்வளவு மாறுபாடு உடையவர்களும் உண்மை காண்டற்கண் பகைமை இன்றி நகைமுகத்தோடு ஒருங்கு கூடுவது

பண்டை வழக்கமாம். இம்மரபு உண்மையை மணி மேகலை என்னும் நூலில் உள்ள 27-ஆம் காதையாகிய சமயக்கணக்கர்தம் திறங்கேட்டகாதையாலும் அறியலாம். இந்நாட்களிலும், இத்தகைய நவையறு நற்பொருள்பற்றிய உரையாடல் பகைமை பாராட்டாது நிகழுமேல் நனிநலம் பயக்கும் என்க!

முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெய் அம்பதி திகழ்
மெய்கண்டவன் அருள் கைகண்டவர்களில்
ஒருவர் ஒருதலை மருவி இருப்ப :

மற்றொருபுறத்தே ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாருடைய திருவருளைப்பெற்ற அடியார்களிலே ஒருவர் அமர்ந்திருக்கலாயினர். (ஈண்டு ஒருவேளை தமது ஞானாசாரியரையே நினைந்து கூறுகின்றாரோ இவ் வாசிரியர் என நாம் கருத இடந்தருகின்றது என்னலாம்.) ஸ்ரீ மெய்கண்டதேவர் வீற்றிருந்து சிவஞான போத சாத்திரம் இயற்றியதும் உபதேசித்ததுமாகிய தலம் திருவெண்ணெய்நல்லூர் ஆகும். இவ்வூர் தென் பெண்ணையாற்றின் கரையது. இப்பெண்ணையாறு மணிகளை வரன்றிப் பாய்ந்துவருவது. இஃது உயர்ந்த மலையிலிருந்து தோன்றி வருவதால் மலையிடத்தே வளர்ந்து முதிர்ந்த மூங்கில்கள் வெடித்துச் சிந்திய முத்துக்களை அடித்து வரலானது. (இங்கு முக்கண் மூர்த்தியாகிய முத்தினை அகத்தே அடக்கிய மூங்கிலை நினைவுகூர்தல் தகும்.) முத்துக்களைப் பக்குவப்படுத்தி வெடித்து வெளிப்படுத்திப் பெண்ணையாற்றின்மூலம் உதவுகிறது மூங்கில். இங்ஙனமே, பரசிவம் - பரை - சதாசிவம் - ஸ்ரீகண்டதேவர் - நந்தியெம்பெருமான் - சனற்குமாரர் - முதலாம் மெய்கண்டார் - பரஞ்சோதி

முனிவர் ஆகிய ஆசாரியமூர்த்திகளால் வழிவழியாக வெளிப்படுத்தப்பட்ட சைவாகம மணிகளை இத்தலத்திலே எழுந்தருளிய ஸ்ரீ மெய்கண்டதேவநாயனார் சிவஞானபோத நூலிலே கோத்து வெளித்தந்தருளினாராவர் என்கிற உள்ளுறையினை ஈங்கே நாம் கொள்ளுதல் ஒல்லும். இத்தகைய பரமாசாரியர் எழுந்தருளிய தலமாதலின் அம்பதி எனச் சிறப்பித்தாராவர்.

இவர் அருளிச்செய்த ஞானசாத்திரம் சிவத்தினைப் போலவே அழியாது விளங்கும் இயல்பினதாதலின் திகழ் என்றார். ஞானபரம்பரைப் பாட்டனார் பெயராகிய சத்திய ஞானதரிசனிகளுடைய திருப்பெயரையே இவரும் பூணப்பெற்றமை தோன்ற மெய்கண்டவன் என்றார். இவர்பால் உபதேசம் பெற்றவர் ஸ்ரீ அருள்நந்தியார் ஆதலால் அருள் என்ற சொல் கூறி வழிமுறை காட்டினாராவர் ஆசிரியர். இவ்வருள் நந்திதேவர் திருக்கரத்தாலே தீக்ஷிக்கப்பெற்றவர்களில் ஒப்பற்ற பெருமை படைத்தவர் ஸ்ரீ மறைஞான சம்பந்தர் ஆவர். இவரது சீடரே நம் ஸ்ரீ உமாபதிசிவம். இவையெல்லாம் அருள் கைகண்டவர்களில் ஒருவர் என்ற தொடரில் உட்கிடக்கையாம் பொருளாகும்.

மருவி இருப்ப என்பதனால், மாயாவாதி தவிர்ந்த ஏனைய பலரின் மாசற்றதன்மை உணரப்படும். இருந்து வாதித்தலும், பேசுதலும், உபதேசித்தலும் பண்டையோர் முறையாகலின் இருப்ப என்றார். இதனால் நின்று கேட்டல் அக்காலவழக்கென ஊகிக்க இடனுண்டு. இந்தக் கூட்டத்திலே (பேரவையிலே) பிறவிக்கு அஞ்சும் ஒருவன் வந்து கேட்டு நிற்றல் இனிக் கூறப் படுவதாம்.

**வஞ்சப் பிறவிக்கு அஞ்சி வந்து ஒருவன் ஏது இறையருள் என :**

இவ்வாறு சான்றோர்கள் வீற்றிருக்கும் வேளையிலே, இவர்கள்பால் ஒருவன் வந்து நின்றான். அவன் புறச்சமயங்களிலெல்லாம் பல காலமாக உழன்று உழன்று உடல் மூத்தவன். இறப்பின் விரைவினை எண்ணிய அச்சங்கொண்டவன். இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ என்கிற ஏக்கம் அடைந்தவன். யாக்கை நிலையாமை முதலிய பிறப்பின் வஞ்சங்களையெல்லாம் நெஞ்சிற்கொண்டு அஞ்சு அவத்தையுற்றவன். இத்தகைய பக்குவம் உடைமையால் இந்தச் சாது சங்கத்தினை ஆர்வத்தோடு மேவலுற்றானாயினன், தொழுதனன். பின்னர், தம்பிரானார் திருவருள் எத்தகையது என வினவினான். இங்கே, ஞான நூல் கேட்டற்கு விரும்புபவர் எத்தகைப் பக்குவப்படவேண்டியுள்ளதென நாம் காணலாகும். பிறவியின் வஞ்சத்தைக் கண்டு, நிலையாமைகருதி அஞ்சுதலும், ஞானியரை நாடி அடையும் அவாவுமே பக்குவிகட்கு அடிப்படைத் தகுதி என்பது நாம் இங்கு அறிதல் தகும்.

ஒருவன் என்றமையால் சுற்றம் முதலாம் பற்றறுத்தவன் என்றுணரலாம். இச்சுற்றப்பற்றும் புறச்சார்பு அறுகை, முன்னதனை அடுத்து வேண்டுவதாம் தகுதி எனல்பொருந்தும். இங்கு, "ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும் - ஊர்த்துறைக்காலே ஒழிவர்"; "தேய்ந்தற்றொழிந்த இளமை"; நின்றுணரார் இந்நிலத்தின் மனிதர்கள் - பொன்றுணர்வாரிற் புணர்க்கின்ற மாயமே" என்பனவாகிய திருமூலர்

வாக்குகள் நோக்கல் நன்றும். நம்செயலால் ஆவது ஒன்றுமில்லை என்ற எண்ணம், மேலே சொன்ன வண்ணம் கண்டு ஓடிவந்தவன் உள்ளத்து எழுந்தமையால் இறைவன் திருவருட்செயலை முற்றும் தெரிதற்கு நயந்தானுயினன். ஆதலின், ஏது இறையருள் என்று கேட்கலுற்றுன் என்கிறுர் ஆசிரியர். இதனை ஏது இறை ஏது அருள் எனக் கேட்டானுகவும் கொள்ளலாம். இறை இன்றி அருளில்லையாதலாலும், அருளையின்றி இறையை எய்துதல் இல்லையாதலாலும். தானொருவன் இல்லையாயின் இவையிற்றை அறியக் கூடியதொன்றில்லை யாதலாலும், இவ்வாறு சுருக்கமாக வினவினுன் என்க. இதனில் முப்பொருளுண்மையும் பொதுளுதல் காண்க. ஆகவே, இந்த முப்பொருள்களின் உறவுச் சம்பந்தமே (Relativity theory) நாம் அறிதக்க பொருளாம் என்றல் புலப்படும்.

ஈது எனும் மாயாவாதி (யை):

கேட்ட பக்குவிக்கு முதலிலே மாயாவாதி தன்னுடைய கொள்கையை இதுதான் என்று கூறி விளக்கினுன். (உயிர் குணிப்பொருளன்று; குணமே. மாயை உண்டென்றும் இல்லையென்றும் சொல்ல முடியாத அநிர்வசனம். பிரமத்தியல்பும் அநிர்வசனமாம். பிரமம் அஞ்ஞானத்தால் ஜீவன் எனப்படும். ஜீவன், சாதனமூலம் அறியுங்கால் பிரமம் ஆகிறது. பிரமப்பொருள் ஜீவனுல் அடையப்படும் தனிப்பொருளன்று. பிரபஞ்சநீக்கம் சூனியமாம்.) இப்படிப்பட்ட விஷயங்களை மாயாவாதி விளக்கி உரைத்தனன். இதன் விரிவு பின்னர் நூலில் பேசப்படும். மறுக்கவும்படும்.

அயலினர் மறுதலைத்து அருள்தர :

மேல் மாயாவாதி கூறிய கொள்கைகளை அயலில் இருந்தவர் மறுத்துத் தம்முடைய கொள்கையைக் கூறி இதுவே பொருள் என்று காட்டினர். இவர் ஐக்கியவாதர் ஆகல்கூடும். இவர் முதலோர் கூற்றுகள் பின்னர் நூலுள் விரித்து உரைத்து மறுக்கப்படும்.

மற்றவர் அயலினர் அவருரை மறுத்துச் சொற்றர :

மேற்கூறப்பட்ட ஐக்கியவாதியாசாரியர் கூறிய பின்னர் அவராருகே இருந்த அகச்சமயவாதியொருவர் முன்னவர் பேச்சினையும் கொள்கையினையும் மறுத்துத் தம்முடைய கொள்கையினைப் பேசுவாராயினர். இங்கெல்லாம் உரை எனவும் மறுத்து எனவும் ஆசிரியர் கூறிப்போவதை நாம் கருதினால் இந்த உரைகளையே சங்கற்பம் எனவும், மறுப்பையே நிராகரணம் எனவும் பேரிட்டுத் திரட்டி நூலாக்கியளித்துள்ளார் என்பது படும்.

அயலினர் அவரும் தொலைவுற்று :

இப்படியே, அகச்சமயவாதியர் ஒவ்வொருவரும், முன்னவர் கொள்கையைப் பின்னவர் மறுத்துப் பேசினர். எனினும், இவர்களுடைய வாதங்கள் ஒன்றனை ஒன்று வீழ்த்தியதனால் தொலைவுற்றன. தொலைவுற்று என்ற சொல்லால் அவர்தம் கொள்கைகள் நிலையுதலிலவாம் இயல்புடைய ஆயின என்கின்றார்.

இன்னே எவரும் முன்னே கழிவுழி :

இந்தவிதமாக, ஒருவரை ஒருவர் கண்டித்துப் பேசியதனுலே எட்டுவிதத்து வாதியரும் தம்முள் கொண்ட பேதத்தால் தள்ளுண்டனர்.

ஆங்கு அயல் இருந்த அருளினர் :

முடிவாக ஸ்ரீ மெய்கண்டதேவர்சந்தானத்து ஓர் ஆசிரியர் ஆவார் எடுத்துப்பேசலுற்ருர். இவர், எல்லாம் சிவத்தினது திருவருள் என்று எண்ணுபவரேயல்லால், முன்பு பேசியவர்கள்மீது ஏதும் காய்ச்சல் கொண்டவர் அல்லர். வாதமிடுவோர்க்கும் இந்த அருளிரக்கமே முதன்மையாகவேண்டும் என்பதை அருளினர் என்ற சொல் தெரிவிக்கும் இயல்பிற்று.

அழகிது; நீங்கள் சங்கற்பம் நிராகரித்தமை என :

மேல் கூறப்பட்ட அருளாளராகிய சித்தாந்த சைவாசாரியர் அவர்களைப்பார்த்துச் சினவாமல், அவர்களைத் தம்முடன்படுத்துதற்குத் தட்டிக்கொடுக்கும் முறையில், நீங்கள் வாதித்தவை யாவும் அழகாயிருந்தன (இது குறிப்புமொழி); ஆனுல் உண்மையாயில்லையே; உண்மையை உயிராகவைத்துக்கொண்டு வாதத்தை உடலாகக்கொள்ளவேண்டும்; அதுவே தர்க்கவாதமுறை; அவ்வாறன்றி நீங்கள் உண்மையை இன்னதெனத் தெளிவாகச் சாதித்துக் கூருமல் வாதத்திலேயே - ஒருவரை ஒருவர் வீழ்த்துதலிலேயே - கருத்தாகிப் பேசினீர்கள்; ஆதலால் உங்கள் சங்கற்பமும், நிராகரணமும் உறுதியிலவாயின என்று கூறிவிட்டுத் தாம் ஒருவரே அவர்கள் ஒவ்வொருவருடைய சங்கற்ப முறைமையினேயும் எடுத்துக்காட்டி,

அவற்றை நிராகரிக்கும் பான்மையினையும் சொல்லிக் காட்டினார். (இந்த விஷயத்தைத் தானே அருகில் நின்று கேட்டுக் கேட்டபடி இந்த நூல்வடிவாகச் செய்தளிக்க முற்பட்டதை இவ்வாசிரியர் இனிக் கூற லுறுகிறார்.)

**மற்று அவர் உரைத்த சொல் தரு பொருள்கொடு :**

இப்பால், அந்த அருளாசான் சொல்லியருளிய சொல்லையும் அவர் கூறியருளிய உண்மைப் பொருளை யும் இந்நூலை ஆக்குதற்குக் கருவிகளாகக்கொண்டு—

இதனால் ஸ்ரீ மறைஞானதேசிகர் சொற்களையும், பொருளையுமே தாம் இந்நூலில் எடுத்தாள்வதாக ஆசிரியர் அறுதியிடுகின்றாராவர். இங்ஙனம் சங்கற்ப நிராகரணம் புரிகையில் தம் ஆசிரியர் எவ்விதமான தருக்கமுறையில் எவ்வகை உவமங்களைக் கையாண்டு கேட்பார்க்கு மயக்கம்தெளிந்து அருளியல் புலப்படப் போதித்தார் என்பதை இனி வரும் வரிகளால் கூறு கின்றார்.

**வாத செற்ப விதண்டை ஏதுவும்...திகழ்தர :**

ஞானம் என்பது சப்தத்தினால் உண்டாவது. சப்தமாவது பேச்சு. இந்தப் பேச்சு என்பது நண்பர் களை விலக்காத இடமாகவும், விரோதிகளை விசிக்கும் (கட்டும்) இடமாகவும் இருக்கவேண்டும். இதுவே பேச்சுமுறை எனப்படும். இப்பேச்சு முறையைப் பற்றியே நியாயம் பிறக்கிறது. ஆதலால், பேச்சு முறைபற்றிய நியாயத்தினை எடுத்துரைக்கும் நூலைத் தருக்கநூல் என்பர். பேச்சை முறைப்படுத்துப்

பேசுவதற்கான வழிவகைகளை இந்நூல் எடுத்துரைக்கிறது. இதனில் நாம் பிரமாணம் முதல் நிக்கிரகத் தானம் வரை கூறப்பட்டிருத்தலைக் காணலாம். இவ் வகைகளில் வாதம் - சற்பம் - விதண்டை - ஏது என்பனவும் அடங்கும்.

இவற்றுள் வாதம் என்பது விகாரம் என்றும் விசியுழி என்றும் இரண்டாம். உண்மைப்பொருளை அறியும் விருப்பமுள்ள இருவருக்குள் உண்டாகும் வினா விடையாகிய கதை வாதம் (Argumentation) எனப்படும். இது தத்துவ நிர்ணயத்துக்குப் பயன்படுவது. ஆதலால் பெரும்பாலும் குருசீட சம்வாதமாக இருக்கும். இது குன்றக்கூறல் முதலிய எட்டுக் குறைபாடுகளையும் நிக்கிரகிப்பதற்கு இடமாகும். இது பொது லக்ஷணம். இனி விகாரம் எனப்படுவது குருவும் சீடனும் அல்லது ஒத்த பக்ஷபாதன் ஆகிய இவர்கள் மாறுபாடு இல்லாமல் பிரமாணங்களில் (proof) உண்டாகிய அர்த்தங்களைத் தர்க்கித்து அதில் உண்டான குற்றங்களை நீக்கிச் சத்தியமான அர்த்தத்தை நியமிப்பதாகும்.

விசியுழி என்பது சற்பம் என்றும் விதண்டை என்றும் இரண்டு திறப்படும். இவற்றுள் சற்பம் என்பது (Sophistry) யுக்திப் பிரமாணங்களில் வல்ல பண்டிதர்களின் வாதமாம். அது இருபத்திரண்டுவித தோல்வித் தானங்களில் அகப்பட்டதை இடமாகக் கொண்டு நடைபெறும். ஆகவே, அயலார் கொள்கையை நிராகரிப்பதும், தம்கொள்கையை ஸ்தாபிப்பதுமாயுள்ள வாதமே சற்பமாதல் தெரியலாம். இது ஒருவரை ஒருவர் வெல்லவேண்டிப் புரிதலாம்.

விதண்டை (Cavilling) என்பது மூர்க்கர்களுடைய வாதமாம். இது அயல்பக்கத்தைத் தூஷித்தல் ஒன்றே உடையது. இவ்வாறு பேசுவோரை வைதண்டிகர் என்பர். இவ்வகை வாதத்தில் பிறரது கோட்பாடு மறுக்கப்படுவதே யன்றித் தமது கோட்பாடு நிலை நிறுத்தப்படுவதில்லை என்பர். இனி, ஏது (Reason) வாவது துணிபொருளுக்கிடமான பக்கம் ஆம். இதன் விவரம் அளவைப் பிரமாணங்களிலே விதிக்கப்பட்டிருக்கும். அளவை என்பது காட்சியளவை முதலாகப் பத்துவகையாகப் பேசப்படும். விவரம் தருக்க முதலிய நூல்களால் அறியப்படும்.

ஓது நால்வகை உவமையும் திகழ்தர :

விளங்காத பொருளை விளக்குதற்கண் உவமையைக் கையாளுவர். இந்த உவமை (Comparison) அலங்கார நூலில் "பண்பும் தொழிலும் பயனும் என்றிவற்றின், ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த்து, ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை" என்று கூறப்படுகிறது. இது வினை, பயன், மெய், உரு என்ற நால்வகை உடையது. "வினை பயன் மெய் உரு என்ற நான்கே – வகைபெற வந்த உவமத் தோற்றம்" என்பது தொல்காப்பியம். இவற்றின் விரிவுகளையெல்லாம் இலக்கண நூல்களால் அறியலாம். மேலே கூறப்பட்ட தர்க்க முறைகளையும், இங்குக் கூறப்படும் உவமை வகைகளையும் கையாண்டு பேச்சு நிகழ்த்தினால் உபயவாதிகளையும் சம்மதிக்கச்செய்யும் சித்தாந்தம்நிலைபெறும். சாத்திரமுணர்ந்தவன் பிரமாண முடைமையால் அங்கீகரித்த அர்த்தம் சித்தாந்தம்

(Established truth) எனப்படும். இந்த முறைகளை யெல்லாம் ஸ்ரீ உமாபதிசிவம் இந்நூலிற் கையாண்டு கூறுகின்றாரென அறியலாம்.

**அருள் சேர் மாந்தர் வெருள் சேராமல் :**

முன்பே நண்பராக உள்ளவர்கள் பேச்சின் தவற்றினால் விரோதிகளாவதுண்டு. இம்மாதிரியான பேச்சு மிகவும் தீமை பயப்பதாகும். "பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே நல்லார்தொடர் கைவிடல்" என்ற குறட்பாவும் இத்தீமைக்கு அளவு கூறுவதாகும். ஆதலால், முன்பே திருவருளுக்கு உட்பட்டு வாழும் சித்தாந்தியர்க்கு மலைவு என்கிற அச்சம் உண்டாகாதவிதமாக இவ்வாசிரியர் கூறுகின்றாரென்க. தருக்கமிடுவோர், தம்மவரைத் தகைந்துகொள்ளுதலே முதற்கண் போற்றவேண்டும் என்பது இவ்வரியால் உணரப்படுவது ஆகும்.

**தர்க்கமும் விடயமும் கற்க :**

இந்நூலைக்கற்பதனால் சித்தாந்த சைவச்சிறப்பினை மாத்திரம்தெரிந்துகொள்வது பயனன்று. பிறர் தங்களை வாதமிட்டு (குதர்க்கமிட்டு)த் திருப்ப முயன்றாலும் அவ்வழிப்படாமல் உண்மைநெறியில் தாம் நிற்றற்கும் இந்நூல் பயன்படும். அன்றியும் அவச்சித்தாந்தம் புகல்வோர்க்குத் தருக்கமுறையில் உண்மை உணர்த்தித் தம்பால் மருவுவிப்பதற்கும் இந்நூல் துணைபுரிய வல்லதாம். இவற்றால், இந்நூலைக்கற்போர் தருக்க உணர்ச்சியும், விஷய உணர்ச்சியும் ஆகிய இரண்டு சிறந்த பயன்களைப்பெறுதல் திண்ணமென்க.

நல் கவி மாந்தர் நக நவிற்றுவன் ஏ:

இவ்வரியால் ஆசிரியர் அவையடக்கம் கூறிக் கொள்ளுகின்றாராவர். எவ்வளவு கற்றவர்களுக்கும் அடங்கிய உள்ளம் அமையப்பெறுதலே சிறப்பாம். "கற்றுணர்ந்தார் கண்டது அடக்கம்" என்பர் பெரியோர். சூரியனொளிமுன்னர் உடுப்போலும், மதிப் பிறைபோலும் தம்மைக் கருதிக்கொள்வதே கல்வியாளர் கடமையாகும் என இதனால் தெரியலாம். ஆகையால், இவ்வாசிரியர் இங்ஙனம், தமது நூல் நல் கவிஞர் நகத்தக்க முறையில் உள்ளதாகும் என்று கூறுகின்றார். நற்கவிஞர்களும் அன்னபெற்றியரே யாவராதலால் அங்ஙனம் இந்நூலைக்கண்டு நகுதல் செய்யார் என்பது நாம் கொள்ளவேண்டியதுணிபாம்.

இதுகாறும், இந்நூல் தோன்றிய வரலாறும், இதன் அமைப்பும் இன்னவிதமானவை என்று கூறப் பட்டன. இனி வரும் பாடல்கள் சங்கற்பமும் - நிராகரணமும் செய்யும்முறையில் சொல்லப்பட்டுள்ளமை காண்போம்.

## செய்யுள்—3.

### I—அ

### மாயாவாதி சங்கற்பம்

நவிற்றிய நிரையின் அவித்தையி னோன்உரை
நித்தன் அறிவன் சுத்தன் அகண்டிதன்
நிருவிகற் பன்நிர்த் தத்துவன் நிரஞ்சனன்
சொல்வகை எவையும் தொடராத் தூய்மணி
வரம்(பு)இல் வேதச் சிரம்தரு பரம்பொருள்
சத்தாய் எவையும் தானாய் அவித்தை
தொத்தா(து) உயர்ந்த தொல்சுடர் மூவா
இன்ன தன்மையன் ஏகன் அனேகன்
கன்னல் பெரும்சுவை தன்னில் பிறவாப்
பெற்றியின் இருந்து பொன்பணி இயல்பினின்
வான்வளி அனல்நீர் மண்மருந்(து) அன்னம்
ஆன தாது ஆ(று)ஐங் கோசம்
தொகுதி யாக்கைப் பகுதிய(து) ஒருபுடை
சுத்தி வெள்ளி ஒத்தன மித்தையில்
தான்எனல் ஆகும் தன்மைத்(து) உலூதையில்
சில்நூல் தகையின் வேற்றுமை மரீஇய(து)
என்னப் பன்மைய(து) எனின்இலை பழம்பூ(த்)
தோல்நார் வயிரம் தரு(த்)தரும் தொன்மையின்
வான்நா ரம்திரை நுரைதரு வாய்மையில்
கூடும் அசித்தைச் சித்(து)உத வா(து)எனின்
நெல்பதர் பலாலத் தில்பரம் தரும்இது
தன்னியல்(பு) என்றும் விளையாட்(டு) என்றும்
முன்உள மறைகள் மொழிதலின் ஒருநூல்

பன்மணி நிலையும் பசுப்பால் எனவும்
பலஅகல் நீரில் அலர்கதிர் எனவும்
கூவல் ஆழி குளம்சிறு குழிகால்
வாவி யாவையும் வருபுனல் எனவும்
அவ்வவற்(று) அடங்கி ஆடிஉள் நிழல்எனத்
தோன்றி யாக்கைநல் காந்தத்(து) இரும்பும்
கனவில் தீங்கும் கங்குலில் கயிறும்
புனலில் தோன்றும் பேய்த்தேர்ச் செய்தியும்
அன்னதும் பின்னர் நல்நிறம் பளிங்(கு)எனப்
பதினால் கரணத்(து) ஒருமூன்(று) அவத்தை
நாளும் நாளும் நயந்துறும் இருபயன்
தன்னில் சாராத் தொன்மைத் தன்மை
தற்பணம் நிழற்கண் குற்றிபாய்ந் தற்றே;
இவ்வியல் பந்தப் பவ்வமது அகல
விண்முதல் தந்த கொண்மூப் படலத்(து)
இருள்அற உதித்த கால்தக விவேகம்
தன்னின் தோன்றிச் சாதகம் அனைத்தையும்
மன்அகம் பிரிப்பும் மடிஇழை வாங்கலும்
போல ஞாலம் பொய்அறக் கழீஇத்
தானே தானாய்த் தன்னில் தன்னைத்
தானே கண்டு தன்நலம் உற்று
வசைஇல் தத்துவ மசிபதத் தெளிவால்
அகமே பிரமம் ஆயினன் எனஅறிந்(து)
அசலன் ஆகிநல் சலம்சல மதிஎனக்
கண்டிடும்; உடலம் விண்(டு)அகல் கடத்து
மங்குலது உடைதர எங்கும்ஆம் தகைத்தே
இவ்வகை உணர்ந்து செய்தொழில் அருத

மடவோர் தாமும் கடனா இயற்றும்
கன்ம காண்டத் தொன்மைப் புரிவால்
தோற்றிய வித்தை மேல்கடை அரணியில்
எழுந்(த)எரி அவற்றை விழுங்கிய(து) என்னத்
தன்ஒழிந்(து) உள்ள தானாய் அழியும்
அந்நிலை அன்றி அழி(வு)அறு முத்தி
ஏயா(து) என்று தன் இயல்பை
மாயா வாதி வகுத்(து)உரைத் தனனே.

**குறிப்பு:** இப்பாடல் முதலாகத்தான் சங்கற்பமும் நிராகரணமும் தொடங்குகின்றன. முதலில் மாயாவாதி தன்னுடைய சங்கற்பத்தை வெளியிடுதலை இந்தப்பாட்டுச் சொல்லுகிறது. இந்தப்பாடல் முதலாக அவ்வவற்றின் பொழிப்புரைகளை இந்த ஆதீனத்து 74 ஆம் வெளியீட்டில் ஒவ்வொரு பாடலுக்கும் தரப்பட்டுள்ள உரையினைத் தொகுத்துக் கொள்ளுதலால் தனித்தனியாக அறியலாம். பக்கம் பல்காமை குறித்து இங்ஙனம் கூறப்படுகின்றது.

*விளக்கம்*

**மாயாவாதம்:** இனி மாயாவாதியின் கொள்கைகளை விவரமாகச் சிவஞானசித்தியார் பரபக்கத்து நூல், பதினைந்து பாடல்களால் கூறுகின்றது. இங்கு ஒருவாறு அக்கொள்கை இன்னதெனத் தெரிதற் பொருட்டுத் தொகுத்துக் கூறப்படுகின்றது. அது வருமாறு:

ஆன்மாவும் சிவமும் என்று கொள்ளாமல் நானே பிரமம் என்னும் இச்சமயம். பிரபஞ்சமெல்லாம் கானல்நீர் போலப் பொய் ஆம். ஞானசொரூபம்,

பிரபஞ்சகாரணம், எல்லையில் இன்பம், அருவம், எங்கும் நிறைதல், சத்து, சுத்தம், குறிகுணமில்லாமை, வேதவரம்பு, நீக்கமில்லாத அநுபூதி தனக்கே உடைமை இவைகளைக் கொண்டது பிரமம் ஆம். சூரியன் பலபாத்திர நீருள்ளே பலவாகக் காணப்படினும், ஆகாயத்திலே அகப்படாதியங்குவது போலவே அளவைக்கு அரியதாய் அறிதற்கு அரியதாய்ப் பிரமம் இருப்பது; ஆன்மா என்பது ஒன்று இல்லை; எல்லாம் பிரமமேயாம். கயிற்றரவு சூரிய உதயத்தால் கயிறாகிய மெய்த்தோற்றப்பட்டுப் பாம்பாகிய பொய்த்தோற்றம் கெடுகிறது; அவ்வாறே பிரபஞ்சமென்னும் பொய்மையும் பிரமஞானத்தினால் தெரியப்பட்டுப் பிரமமே உண்மை என்று காணப்படுவதாம்.

பாரமார்த்தத்திலே பிரமமே மெய்யாம்; பிரபஞ்சம் பொய்யாம். பிரமத்திலே பிரபஞ்சம் தோன்றி நின்று கெடும். ஆதலால், பிரபஞ்சம் அநித்தியமாம். பிரமத்திலிருந்து ஆகாயந்தோன்றிப் பிறகு படிப்படியாக ஆறு தாதுக்கள் தோன்றும். ஆறு தாதுக்களின் கூட்டத்தால் அன்னமயகோசம் உண்டாம். பின்னர் படிப்படியாக ஆனந்தமயகோசம் ஈறாகக் கோசங்கள் தோன்றும். பஞ்சகோச உருவினிடத்திலே பிரமம் பிரகாசிப்பது (கடத்து நீருள் சூரியன்போல); பிரமத்தைப் பாசம் பற்றாது. பிரமத்துக்குப் பாசப்பற்றில்லை.

பலநிற மணிகளை ஊடுருவி உள்ள ஒரேநிற நூல், பல நிறங்கள் கொண்டதாகக் காணப்படினும், அதன் நிறம் பேதிக்கப்படுவதில்லை; அவ்வாறே யோனி பேதங்களால் பிரமம் பேதிக்கப்படுவதில்லை. பிரபஞ்சத்தைப் பிரமம் பொருந்துதலால் ஆன்மபேதங்கள்,

போக அநுபவபேதம், அவத்தாபேதம் காணப்படும். ஆனல் பிரமத்துக்குப் பேதமில்லை. கருவிகளை விட்டு நீங்கினல் தற்சொரூபம் காணப்படும். கூடின் பந்தமாம். பந்தவித்தே மூலப்பகுதி. அது அவித்தையாம். அதனல் சுகதுக்கம் பொருந்தும். இதன் செய்கை கெட்டால் மாயை நீங்கும். மாயை நீங்கினல் ஞானம் உண்டாகும். ஞானம் உண்டானல் பந்தம் இராது; சிவோகம் பிறக்கும். இதுவே உபாதி நீக்கமுறை.

கன்மப்பழக்கத்தால் அந்தக்கரணம் சுத்தியாம். அது ஞானத்தை உண்டாக்கும். அந்த ஞானம் அகம் பிரமம் என்பதை அறிவிக்கும். இந்தத் தானனை தன்மையின் முதிர்ச்சியால் தற்சொரூபம் தெரியும். அசைவு என்பது கருவிகளுக்கே உளது. பிரமத்துக்கு இல்லை. இதுவே பிரமநிஷ்டை கூடும் முறை. இதனல் விளைவதே பிரமஞானம் ஆம். தத்துவமசி மகாவாக்கியத்தினல் அது நீ ஆனய் என்பதல்லாது வேறு ஒரு பொருள் சொல்ல இல்லையாம். இந்தச் சோகம்பாவகத்தை இம்முறையில் அடைய இயலாதார் ஆதனம், கிரியை, யோகம் செய்து திரிவர். பிரமஞானம் கூடுவதற்காகவே சரியை கிரியை யோகம் முதலன செய்யப்படும். இதுவே தவம் எனப்படுவது. இதுகாறும் கூறப்பட்டவைகொண்டு மாயாவாதி மதம் என்பது என்ன கொள்கையதென நாம் கொஞ்சம் தெரிந்து கொள்ளல் கூடும்.

இனி, ஆசிரியர் மாயாவாதி பக்கமாக நின்று அக் கொள்கையைச் சங்கற்பம் செய்யுமுறையில் நமக்கு இச்செய்யுள் மூலம் அறிவிப்பன காண்போம். பொதுவாக மாயாவாதி சங்கற்பம் மூன்று பிரிவுபடும்.

அவை, பெத்த நிலையின் இலக்கணம் - சீவன்முத்தி இலக்கணம் – பரமுத்தி இலக்கணம் என்பனவாம்.

## வரிகள் 1 முதல் 36: பெத்த இலக்கணம்

நவிற்றிய நிரையின் அவித்தையினேன் உரை :

முதல் முதலாக மாயாவாதியின் கொள்கைகளைக் கூறலுறுகின்றவர், அம்மாயாவாதி இன்னதன்மையன் என நமக்கு அறிவிக்கின்றார். மேற்கூறப்பட்ட தேர் மண்டபத்தே கூடியிருந்த எண்மர் வாதியர்களில் மாயாவாதியே முதல்முதல் இறையருள் ஏது எனக் கேட்ட பக்குவிக்குச் சொல்லத் தொடங்கினான். எண்மர்களுள் மாயாவாதி முந்தக்கூறத் தொடங்கியமையால் அவசரம் உடையவன் என்பது பெறப்படும். எல்லாருடைய கொள்கைகளையும் கேட்டிருந்து பின்னே கூறுபவன் பொறுமை உடையவனாவன். வாதத்தில் வெற்றிகாண விரும்புபவருக்குப் பொறுமையே முதன்மையான சாதனமாகும். அங்ஙனமிருந்தும் மாயாவாதி முந்திக் கூறத் தொடங்கியமையால் தன்னுடைய கொள்கையைச் சாதிக்க மாட்டாதவனாவான் என்பதை நவிற்றிய நிரையின் என்ற தொடரால் ஆசிரியர் குறிப்பிக்கின்றாராவர். அவித்தையே எதற்கும் மூலகாரணமென இவ்வாதி கூறுதலால் அவித்தையினேன் என்றார். அங்ஙனம் அவசரப்பட்டும் ஆராயாமலும் கூறும் இவ்வாதியின் கூற்றும் அவித்தையின் விளைவே என்பார் இங்ஙனம் குறிப்பித்தார் எனலும் ஆம். சித்தியாரிலும் இந்த மாயாவாதியை அறிமுகப்படுத்தும் பாடலில் "மானு மதிகேடனுமாய மாயாவாதி" என்றே கூறியிருத்தல்

காணலாகும். ஆதலால், இவ்வாதியின் கூற்றுச் சுருதிக்குப் பொருந்தாதது என்கின்றுராவர். தானே உரைக்கும் என்பர் சித்தியாரிலும். இங்ஙனம், இவ்வாசிரியர், 'அவித்தையினேன்' எனக் குறிப்பிடுவது, மாயாவாதியை இழித்து உரைத்தற்பொருட்டன்று; அவ்வகைக் கொள்கையினை மேற்கொண்டு உண்மையறியப்பெருது வருந்துதல்பற்றிய இரக்கத்தினுலும் பரிவினுலுமே ஆகும் என்க.

## பிரமத்தியல்பு

**நித்தன் அறிவன் சுத்தன் அகண்டிதன்**
**நிருவிகற்பன் நிர்த்தத்துவன் நிரஞ்சனன் :**

பிரமம் மாறுபாடு அடையாத பொருளாகும். பொய்யாம் தத்துவங்களுட்பட்டதன்று. மறைக்கப் படாதது; ஆதலால், அழிவில்லாதது. ஞானமே சொருபமாக உடையது. இயல்பாகவே தூய்மை கொண்டது. எல்லையில்லாதது.

**சொல்வகை எவையும் தொடராத் தூய் மணி :**

மேற்கூறப்பட்ட இயல்பினைப் பிரமப்பொருள் பெற்றிருத்தலால் அதன் சொருபநிலையினை எந்தமொழியின் எந்தச் சொல்லாலும் கூறமுடியாது. உலகத்துள்ள எந்தப்பொருளையும் இன்னதென மொழிகளில் உள்ள சொற்கள் குறிக்கும் ஆற்றலுடையன எனினும், பிரமப் பொருளைக் குறிப்பிடும் ஆற்றல் எந்த மொழியின் எந்தச் சொல்லுக்கும் - நூலுக்கும் - இல்லை ஆகும். சொல்வரம்புக்குப் பிரமம் கட்டுப் படுத்தக் கூடுவதாயின் சொல்லுக்கே பிரமத்தினும்

பெருமை மிகுதிப்படும். ஆதலால், சொல்லிறந்த பொருள் பிரமம் என்ப. பிரமம் சுட்டி அறியப்படத் தக்க பொருளாக இருப்பின் சொல்லாற்றல் அதனை இன்னதெனத் தெரிவித்தற்கண் தொடர்ந்து பற்றும். பிரமம், சுட்டற்றதும் கட்டற்றதுமாதலின் சொற்கள் அதனைத் தொடரவும் இயலாதன ஆயின என்க. இதனால் தொடரா எனப்பட்டது. ஒருக்கால், நமக்கு அன்னியமான பொருளொன்றால் பிரமத்தை உவமித்துக் கூற வேண்டுமாயின் அதனைத் தூய்மணி என உவமிக்கலாம் எனப்பட்டது. சாணையிட வேண்டாததாயும், இயல்பாகவே ஒளியுடையதாயும், அரதனங்கள் யாவற்றினும் பெருமதிப்புடையதாயும், எளிதில் வகிக்கக்கூடியதாயும், ஒன்றினின்று தோற்றுவிக்கப்படாததாயும் திகழவல்லதே தூய்மணி ஆம். அங்ஙனமாயது பிரமம் எனப்படும்.

வரம்பில் வேதச்சிரம் தரு பரம்பொருள் :

அறமெல்லாம் எடுத்துரைப்பது வேதம். அதனைத் தெளிந்த முடிபிட்டுரைப்பதே உபநிடதம். ஆதலால் வரம்பு இல் வேதச்சிரம் எனப்பட்டது. "வேதத்தை விட்ட அறமில்லை; வேதத்தின் ஓதத்தகும் அறம் எல்லாம் உள" என்பது திருமந்திரம். எல்லாங் கூடியும் வேதம், உபநிடதம் என்பன பிரமத்தை வெளியிடுமாத்திரைக்கே உதவும் பெற்றியன ஆம். "அருமறையின் சிரப்பொருளாய்" என்பர் தாயுமானுர். அனைத்து வேதங்களும் ஒருபொருளையே புகழுமாயின் அப்பொருள் யாவற்றினும், யாவரினும் மேலானதாக இருக்க வேண்டுவதொன்றாதலின் பரம்பொருள் எனப்பட்டது.

**சத்தாய் எவையும் தானய் அவித்தை**
**தொத்தாது உயர்ந்த தொல் சுடர் :**

பிரமம் சத்துப் பொருளாயிருப்பது. அதாவது புனிதமும் பூரணமுமாய் எப்போதுமிருப்பதாம். அத்தகைய பிரமமேதான் எல்லா உபாதிகளாகவும் காணப்படுவது. அப்படி எல்லா உபாதிகட்கும் தானே இடமாயிருந்தும் அவற்றின் தாக்குதல் ஒரு சிறிதும் இல்லாதது பிரமம். சூரியன் எப்போதும் ஒளிருகிறது; எல்லாப் பொருட்காட்சிக்கும் தானே காரணமாயிருப்பது. இருட்டு ஒருபோதும் பற்றமுடியாதது. இது பௌதிக சூரியன்தன்மை. இதனினும் மேலானதும் இதற்கும் மூலமானதுமாகிய சுடராயிருப்பதே பிரமம் ஆகும். இதற்கொரு தொடக்கமில்லை ஆதலின் தொல் சுடர் எனப்பட்டது.

**மூவா இன்ன தன்மையன் :**

தொடக்கம் இல்லை எனினும் முடிவு இருக்குமோ என்ற ஐயத்தை இத்தொடர் தெளிவிக்கிறது. மூப்படைவதாம் தன்மை இப்பொருட்கு இலது. எனவே ஒருபோதும் கெடாத நிலைமை உடையதே பிரமம் ஆகும்.

**ஏகன் அநேகன் :**

பிரமம் ஒரேபொருளாயிருப்பது. அந்த ஒரு பொருளேதான் பல பொருட்களாகவும் காணப்படுகிறது. உண்மையுணர் நிலையில் ஒரே பொருளாம். மயக்க நிலையில் பல பொருட்காட்சியதாம் என்ப. இதனல் பிரமத்தையன்றி வேறு ஒரு பொருளும்

இல்லை என்பது கருத்தாம். இது ஞாதுரு ஞானபேதம் இல்லை என்பதை உணர்த்தும். இதுகாறும் கூறிய செய்திகளைச் சித்தியாரில் "அறிவாய் அகில காரண மாய்" என்னும் பரபக்கத்துப் பாடலால் அறியலாம்.

**கன்னல் பெருஞ்சுவை தன்னில் பிறவாப்**
**பெற்றியின் இருந்து:**

இன்ப அனுபவமானது இன்பத்தைத்தரும் பொருளினிடத்தும் இருக்குமாயின். அதனை அனுபவிப் போர்க்கு இன்பம் குறைபடும். ஆதலால் இன்பத்தை உற்பத்தி செய்துதரும் எதுவும் இன்பத்தை நுகருந் தன்மை உடைத்தாயிருப்பதில்லை. "அரசன் விரும்பும் பொருளை நீ விரும்பாதே" என்று நூல்கள் நுவலும் செய்தியினகத்தும் இந்தக் கருத்து இருத்தலைக் காண லாம். உதாரணமாகக் கூறப்புகின், கரும்பு என்பது, மிகுந்த சுவையுள்ள இரசத்தை உண்டாக்கித்தரு கிறது. அந்த இரசத்தைப் பருகி அதன் பெருஞ் சுவையை நுகர்வோரே அனுபவிக்கின்றனர். ஆனால், கரும்பு அந்தச்சுவையைத் தான் நுகருகிறதில்லை. இவ் வாறே, பிரமப்பொருளானது தன்பாலிருந்து இன் பத்தைத் தோற்றுவிப்பதாயினும், தான் அவ்வின் பத்தில் தோய்வு பெறுதலில்லை. சுவை உணர்வு சிற் றறிவின் இயற்கை. பிரமம் பேரறிவுடையது. ஆதலின் பிறவாப்பெற்றியின் இருந்து எனப்பட்டது.

**பொன் பணி இயல்பினின்:**

பொன் ஆபரணங்கள் பலவாகவும், பலவகை யாகவும் உள்ளன. என்றாலும், எல்லாம் பொன்

என்னும் ஒரே பொருளிலிருந்தே உண்டாவன. இது ஒன்றே பலவாதல்தன்மைக்குத் தரப்படும் உவமை ஆகும். பிரமம் என்கிற இயற்கையிலிருந்து பிற எல்லாச் செயற்கைகளும் உண்டாகின்றன என்கிற தன்மையை விளக்குவதற்கே மேல் தரபட்ட உவமை கூறப்படுகின்றது.

வான் வளி அனல் நீர் மண் மருந்து அன்னம்
ஆன தாது ஆறு ஐங்கோசத்
தொகுதி யாக்கைப் பகுதியது ஒருபுடை:

பிரமப்பொருள் இரு பகுதியதாக விளங்கவல்லது ஆகும். அவற்றுள் ஒன்று பிரபஞ்சமாம் பகுதியாகும். இப்பிரபஞ்சமாம் பகுதியினாலே பிரமப்பொருள் ஆகாசம், காற்று, நெருப்பு, நீர், மண், ஓஷதிகள், அன்னம் இதனால் உண்டாகும் தாதுக்கள் ஆறும், அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்தமயம் என்னும் ஐங்கோசங்களும் ஆகிய இவையெல்லாம் கூடிய சரீரத்தின் மயமாக இருக்கும். எனவே, பிரமத்தின் ஒரு கூற்றுப்பரப்பு பிரபஞ்சரூபமாக அமைந்துள்ளது எனப்படுகிறது. "தீவளி விசும்பு நிலன் நீர் ஐந்தும் ஞாயிறும் திங்களும் அறனும் ஐவரும் ...... மடங்கலும் மூவேழ் உலகமும் உலகில்உள் மன்பதும் மாயோய்! நின்வயின் பரந் தவை" என்னும் பரிபாடல் வரிகளின் கருத்தும் இங்குக் கருதத்தக்கதாகும். இங்கு மாயோய்! என்ற விளி இருப்பது பிரமத்தின் ஒரு கூற்றின் தன்மையை விளக்குவதாகும் என்க. ஆகவே, பிரமத்தின் பிரபஞ்ச மாயா இயல்பினால் அமைவதே பிரபஞ்சம் ஆகும் என்ப. ஓரறிவுயிரினை உணர்த்துவது மருந்து என்னும்

சொல். ஐங்கோசத் தொகுதியாக்கை என்பது ஆறறி வுயிரினை உணர்த்துவதாம். இங்கு உயிர் வருக்கங்களும் மாயைக் கூறுகக் கட்டுரைக்கப்பட்டிருத்தல் கருதற்பாலதாகும். வடிவப்படும் உயிரைக் குறித்தற்கு அன்னமயகோசம் முதல் ஒன்றின் ஒன்று சூக்குமப்பட்டிருக்கும் ஐங்கோசங்கள் கூறப்பட்டுள்ளன. இது பிரமம் ஏகதேசப்படும் இயல்பினைக் காட்டும் என்ப. "அகில காரணமாய்......பிறியா அநுபூதிகம் தனக்காய் நின்றது அந்தப் பிரமம்தான்" என்னும் சித்தியார்ப்பாடலடிகள் இங்குப் படித்துப் பார்த்தல் விளக்கமளிக்கவல்லதாகும்.

## பிரபஞ்ச இயல்பு (மித்தை)

**சுத்தி வெள்ளி ஒத்தன மித்தையில்:**

வெண்மைநிறமான சிப்பியானது (கிளிஞ்சலானது) கண்ணின் மயக்கத்தால் வெள்ளிப்பணம் போலக் காணப்படுகிறது. அதனை அவ்வாறு காண்பது அறிவுப் பிரமையினுல் ஆகும். அந்த மதிப்பிரமை இருக்கும்வரையில் இப்பி என்கிற உண்மைக்காட்சி தோன்ருது. வெள்ளி என்கிற பொய்ம்மைக்காட்சியே உண்மைக்காட்சியாகத் தோன்றும். இப்படித்தான் உண்மையில் அநித்தியமான உலகம் நித்தியமானதாக நமக்குப் படுகிறது என்ப. கிளிஞ்சலேயும், வெள்ளியையும் மதியுடையான் கனலில் இட்டுப் பரீக்ஷிக்கையில் கிளிஞ்சில் மறைந்து கெடுகிறது; ஆனல் வெள்ளி மறையாமல் பிரகாசிக்கிறது. இந்தவிதமான ஞான சோதனையினுலே பிரபஞ்சம் பொய் என்பதும்படும். இதனை, "இலகு சுத்தி கனல் சேர இன்ரும்; வெள்ளி நின்ற தாம்" என்னும் சித்தியாரடிகளால் தெரியலாம்.

## பிரமமும் பிரபஞ்சமும் தொடர்புடைமை

**தான் எனல் ஆகும் தன்மைத்து:**

மேலே சொல்லப்பட்டதான பொய்யாம் பிரபஞ்சமானது அந்தப் பிரமமே என்று சொல்லப்படத் தக்கதான தன்மை உடையது. வெண்மைத்தன்மை இப்பியினிடமும் வெள்ளியினிடமும் ஒன்ருயிருத்தலை நாம் இங்குத் தெரிதல் தக்கதாகும்.

## பிரம பிரபஞ்ச வேற்றுமை

**உலூதையில்**
**சில் நூல் தகையின் வேற்றுமை மரீஇயது:**

பிரபஞ்சமும் பிரமமும் தொடர்பில் ஒன்றே என்ருல் பிரபஞ்சம் பிரமத்தின் வேருகக் காட்சிப் படுவது ஏன்? என்ற ஐயம் எழும். அதனை இவ்வரி விளக்குகிறது என்க. சிலம்பியினிடமிருந்து நூல் உண்டாகிறது. வலையாக அமைக்கப்படுகிறது. நூல் வலைக்கு எப்படிச் சிலம்பி உபாதானமாக உள்ளதோ அப்படியே பிரபஞ்சத்துக்கு உபாதானம் சத்தாகிய பிரமமே ஆகும். சிலம்பி, நூலைத் தன்னிடமிருந்தே தோற்றுவிக்கிறது. அந்த நூலை ஓரிடத்திலே உண்டாக்கி வைத்துப் பாதுகாக்கிறது. பிறகு அந்த நூல் அழியும்படி தான் நீங்கிவிடுகிறது. இவ்வாறே பிரமமும் படைத்துக் காத்துச் சங்கரிக்கின்றது. [சிலம்பியன்று நூல்; ஆனுல் நூல், சிலம்பியினிடத்ததே. சிலம்பி நூலின் வேருனதே. இதனைச் சித்தியார் நூலின் பரபக்கம் 224 ஆம் பாடலால் உணரலாம்.]

## பிரபஞ்சத்தின் பல பிரகாரம்

**என்ன பன்மையது எனில்:**

சிலம்பி வேறு நூல் வேறு என்று கூறப்பட்டாலும், நூல் ஒரேவிதமானதாகவே உள்ளது. பல விதங்களாக இல்லை. பிரபஞ்சமோ பலவிதமாக உள்ளது. ஆதலால், இந்தப் பிரபஞ்சத்தின் பலபட்ட தன்மை எப்படி ஒருதன்மையானதாகக் கருதப்படும் என்று கேட்டால் அதற்கு உதாரணம் அடுத்துத் தரப்படுகின்றது.

**இலை பழம் பூ**
**தோல் நார் வயிரம் தரு தரும் தொன்மையின்**
**வான் நாரம் திரை நுரை தரு வாய்மையின், கூடும்:**

மரம் என்பது ஒரே பொருளாக இருப்பினும், அதன் இலைகள், பழங்கள், மலர்கள், பட்டைகள், நார்கள், வயிரத்தன்மைகள் ஆகிய இவை பலவிதமாகவே உள்ளன. இவ்வாறுன வேறுபாடுள்ள பாகங்களை மரம் தந்து பிறகு ஒடுங்குதல் பழமையான முறைமை ஆகும்.

மற்றும், பெருமைபொருந்திய அல்லது வானத்தினின்றும் வெளிப்பட்ட தண்ணீரானது திரைகளையும், நுரைகளையும், திவலைகளையும், குமிழிகளையும் கொடுத்துப் பின்னர் ஒடுங்குகிறது. இப்படித்தான் பிரபஞ்சம் என்னும் ஒருபொருள் பலப்பலவிதமாக ஆகிப் பின் ஒடுங்குகின்றது என்று சொல்லப்படுகிறது.

## சித்து அசித்தை உதவுதல்

**அசித்தைச் சித்து உதவாது எனில் :**

சித்துப்பொருளினிடமிருந்து சித்துப்பொருளே தோன்றுதலும், அசித்துப்பொருளினிடமிருந்து அசித்துப்பொருளே தோற்றுவிக்கப்படுதலுமே இயற்கை. அப்படிக்கின்றிப் பிரபஞ்சம் என்கிற அறிவற்ற பொருளானது பிரமம் என்கிற சித்துப்பொருளினிடமிருந்து தோன்றியது என்பது இயற்கையன்றே என்றால் அதற்குச் சமாதானம் காட்டுகின்றோம்.

**நெல் பதர் பலாலத்தின் பரம் தரும் :**

சித்துப்பொருள் அசித்துப்பொருளை உதவாது என்பதில்லை. அசித்துப்பொருளும் சித்துப்பொருளினிடமாகத் தோன்றுதல் உண்டு. நெல்வித்தினின்று நெல் தோன்றுவதே அல்லாமல், பதரும் வைக்கோலுங் கூடத் தோன்றுகின்றன. பதரினிடமோ, வைக்கோலினிடமோ பிறிதொரு பயிரை முளைப்பிக்கும் தன்மை இல்லாமையால் அவை அசித்தேயாகும். அவற்றை உண்டாக்கிய திறமையுடைய நெல்லானது சித்துப்பொருளே. இவ்வாறே, சித்துப்பொருளாகிய பிரமத்தினின்றும் அசித்தாகிய பிரபஞ்சம் தோன்றுகின்றது.

## பிரமத்தின் செயற்குரிய காரணம்

**முன் உள மறைகள் இது தன்னியல்பு என்றும் விளையாட்டு என்றும் மொழிதலின் :**

பிரமப்பொருள், சித்தாய் நிற்றலும் அசித்தைத் தோற்றுவித்தலுமாகிய இச்செயல்களை ஏன் செய்கின்றது என்றால், இதற்கு அநாதியான வேதமே விடை பகருகின்றது. அது, பிரமத்துக்கு இச்செயல் இயற்கையானது என்றும், விளையாட்டு என்றும் கூறுகின்றது. பிரபஞ்சங்களை உண்டாக்கி உதவுமாறு இறைவனை யாரும் கேட்டுக்கொள்ளவுமில்லை; வேண்டிக்கொள்ளவுமில்லை; பிரமத்தின் மேம்பட்டபொருள் ஏதும் இல்லாமையால் ஆணையிட்டுச் செய்விக்கவும் இல்லை. ஆகவே, இச்செயல் பிரமத்தின் தன்னியல்பாகவே உண்டாவது என்னல் வேண்டும். தன்னுள்ளே பிரபஞ்சத்தை உளவாக்கி, அதனுள்ளே தான் வியாப்பியப்படுதலால் பிரமத்தைப் பிரபஞ்ச பாசம் பற்றிக்கொள்ளாதா என்றால், பிரபஞ்ச உபாதிகளால் பிரமம் பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில் இஃது ஓர் லீலை அல்லது விளையாட்டுச் செயலாகும். சகசப்பட்டுவிட்டதொரு செயலில் களைப்புத் தோன்றுவதில்லை போல்வது இது. மற்றும், ஆகாசத்தே எட்டா நிலையிலுள்ள சூரியன் நீர்த்தடங்கள்தோறும் நிற்றல் இயற்கையாம்; அங்ஙனம் நின்றாலும் நீரின் ஆபாசம், சூரியனைப் பற்றுவதில்லை. இது சாமர்த்தியமுடைமை ஆம். வேறு நூல்களில் இவ்விருதிறச் செயல்களையும் நித்தியம் என்றும் லீலை என்றும் பேசுவர். "அலகிலா விளையாட்டுடையார் அவர் தலைவர்" என்ற வரியிலும் இவ்விருதிறங்களும் சுட்டப்பட்டிருத்தல் காணப்படும். இக்கருத்தினைச் சித்தியாரின் பரபக்கத்து 227 ஆம் பாடலில் காணலாம். இங்ஙனம் சொல்லிக்காட்டுவது மறைமொழியாதலின் நாம் இதனை நம்பியே தீருதல் வேண்டும் என்ப.

## பிரமப்பொருள் பலவாதல் இன்மை

ஒரு நூல்
பன்மணி நிலையும் பசுப்பால் எனவும்
பல அகல் நீரில் அலர் கதிர் எனவும்
கூவல் ஆழி குளம் றுசிகுழி கால்
வாவி யாவையும் வரு புனல் எனவும்
அவ்வவற்று அடங்கி :

பிரபஞ்ச உபாதிகள் பலவாக உள்ளன. வேறு பட்ட பலவாகிய உபாதிகள் சகிதமான பிரபஞ்சத்தே பொருந்திய பிரமப்பொருள் ஒன்றாக இருத்தல் கெட்டுப்பலவாகக் கண்டிதப்பட்டுத்தானே ஆகவேண்டும்; அங்ஙனம் கண்டிதப்படுதல் குறைபாடன்றோ என்ற வினா எழும். அதற்கு விடையளிப்பன இவ்வரிகளின் உவமானங்கள் என்க.

ஒரே நிறமுள்ள நூலில் பல நிறமுள்ள மணிகள் கோக்கப்பட்டுள்ளனவாயின் வெளியே நோக்கும் போது அந்த நூலின் உள்ளோடும் ஒரே நிறமானது. அந்தந்த மணிகளின் உள்ளே அந்தந்த மணிகளின் நிறமே தானும் உடையதாகக் காணப்படும். உண்மையில் அந்த நிறங்கட்கும் அந்தச் சரட்டுக்கும் சம்பந்தம் ஏதும் இலது. மற்றும், இதே கருத்துள்ள உவமை, "அலகின் மணிகளவை கோவை" என்னும் சித்தியார்ப் பாடலிலும் கூறப்பட்டிருத்தல் உணரத் தக்கதாகும். மேலும், பசுக்கள் பல்வேறு நிறமுடையன ஆயினும் அவை எல்லாம் தரும் பால் ஒரே தன்மையதாய் இருக்கின்றமை தெரிகிறோம். இது, "ஆ வேறு நிறத்தன ஆயினும் பால் வேறு நிறத்தன

அல்லவாம்'' என்பதனுலும் தெரியவருவதே. தண்ணீரை உடைய பாத்திரங்கள் நிறத்தாலும், செய்பொருளாலும், அளவாலும், வடிவாலும் பல் வேறுபாடுகளைப் பெற்றிருந்தாலும் அவற்றின் உள்ளே காணப்படும் சூரியன் பிம்பம் ஒன்ருகவே இருக்கின்றது. கிணறு, கடல், குளம், சிறிய நீர்க்குழி, வாய்க்கால், தடாகம் முதலிய நீர் உள்ள இடங்கள் வேறுபாடுடையன ஆயினும் அவற்றினிடம் உள்ள தண்ணீர் ஒன்ருயிருத்தல் காணலாம். இங்கு நீர்மட்டமும் கருதப்படலாம்.

இப்படிக் கொடுக்கப்பட்ட பல உவமானங்களால் வன்னத்தாலும், பண்பாலும், வடிவாலும், அளவாலும், மற்றும் பிற தன்மைகளாலும் பிரமப் பொருளானது பல்வேறுபட்ட யோனிகள் தோறும் கூடியிருப்பினும் அறிவு ஏகமாம் இயல்பே கொண்டிருக்கும் என்பது புலப்படுத்தப்பட்டது. ஆகவே, பிரபஞ்ச மாறுபாடுகள் பிரமத்தை மாறுபடச் செய்ய வல்ல ஆற்றலுடையன ஆகமாட்டா. ஏனெனில், பிரமம், பிரபஞ்சத்தினும் மேம்பட்ட மாறுபடா இயல்பினது ஆதலால் என்க.

## பந்தம் இன்மை

ஆடியுள் நிழல் என தோன்றி யாக்கை:

பிரமம் இங்ஙனம் மாறுபாடுடைய பிரபஞ்சத்துட்பட்டிருத்தலால் அந்த அந்த உடல்களிடம் பந்தப்படாதோ எனின், அங்ஙனம் அது பந்தப்படுவதில்லையாம். எவ்வாறு எனில், கண்ணுடியில் நாம் பார்க்கும்போது நமது நிழல் உருவம் அதனுள் தெரிகின்றது. ஆனால் அது கண்ணுடியோடு தோய்ந்து

ஒன்றுபட்டிருப்பதில்லை. அவ்வாறே, பிரமப்பொருள் வேறு வேறு உடலங்களுள்ளே தோன்றி நிற்பினும் அந்த உடலங்களோடு ஒன்றுபடுவதில்லை. ஒட்டாமலே நிற்பதாகும் என்ப.

## பிரபஞ்சம் தொழிற்படல்

**நல் காந்தத்து இரும்பும் :**

பிரபஞ்சம் அசேதனமாயிற்றே: அதனோடு பிரமம் ஒன்றுபடாமல் இருப்பின் எப்படி அது தொழிற்பட இயலும் என்கிற ஐயம் இந்த உவமானத்தால் களையப் படுகின்றது. காந்தம் தோய்வற இருப்பினும் அதன் முகப்பட்ட இரும்பு தொழிற்படுகின்றது. அப்படியே பிரமப்பொருள் தோய்வற நிற்பினும் அதன் சந்நிதியிலே உடலானது காரியப்படுகின்றது என்பர்.

## அறிவின் அநுபவம்

**கனவில் தீங்கும் கங்குலில் கயிறும்**
**புனலில் தோன்றும் பேய்த்தேர்ச் செய்தியும்**
**அன்னது :**

இந்த உடலின் சுகதுக்கங்களை அந்த அறிவு அநுபவிக்கிற தன்மை எப்படிப்பட்டது என்றால், ஒருவன் கனவு காணும்போது தன்னை ஓர் யானை பின்னே துரத்திக்கொண்டு வருவதுபோலவும் தான் அதற்குப் பயந்து ஓடுவதுபோலவும் காண்கிறான். இந்த நிலையில் அவன் காண்கிற அத்தனை அனுபவமும் அவன் விழித்துக்கொண்டபோது பொய்யாகிவிடுகின்றது. இரவில் ஒரு புற்றின் அருகேகிடந்த கயிற்றைப் பாம்பு எனவே

எண்ணி நடுங்குகிறான். ஆனால், விடிந்த பின்பு அது கயிறுதான் என்று தெரிந்ததும் அச்சம் அனைத்தும் அகலப்பெறுகிறான். கானல் நீரைத் தண்ணீரென எண்ணித்திரிந்தவன் அது கானல்தான் என்று தெளிந்த பின் அதனை நம்பி நயந்த அனுபவத்தை விட்டொழிக் கிறான். நிலைவேறுபாடு, காலவேறுபாடு, அவத்தை வேறுபாடுகளுள்ளே சிக்கிக் கிடக்குமளவும் மெய் போலத்தோன்றும் எல்லா அனுபவங்களும், அவற் றின் நீங்கிய தெளிவினை எய்தியபோது பொய்யாகி விடுகின்றன. ஆதலால், முன்னே நிகழ்வுற்ற அனுப வங்களும் உண்மையல்லவாய் மறைகின்றன. இவ் வாறே, பரம்பொருள் உடம்பினுள்ளே கூடியிருந்து சுகதுக்கங்களை அனுபவிப்பதுபோலத் தெரிகிறதே ஒழிய உண்மையாகப் பார்க்கும்போது இந்த இன்ப துன்ப நுகர்ச்சிகள் அந்த அறிவுக்கு உண்டாவதில்லை எனத் தெரியலாகும் என்பர்.

## பஞ்சேந்திரிய கன்ம அநுபவம்

**பின்னர் நல் நிறம் பளிங்கு என :**

இந்திரியங்களால் கேட்டல் முதலாம் செயல் களின் மூலம் அனுபவம் காணப்படுகிறதே என்றால், இதனால் பிரமத்துக்கு இந்திரிய அனுபோகம் உண் டாவதில்லை என்னலாம். எவ்வாறென்றால், படிகம் தன் இயல்பில் தூய வெண்ணிறத்தது. அது பஞ்ச வன்னங்களோடும் கூடிநிற்கையில் அவ்வவ் வன்னத் தின்படியே காணப்படுகின்றது. என்றாலும், இவ் வன்னங்களோடு படிகம் ஒட்டாது. தன்னியல்பே மாறுபடாமல் தாங்கி நிற்கும். இவ்வாறே பிரமப்

பொருள் இந்திரியானுபவம் எதுவும் தோய்வுறப்பெரு மல் இருப்பதாகும் என்பர். "பிரமம் தான் குலவு போக போக்கியங்கள் கொள்ளும்போன்று கொள் ளாதால்" என்பது சித்தியார் கூறுவது.

## அவத்தையநுபவம்

**பதினுல் கரணத்து ஒரு மூன்று அவத்தை**
**நாளும் நாளும் நயந்துறும்:**

பிரமம் பதினுன்கு கருவிகளோடுகூடிய அவத்தை களைத் தான் அனுபவியாது. அந்த அவத்தைகட்குச் சாட்சிபூதமாகவே இருக்கும்.

விழிப்பு நிலை. கனவு நிலை, சுழுத்திநிலை, துரியநிலை என நிலை நான்காகும். இவற்றில் விழிப்பு எனப் படுவது சாக்கிரம் என்று கூறப்படும். இந்தச் சாக்கிர நிலையில் பதினுன்கு கருவிகளோடு கூடிய அவத்தை உண்டு. அவத்தை என்பது பிரமம் உபாதிகளோடு கூடுவதனுல் நேரிடும் பேதநிலை. இங்ஙனம் பேதப் படுகையில் ஜீவான்மா, அந்தரான்மா, நரகான்மா, திரியக்கான்மா என்றெல்லாம் பரமான்மா பல பெயர் களைப் பொருந்துகின்றது. இந்த நிலைகளிலேதான் போக போக்கிய அனுபவம் உடையவரைப்போலத் தோன்றுகின்றது. இவற்றுள் சாக்கிரநிலையில் பதி னுன்கு கருவிகள் கூடிநிற்கும். அவை செவி முதலாம் ஐந்து; சப்தம் முதலாம் ஐந்து; அந்தக்கரணம் நான்கு ஆகப் பதினுன்காம். சோத்திராதிகள் ஐந்து, வாக்கு ஆதிகள் ஐந்து, அந்தக்கரணங்கள் நான்கு என்பதும் ஆம். இப்பதினுன்கு கருவிகளுடனும் புருவ மத்தி யிலே நிகழ்வதே சாக்கிர அவத்தையாம்.

இனிச் சொப்பன அவத்தையில் அந்தக்கரணங்கள் நான்கின் கூட்டமே நிகழும். இதற்குத் தானம் கண்டம் ஆம். சுழுத்தி அவத்தை என்பது சித்தம் என்ற ஒன்றோடிருப்பது. இது இதயத்தானத்தே நிகழ்வது. இவையாவும் நீங்கிய பிரமத்தோடுகூடிய நிலையே துரியம் எனப்படுவது. போகம் என்பது புண்ணிய பாவங்களாம். போக்கியமானது மனம். பிரமம் இந்த இரண்டிற்கும் சாட்சி பூதமாம் தன்மையதாகும். சொப்பனம் என்பது பிரகிருதி அவதரமாம். சுழுப்தி என்பது பிரகிருதி ரூபம் ஆம். போக போக்கியங்கள் புசிப்பும் புசிப்புக்கு இடமான பதார்த்தங்களும் ஆம். கருவிகள் பதினொன்கும் நீங்கிய நிலையே துரியம் எனப்படுவது. பிரகிருதி, புமான், மகான், புருடன், அவித்தை, அவ்வியக்தம், மூலப்பகுதி என்பன ஒரே பொருளுடைச் சொற்களாகும். மேற்கூறப்பட்ட சாக்கிரம், சொப்பனம், சுழுப்தி என்கிற மூன்று அவத்தைகளும் சகஜமாம். ஆதலின் நாளும் நாளும் நயந்துறும் எனப்பட்டது. "தோற்று நனவு கனவினுடன் சுழுத்தி துரியம் எய்தும்" என்பது சித்தியார். கருவிகளுடன் கூடியபோது தோய்வுபோலும், கருவிகளின் நீங்கியபோது தோய்வின்மையாகவும் விளங்கும் தன்மை இவ்வரிகளில் பகரப்பட்டுள்ளமை காணலாம்.

## புண்ணிய பாவ தொந்தம்

அறிவு, அவத்தைகளோடு இந்தவிதமாகக் கூடி அநுபவிக்குமாயின் புண்ணிய பாவ தொந்தம் எப்படி நிகழும் என்கிற செய்தி இனிக் கூறப்படுகின்றது. அதாவது பிரமத்திற்கு அநாதியே புண்ணிய பாவ தொந்தம் இல்லை என்பதாகும்.

**இருபயன் தன்னில் சாராத் தொன்மைத் தன்மை**
**தற்பண நிழற்கண் குற்றிபாய்ந் தற்றே:**

கண்ணுடியில் ஒருவனது முகம் தெரிவதாகக் கொள்வோம். அப்போது அந்தப் பிரதிபிம்பத்தின் கண்ணில் ஒரு பாரைக்கோல் கொண்டு ஒருவன் குத்துகிருன். இதனுல் கண்ணுடி உடைபடுமே ஒழியப் பிரதிபிம்பக் காரண புருஷனுடைய கண்ணுக்கு ஏதும் ஊறுபாடில்லை. இப்படியே, பிரமப் பொருள் சாட்சி மாத்திரையாய் இருக்கும் இயல்பின தாதலால் அதன் தொன்மையான இயல்பு புண்ணிய பாவங்களின் தாக்குதல் இல்லாமையே ஆம். அதாவது இயல்பாகவே பாசங்களின் நீங்கியிருத்தல் ஆகும். இது சூரியனுக்கு அநாதியே இருளின்மை போன்ற தன்மை எனப்படும். "பொறிவாயில் ஐந்தவித்தான்'' என்பது திருக்குறள் கூறும்விதமாம்.

## 37 முதல் 47 வரிகள்: சீவன்முத்தி இலக்கணம்

**இ இயல் பந்தம் பௌவமது அகல:**

மேலே கூறப்பட்ட வகைகளில் பிரமத்தை வாதிக்கின்ற மாயை என்ற வாதனைகளினுல் உண்டான பிறப்பு என்கிற கடலினைக்கடந்து அப்பாற் செல்லுதற்பொருட்டு (என்ன நியமம் தேவை என்பதை இனிவரும் வரிகள் பேசும்) மேலே கருவிகள் என்று கூறப்பட்டனவற்றைத் தன்னின் வேருகக் கருதாமல் தானுகவே கருதி மயங்குதல் பந்தம் எனப்படும். இதனுல் வளரும் இன்ப துன்பங்கள் சாகரத்தினும் பெரியவாம். இத்தகைய பந்தம் நீங்கப் பெற்றுலல்லது சீவன்முத்திநிலை எய்த இயலாது.

சீவன்முத்திநிலையே பரமுத்திக்கு முந்தியது ஆதலால், இங்குக் கருவிகளினின்றும் ஒருவி அடையவேண்டிய அவசியம் குறிக்கப்பட்டது. "கருவி எல்லாம் நான் எனவே கருதல் பந்தம்" என்னும் சித்தியார் நூலின் பரபக்கம் 230 ஆம் பாடல் காணல் நல்லது.

**விண்முதல் தந்த கொண்மூ படலத்து**
**இருள் அற உதித்த கால் தக :**

ஆகாயத்திலேதான் மேகம் காணப்படுகிறது. எனவே மேகத்துக்கு ஆகாயமே இடம் அல்லது முதல் என்னலாம். அங்ஙனம் விண்ணினை முதலாகக் கொண்டு தோன்றிய மேகபடலம் விண்ணினை மறைக்கின்றது. இதனால் ஆகாயம் முழுதும் மறைபட்டு இருள் மிகுகிறது. மாயாவாதனைக்குட்பட்ட பிரமநிலை இப்படிப்பட்டதுதான். இந்த இருள் போல்வதே அவித்தை. அவித்தை எனினும் மூலப்பகுதி எனினும் ஒன்றே. இனி, அதே ஆகாயத்தை இடமாகக்கொண்டு தோன்றுவதே காற்று. இந்த வாயுத்தோன்றி வீசுவதனால் மேற்சொன்ன மேகபடலங்கள் சிதறியோடுகின்றன. ஆகாயம் நின்மலமாகிறது. இது வாயுவின் செயல். இப்படித்தான் அவித்தை நீங்குவதற்கு ஒரு சாதனம் தோன்றும். அதனை, அடுத்துள்ள வரி காட்டும்.

**விவேகம் தன்னில் தோன்றி :**

மேலே, ஆகாயத்திலிருந்து வாயுத்தோன்றி விண்ணிற்கு நின்மலத்தன்மை உண்டாகச் செய்தாற்போலவே, பிரமத்தினிடமிருந்து விவேக ஞானம் தோன்றும். மேல் வரியில் தன்னில் என்றுள்ள

வரியின் பொருளைச் சிந்தித்துப்பார்த்தல் வேண்டும். 'மாயைபிரிய ஞானமது பிறக்கும்' என்பது சித்தியார். அங்ஙனம் ஞானம் தோன்றியமாத்திரையில் அது பந்தத்தைச் செய்யாது உண்மை நிலையைப் பாவகப் படுத்திவைக்கும். எவ்வாறெனில்?

**சாதகம் அனைத்தையும்**
**1. மன் அகம் பிரிப்பும் 2. மடி இழை வாங்கலும்**
**போல ஞாலம் பொய் அற கழீஇ :**

சிவோகம்பாவம் பிறப்பதற்கு வேண்டிய சாதகங்களை ஞானம் உண்டாக்கும். எதனைப்போல என்றால், நீண்டநாட்களாக உள்ளதொரு வீட்டினை, ஒருவன் அதன் கூரை, வாரை முதலியவற்றை ஒவ்வொன்றாக நீக்கிக்கொண்டே வந்தானாயின், வீடு என்ற சொரூபமே இல்லாமற்போவது போலவும், ஒரு துணியினிடமாக உள்ள குறுக்கும் நெடுக்குமான நூல்களை உருவி எடுத்துவிட்டால் துணி என்னும் உருவமே கெடுவது போலவும் ஆகும். இவ்வாறே பிரகிருதிமுதலாகப் பிரபஞ்சமென்கிற பொய்க் கருவிகளை எல்லாம் நான் அல்ல அவை என்று நீக்கிக் கொண்டே போனால் பிரபஞ்சமாயை அகன்று அதன் தன்மை கெடும். உபாதிகளை நீங்கும் முறைமை ஈதாம்.

**தானே தான் ஆய் தன்னில் தன்னை**
**தானே கண்டு தன் நலம் உற்று :**

உபாதிகளைக் களைந்துகொண்டே போனால் முடிவிலே அந்த உதவியினைப்புரிந்த ஞானந்தான் எஞ்சும். இந்த ஞானமே பிரமம் என்பதாம். அப்போது

தன்னுடைய சொரூபத்தைத் தானேகாண்டல் நிகழ்கிறது. அதனால் தன்பால் விளைந்த இன்பத்தைத் தானே அனுபவித்தலாகிறது. கன்மானுட்டான சுத்தியாலே அந்தக்கரணம் சுத்தப்படும். அது ஞானத்தை உண்டாக்கும். அது அகம் பிரமம் என்பதை அறியச் செய்யும். இதுவே தானே தானும் தன்மை. இதனில் கருத்து முற்றினால் தற்சொரூபம் தெரியும். அசைவில்லாத ஜலத்திலே சந்திரன் தெரிவதுபோல இது நிகழ்வதாம். இதனைப் பிரமநிஷ்டை என்பர்.

**வசை இல் 'தத்துவமசி' பதம் தெளிவால்**
**அகமே பிரமம் ஆயினன் என அறிந்து :**

தொம் - தத் - அசி என்கிற மகாவாக்கியத்தின் மூன்று சொற்களின் இலக்கணைகளை அறிதலே குற்றமற்ற அறிவாம். இங்ஙனம் அறிய அறிய அறிவு தெளிவாம். இந்தத் தெளிவில்தான் அந்தப் பிரமம் தான் என்கிற பிரமஞானம் தீர விளங்கும். "தானே தானய் அநுபோகந் தன்னில்" என்னும் சித்தியாரின் பரபக்கம் 232 ஆம் பாடலுரை இங்குப் படித்தல் நலம். இது பிரமஞானத்தில் நிலைபெறும்விதம் கூறுவதாம்.

**அசலன் ஆகி நல் சலம் சலமறி என கண்டிடும் :**

மேற்கூறியபடிப் பிரமஞானம் உண்டானபிறகு சலித்தல் கூடாது. அதாவது உள்ளம் பேதப்படக் கூடாது என்பதாம். இந்த நிலையில் உபாதிகள் நிகழத்தான் செய்யும். சப்தாதிவிஷயப் புசிப்பும் உண்டு. என்றாலும் மேற்கண்ட உண்மை நிலையிலிருந்து சலனப்படலாகாது. குடத்தில் அல்லது குளத்தில்

உள்ள சலம் அசையும்போது சந்திரபிம்பமும் சலனப் படுவதுபோலக் காணப்படும். ஆனால், உண்மையில் அசைவு ஜலத்துக்கே அல்லாமல், ஆகாயத்தில் இருக்கும் சந்திரனுக்கு ஏதும் இல்லை. அப்படித்தான் இந்தப் பிரமஞானமும் நிலைக்கப்பெற்றிருக்கும். இதுதான் ஜீவன்முத்திநிலை எனப்படும். இதனின் மேலானதே பரமுத்தி ஆகும். ஜீவன்முத்திநிலை என்பது உடலில் உயிர் தங்கியிருக்கும்காலத்து நிலைமை ஆகும்.

## 48 முதல் 58 வரிகள்: பரமுத்தி இலக்கணம்

**உடலம் விண்டு அகல் கடத்து**
**மங்குல் அது உடைதர எங்கும் ஆம் தகைத்து ஏ :**

இந்த உடம்புபற்றிய தொந்தம் நீங்கப்பெற்ற உடன், மேலே கூறப்பட்ட அறிவும் அந்தப் பிரமமும் ஒன்றுபட்டுவிடும். எதுபோல என்றால், வாயகன்ற குடத்துக்குள்ளே அகப்பட்டிருந்த ஆகாயமானது அந்தக் குடம் உடைந்த மாத்திரத்திலே வெளியே உள்ள எல்லையற்ற மகாகாயத்துடன் ஒன்றுபட்டது போல ஆகும் என்பர். இதுவே பரமுத்தி எனப்படும். இதனால், தடையாகிய மாயையினை நீக்கும் வாழ்வை நிகழ்த்தினால், ஜீவன்முத்தனாகிப் பின் பரமுத்தி எய்தலாம் என்பது இவ்வரிகளால் புலனும். "தடை அறும் படி தன்னை அறிந்தவன் - உடல்விடும்பொழுது ஒன்று ஒரு மண்மயக் - கடமுடைந்த ஆகாயம் நிகர்ப்பனால்" என்பது இங்கு மேற்கோளாகக் கொள்ளத் தக்கதாகும். எல்லோரும் இப்படி ஞானம் அடையப் பெறுதல் எளிதன்றே; சாமானியர்க்கு எது முறைமையாகும் எனக் கேட்பின் அதற்காம் நெறியே அடுத்துக் கூறப்படுவது என்க.

**இவ்வகை உணர்ந்து செய்தொழில் அருத
மடவோர் தாமும் கடன் ஆ இயற்றும்
கன்மகாண்டம் தொன்மை புரிவால்
தோற்றிய வித்தை :**

அகம் பிரமம் என்ற உண்மையான பிரம ஞானத்தை அறிந்து எல்லாக் கருமங்களையும் விட்டு ஒழிக்கமாட்டாதவரே பெரும் பாலாராவர். இவர்கள் பிரமஞானம் எய்தப்பெருமையால் மடவோர் எனப் படுவர். இவர்களும் ஈடேறுதற்கு வேண்டிய கன்ம காண்டத்துச் சாதன சதுட்டயம் எனப்படும் கன்மங் கள் விதிக்கப்பட்டுள. அவை, நித்திய அநித்திய வஸ்து விவேகம் முதலான நான்குவகைச் சாதனங்களாம். மற்றும், கன்மகாண்டத் தொன்மைப்புரிவு என்றமை யால், பஞ்ச ஆதனம் முதலாகிய பூசிக்கும் கிரியையும், இயமம் முதலாகிய அட்டாங்கயோகத்தையும் செய்து சரியை கிரியை யோகமாகிய தவநெறிச் செல்லுதலை யும் புரிவர் என்பது கொள்ளப்படும். இச்செய்தி, "தெளியாதார் தெளியப் பஞ்சவாதனமேல் ஏற்ற இயம நியமாதி யோகம் இருநான்கு இயற்றுவரால்" என்னும் சித்தியார் அடிகளால் அறியப்படும். இப் படிப்பட்டதொழில்களைச்செய்து பழகப்பழக விவேக ஞானம் உண்டாகும் என்பர். ஞானத்தால் சகல ஆத்மாக்களும் சமம் என்றும் இந்நிலையினைப்பற்றிக் கூறுவோர் சொல்வர். இவர்கள் கூறும் முறைமை, கர்மம் செய்வதால் பாவம் கழியும். மனம் தெளி வடையும்; ஆசை பகைமை அறும்; இந்திரியங்கள் வசப்படும்; ஞானம் உதிக்கும். இது எளியமுறை யாகும். இது திருக்கோபுரத்தின் எழுநிலைகளையும் அடிநிலையிலிருந்து கட்டிச்செல்வதுபோல் ஆகும்

என்பதாம். எனவே, இவ்வரிகளால் ஞானம் பெறும் சாமானியமுறை கூறப்பட்டது என நாம் தெரிதல் வேண்டும். இங்ஙனம் பெற்றால்,—

**மேல் கடை அரணியில்**
**எழுந்த எரி அவற்றை விழுங்கியது என்ன**
**தன் ஒழிந்து உள்ள தானாய் அழியும் :**

தீக்கடைகோலினால் கட்டையைக் கடைதல் செய்வதனால் அதினின்றும் நெருப்புத் தோன்றும். இப்படித்தான் கன்மப் பழக்கத்தால் ஞானம் உதிப்பது உளதாகும். மேற்குறிக்கப்பட்ட நெருப்பானது தன்னைக் கொண்டிருந்த கட்டையையும், தன்னைக் கடைந்தெழுப்பிய கோலினையும் எரித்துச் சாம்பராக்கும். தான் ஒன்றியே ஜ்வாலிக்கும். இப்படித்தான், கன்மப் பழக்க முதிர்ச்சியில் உண்டான விவேக ஞானம் தன்னை ஒழிய ஏனைய எல்லாக் கன்மங்களையும் விட்டொழியச் செய்துவிடும். இதுவே யாவர்க்கும் ஆம் நெறி.

**அ நிலை அன்றி அழிவு அறு முத்தி ஏயாது :**

மேலே கூறியபடி ஞானம் தோன்றப் பெற்றுக் கன்மக்கழிவும் தலைக்கூடப்பெற்றால் பிறகு அதே நிலையில் நின்றுவிடவேண்டும். அதனால் நிலைபேறு உடைய முத்தி எய்தும். இவ்வாறன்றி, வேறு எந்த முறையாலும் முத்தி பொருந்தாது.

**என்று தன் இயல்பை**
**மாயாவாதி வகுத்து உரைத்தனன் ஏ :**

மேலே சொல்லப்பட்டவிதமாக மாயாவாதி என்போன் தன்னுடைய மதத்தின் கொள்கைகளை மிகவும் சிறந்ததொன்றென எடுத்துக்கூறினன். எனவே, பிரமத்தை மறைக்கும் மாயை என்றொரு வாதத்தைக் கொண்டே தன்னுடைய பக்ஷத்தை எடுத்துப் பேசினன் மாயாவாதி எனக்கொள்ளுதல் சுருக்கமாய்ச் சொல்லும் செய்தி என்னலாம். இந்த 58 வரிகளும் மாயாவாதியின் சங்கற்பத்தை எடுத்துரைத்து முடித்தன. இனிவரும் வரிகள் இதனை நிராகரிக்கும் செய்தியைக் கூறுவனவாகும்.

மாயாவாதி சங்கற்பம் முற்றிற்று.

## செய்யுள்—4.

### I—ஆ

### மாயாவாதி நிராகரணம்

உரைதரு பிரமம் ஒன்(று)எனும் உரைக்கண்
வருபிர மாணம் மறைஎனில் அருமறை
ஒன்(று)என்ற(து) அன்றி இருபொருள் உரைத்தல்
நன்றன்(று) அபேதம் நாடிய பொருளேல்
பேதமும் அபேதமும் ஓத வேண்டா
பேதம் எனினும் அபேதம் எனினும்
பேதா பேத(ம்)எனினும் அமையும் நின்
ஐயம்இல் உரையில் பையவந் துளதாம்
திகழ்பிர மாண இகழ்வு(ம்)உண்(டு) அன்றிப்
பெத்தம் பேதம் முத்தி அபேதமேல்
அநவத் தித(ம்)ஆம் அவைஇரு திறனும்
இனிஅப் பழமொழி இரண்டல ஒன்றேல்
அன்றியும் பெத்தம் பேதத்(து) அறைதலும்
ஒன்றிய முத்தி அபேதத்(து) உரைத்தலும்
பழுதாம் இத்திறம் பதையா(து) ஆய்க மற்(று)
எழுதா மொழிஎனும் இப்பிர மாணம்
ஆர்உரை தானே ஆயின தேல்உன(து)
ஏகம் அனேகம் உறும் இயம் பாமல்
சத்த ரூபம் தகா(து)எனில் வானத்(து)
ஒத்(து)ஒலி உறமும் எனில்வறி(து) உதியா(து)
அன்றியும் பதமும் பாழியும் அனைத்தும்
இன்றிஓர் ஒலியாய் எழுந்திடும் அதனுக்(கு)
அறிவில(து) உருவில(து) அறியா(து) அறையா(து)

அன்றியும் அவ்வகை அகண்டிதம் அதுஇது
என்றது குறிப்ப(து) எவ்வகை யாவும்
ஒன்றெனும் உரையும் ஒழிந்தனை அன்றே
அருமறை பிரம உரைஎனின் அதற்குத்
தந்தம் தாலு முதல்நவில் பொறிஇல(து)
என்னில்ஓர் உடற்கண் மன்னிய அலகை
அறைந்தற் றென்ப(து) ஆர்சொல்(அ) (து)அமலத்
திறம்பெற் றின்றே செய்தோர் பெயரால்
சுயம்பு என்(று)உல(கு) இயம்பும்என்(று) அறிஇனித்
தன்கீழ்த் தலைவரைத் தான்தொழு(து) உரைக்கும்
சொற்கேல் புரவலன் ஏவல் அமைச்சரை
அடிகள் மற்(று)எம் குடிமுழு(து) ஆள்மின்என்(று)
ஏத்தி இறைஞ்சின் காப்பர்கள் என்றுங்கு
ஈசன் நாம்செயப் பேசினன் அன்றி
இனையவை பிறரில் கனவினும் இலனே
தன்னைத் துதிக்கும் சொல்நலம் தானும்அத்
துறைஅறிவாணர்க்(கு)அறைவ(து)ஒன்(று) அன்றியும்
தனக்குத் தானே தன்நலம் பகரா(து)
அசத்துக்(கு) உரையா(து) ஆர்க்(கு)உரை உயிர்க்(கு)
உரைபிர மாணம் இறைபிர மேயம் [எனில்
நீபிர மாதா நின்பிர மிதிஎன
நால்வகை உள(து)உன(து) ஏகம்நன்(று) அன்றே
நல்பிர மாணம் நிற்ப(து)ஒன்(று) அன்றால்
அப்பிர மேயமும் அதன்இயல்(பு) அன்றே

## பிரமேய மறுப்பு

கன்னல் சுவையில் அன்னியம் இலதால்
இனிமை தோன்றாத் தன்மைத்(து) என்றனை

அறிவிற்(கு) உவமை அசத்தாம் கட்டி
பிறிவித்(து) ஒட்டினும் பேற(து) உறுதே
தற்பர விரிவு பொன்பணி தகும்எனில்
செய்வோர் இன்றிச் செய்வினை இன்மையின்
பொன்பணி ஆகை தன்பணி அன்றே
செய்வோர் போலாச் செயப்படு பொருள்முதல்
செய்வோர் ஏயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியில் தோன்றிற்(று) ஆயினும்
சத்(து)உல(கு) ஏதும் தாரா தரும்எனில்
உலகம் மித்தைஎன்(று) ஓரா(து) உரைத்தனை
நிலவும்நின் மரபு நினைந்திலை ஆம்கொல்
விவகா ரத்தில் வேண்டுதும் உலகம்
பரமார்த் தத்தில் பகராம் என்னில்
பரத்(து)உள தேல்இவை யும்பர மார்த்தம்
பரத்(து)இல தேல்ஒழி முன்பகர் மாற்றம்
அதன்முதல் இதுஎன உதவுக அன்றியும்
விவகரிக் குங்கால் திகழ்பர மார்த்த
நிலைஅது தெரியின் இதுநீ நீயேல்
தெரியா தாயின் அஃதும் தெரியா(து)
உரைஆர் அளவையும் ஒழிந்தனை அன்றே
அளவை காண்டல் கருதல் உரைஎன
உள(து)அவை மூன்றின் மொழிவழி நுழையின்
நின்பிர மேயம் என்ப(து)என் ஆம்கொல்

## பிரமிதி மறுப்பு

பொன்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே ஆம்நின்
தற்பரம் அசித்தைத் தரும்ஆ(று) என்எனில்

சிலம்பி நூல்தரு நலம்போல் தோன்றும்
என்றனை அது அதன்தொழில் அன்றியும்
ஒன்(று)அதன் இயல்(பு)உல(கு) ஓர்இயல்(பு) அன்(று)
பலம்இலை பழம்பூப் பாதவம் தரும்நீர் [எனப்
திரைநுரை திவலை சிலதரும் இவைபோல்
தானே பலஆம் எனநீ சாற்றினை
சத்(து)அசத்(து) ஆகவும் சத்தினில் அசத்தின்
கொத்(து)உள் தாக்வும் கூறினர் இலர்ஆல்
வித்(து)இலை கனிநனி விழு(து)ஆல் தருநெறி
சத்(து)அல(து) ஒன்று தான்தர வேண்டும்
நெல்பதர் பலால்த் திற்(கு)உபா தானம்என்
காரணம் இன்றிக் காரியம் பிறவா
பாரிடை ஒருபடம் பண்ணவும் படுமே
அந்தம்இல் பிரமம் அவித்தைகா ரணம்எனத்
தந்தனை அவித்தை தான்எய் துறுதல்
தன்இயல்(பு) என்னில் வன்னிதன் வெம்மையில்
சத்தின(து) இயல்பும் சத்தே அசத்(து)எனில்
வைத்ததன் இயல்(பு)எனும் வழக்(கு)ஒழி அன்றியும்
இருள்பொதி விளக்(கு)என வரும்இரு விளக்கில்
கருமை பயந்த பெரு(கு)ஒளி தரும்எனில்
தன்இயல்(பு) அன்(று)அதன் உபாதி வசத்தால்
மன்னிய(து) அன்றிமை(த்) தான்தனி மாயா(து)
ஒன்(று)ஆன் அசுத்தன் அன்றும் அன்றே
ஆங்(கு)ஒரு காலத்(து) ஓங்கிய(து) ஆயின்
அந்தம்இல் அவித்தை வந்தணை வதற்(கு)ஓர்
ஏது வேண்டும் புயல்இயல்(பு) எனின்வீ(டு)
ஓத வேண்டா ஒழிந்தோ ரினும்உறும்

களங்கம(து) உறஉறும் அவித்தை தற்கவித்தல்
விளங்கிய பிரம விளையாட்(டு) ஆயின்
அவித்தை என்ப(து)ஒன்(று) அன்னியம் தன்னில்
உதிக்கும் என்றமுன் உரையும் மறந்தனை
நுண்நூல் குடம்பை நுந்துழி போல்உட்
படும்நெறி அதனால் விடும்நெறி இலதால்
தலைமையும் அறிவும் இல(து)என் அவித்தையை
விடுத்(து)எடுத்(து) ஆள்நரும் வேற்றோர் அன்றே
ஒளிகொள் தாமிரம் குளிகைபெற் றுங்(கு)அதன்
அவித்தையை வித்தை தவிர்க்கும்என் றுரைக்கில்
நித்தன் அறிவன் சுத்தன்என்(று) உரைத்த
வித்தகம் என்நீ வித்தையும் வேறென்(று)
எம்ம னோரில் ஒருவன் நின்இறை
அம்ம சைவந் தவன்நீ அன்றே

## பிரமாதா மறுப்பு - பெத்தம்

பல்மணி பசுநல் பாத்திரம் எனவும்
நல்நூல் பால்நீர் நல்கதிர் எனவும்
உடலையும் உணர்வையும் உவமித் தனையேல்
தடமணி சரடொடு தாம்கூ டலவே
உணர்(வு)உணர்(வு) ஒழியின் உல(கு)உணர்(வு)
பாலும் பசுவும் சாலும் சாலக் [உறின்நின்
கலம்பல அன்றிச் சலம்பல இல(து)எனக்
காணுநர் இன்றி வீணின் விளம்பினை
ஆடியுள் நிழல்போல் கூடுதல் கூறின்
தன்நிழல் கொண்டு தற்பணம் சலிக்கின்
மன்நிழல் கொண்(டு)உடல் வந்(து)அகன் றிடுமே

மன்அயக் காந்தம் எனஉடல் பிரம
சன்னிதி அளவில் சலித்திடும் ஆயின்
அகண்டிதன் சன்னிதி அல(து)இல(து) எவையும்
நடந்திட வேண்டும் கிடந்திடப் பெறுஏ
காந்தத்(து) இரும்பு காட்டுநர்ப் பெறில்அயம்
சேர்ந்திடும் நீக்கும் செயல்அதற்(கு) இலதே
கனுத்துயர் கயிற்றர(வு) எனுச்சில தொடுத்தனை
கனவின் பயனும் நனவின் பயனும்
வினையின் பயன்அவை பொய்என வேண்டா
உடல்மா ருட்டக் கடன்அது கருதுக
உற்ற புற்றும் மற்(று)அதில் கயிறும்
உடலும் கூடச் சடம்என அறிதி
அறிவு கயி(று)என்(று) அறியா(து) அன்றே
அச்சம(து) அடைதல் கொச்சமை உடைத்தே
இன்னும்அக் கனவில் இருள்உறு கயிற்றில்
பின்னும்நின் பிரமம் பிரமித் திடுமே
துன்னிய வினையில் செம்மலர்ப் பளிங்(கு)எனத்
தான்ஆம் தகைமை ஆனுல் மலர்என
ஒருபயன் அன்றிப் பலபயன் மரீஇய(து)
இருவினை தருபயன் எனநனி வேண்டில்
ஆண்ட வித்தையும் அவித்தைகொ(டு) ஆக்கையும்
ஈண்(டு)இரு வினையும் இயம்பினை பரத்தைக்
கள்வரைப் பிணிக்கும் காவலர் எனமுயல்
தொல்வினைத் தொடக்கில் தோன்(று)உடல் சிறைஇட்(டு)
இருவினை ஊட்டும் எம்மான் அம்மான்
அருவினை உடற்கண் அவத்தைகள் உரைத்தனை
ஆர்உறு பவர்பரம் அகண்டிதம் அடங்கா(து)

ஓர்வில(து) உடல்சடம் உறுநெறி யாதெனின்
மன்னிய கரணம் மாறாட் டத்தில்
பன்னினம் என்னின் இவையோ பரமோ
முதலிய(து) ஆயின் இவைபிறழ்(வு) எய்தா(து)
இவைஎனில் உனது மொழிபழு(து) உளதே
உடல்படு பிரமம் உறுமேல் சாளரத்(து)
இடத்தகும் உறுவிரல் நுதிஅளி எறிதுயர்
அங்குலி தானே அருந்திடில் உடற்கண்
தங்கிய அறிவு தனித்துறும் அன்றே
தற்பண நிழற்கண் குற்றிபாய்ந் தற்றால்
நற்கணில் துயரம் நணுகாத் தகைத்(து)எனில்
நின்மொழி விரோதமும் காட்சி விரோதத்
தன்மையும் உறும்அவை தவ(று)இல ஆகா
யாம்உடைப் பதிவகை யாவரும் பலகலை
சொல்லுதல் எளி(து)அரி(து) அத்தொழில் புரி(வு)எனப்
புல்லிய பழமொழி புதுக்கினை அன்றே
அகண்டிதம் எனநீ பகர்ந்தமை தனக்குப்
பந்தம் இதுஎனத் தந்தமை கருதில்
வானில் நடக்கும் காலினைப் பிடித்துப்
பருவிலங்(கு) இட்ட ஒருவன்நீ அன்றே

## சீவன்முத்தி மறுப்பு

பந்தம(து) அகல முந்து விவேகம்
வான்வளி எனத்தனில் தானே தோன்றின்
முன்புள(து) ஆயின் மயங்கா(து) இல(து)எனின்
பின்புள(து) ஆகா(து) இல(து)உள(து) எனின்வெளி
மலரது தரும்அனல் மரக்கண்இன் றாகித்

தருவது தகும்எனில் தானே தோன்று
விறகின் உதித்த கனல்தகும் ஆயின்
அவித்தையின் உதித்த வித்தை அம்மரத்(து)
உதித்த விவேகம் வித்தைஎன்(று) உரைத்த
வெம்தழல் அனைய விவேகம் உதித்த(து)
இந்தனம் அனைய(து) இறையில்அன்(று) அற்றே
இல்படப் பிரிப்பின் மெய்ப்படும் எவற்றையும்
இதுஅன்(று) இதுஅன்(று) எனக்கழி காலை
அதுவே தானே ஆயின(து) என்றனை
வித்தை முன்னர் அவித்தையும் அவித்தைமுன்
வித்தையும் நில்லா வியன்ஒளி இருள்என
இருள்அல் ஒளிக்கும் ஒளிஅல இருட்கும்
ஒருகா லத்தும் ஒருபயன் இலதால்
இரண்டையும் நுகரும் முரண்தரு விழிஎன
வித்தையும் அவித்தையும் உய்த்த(து)ஒன்(று) உளதே
தானே தான்ஆம் ஆனல் பயன்என்
தன்னில் தன்னைத் தானே காணின்
கண்ணில் கண்ணைக் காணவும் படுமே
தன்நலம் அதனைத் தானே நுகரும்
என்னில் முன்நலம் எய்தா(து) இருந்த(து)என்
கட்டி போல்எனக் கதறினை இன்பம்வந்(து)
ஒட்டிடும் வித்தை உடையை ஆயிடின்ஏ
தத்துவ மசிஎன வைத்தமுப் பதத்திற்(கு)
ஒன்றே பொருள்என்(று) அன்றே பகர்வது
நீபுலி ஆயினை என்றுங்(கு) உணரில்
ஆயினை என்ற(து)அ(து) ஆகுஉவ மைத்தால்
நோயா யினம்எனல் ஆயாய் என்றால்

அகமே பிரமம் ஆயின(து) என்றால்
சகமே அறியத் தான்வே(று) அன்றே
உண்மையில் சலம்இலம் உடல்சலம் சலம்உறும்
வெண்மதி போல விளங்கிடும் என்றனை
அசலன் ஆகிச் சஞ்சல சலத்துச்
சலனம் மேவினம் எனமதி காண
வேண்டும(து) அன்றிக் காண்பவர் பிறர்ஏல்
ஈண்(டு)உன(து) ஏகம்என் செய்த(து) இயம்புக

## பரமுத்தி மறுப்பு

உடல்விடக் கடத்துள் படுவெளி போல்எனில்
விட்(டு)என் பெறஉடல் பட்(டு)என் படமற்(று)
இகல்அற ஒருவன் இவ்வகை தெளியில்
அகிலமும் முத்தி அடைந்திட வேண்டும்
அறிந்தோர் முத்தி அடைந்தோர் ஆயின்
பிறிந்தோர் உயிர்பல பேதத்(து) அன்றே

## பதிஞானம் வாராதென்றது

கன்ம காண்டம் காரணம் ஆக
மன்னும் விவேகம் என்னில் அவித்தைக்(கு)
ஏது காரணம் ஓதினை இல்லை
இதற்கும் காரணம் விதித்தல்வேண் டின்றே
அரணியில் உதித்த கனல்அவை கவர்(வு)என
விரதத்(து) உதித்த விவேகம்அ(து) அழித்தல்
வருந்தி ஆயினும் திருந்திய வேத
நீதி எல்லாம் நீத்துப் போதம்ஒன்(று)
அறியார் தாமும் அவ்வழி நடத்தல்

பொறியோ போத நெறியோ இதுபவம்
நீங்கிடும் நெறிதரு பாங்கினைப் பழித்தல்
நன்றி கொன்றல் அன்றே அன்றியும்
ஞால நீதியும் நான்மறை நீதியும்
பாலர்உன் மத்தர் பசாசரில் எனவும்
உறங்கி னோன்கை வெறும்பாக்(கு) எனவும்
தானே தவிரா(து) ஆனால் புரியா(து)
ஒழிந்திடின் நிரயத்து அழுந்துதல் திடமே
உய்த்தோன் அன்றி முத்தி உரைத்தல்
பித்தோ பிரமம் செத்தோ பெறுவ(து)
உடலையும் நீயே சடம்எனச் சாற்றினை
வையினும் வாழ்த்தினும் கொய்யினும் கொளுத்தினும்
வணங்கினும் உதைப்பினும் பிணங்குதல் செய்யாப்
பிரமத் தன்மை பெறுவ(து)எக் காலம்
இருக்கும் நாள்சில எண்ணில்நூல் கதறித்
தருக்கம் பேசித் தலைபறி உற்றுக்
கண்டோர் ஈந்த பிண்டம்உண்(டு) அலறிப்
பல்நோய் யாக்கை தன்நோய் உற்(று)உடல்
விடவரும் என்று நடுநடு நடுங்கி
விட்(டு)ஓர் தெய்வம் தொட்டின்(று) அன்றியும்
யானே எவரும் ஆனேன் என்றலின்
அவ்வவர் சீறிய அவ்வவர் வாழ்நாள்
செவ்விதின் நிரயம் சேர்த்துவர் அதனால்
மாயா வாதப் பேயா உனக்குத்
தேவரில் ஒருவர் உண்டாக
மேவரு நரகம் விடுதலோ அரிதே.

*பொழிப்பு*

*இதுபற்றிய செய்தி முன்பே கூறப்பட்டது.*

*விளக்கம்*

**வேதம் சுயம்பு அன்று**

மாயாவாதி நிராகரணம்பற்றி நூலாசிரியர் 254 வரிகள் பாடியுள்ளார். இதனுள், வேதம்பற்றியும் - பிரமம்பற்றியும் - சித் - அசித்தோற்றம்பற்றியும் - பிரமாதாபற்றியும் - முத்திநிலைபற்றியும் - பரமுத்திபற்றியும் - சாதன சதுஷ்டயம் பற்றியும் ஆசிரியர் விவரித்துக் கூறுமுகத்தால் சித்தாந்த சைவத்துக்குள்ள மறுக்கமுடியாத ஏற்றங்களையும் குறிப்பித்துச் சொல்லுகிறாராவர். ஜல்பம் - விதண்டை ஆகிய வழிகளை மேற்கொள்ளாதவராய் வாதம் எனப்படும் தருக்க முறையிலேயே சொல்லிச் செல்வதை நாம் கருத்துட் கொள்ளவேண்டும். இவ்வகை நிராகரணங்கள் யாவும் பிற சமயத்தையோ அல்லது பிற சமயத்தவரையோ குறைப்படுத்துதற்குக் கூறப்படுவன அல்ல. உண்மையை உணர்வதில் என்ன என்ன ஆய்வுகள் தேவைப்படுகின்றன என்பதை யாவர்க்கும் தெரியச் செய்வதும், யாவரும் முத்திப்பேறு எய்தவேண்டும் என்கிற கருணை காட்டுவதுமே முக்கியமான நோக்கங்களாகக்கொண்டு இந்த முறை கையாளப்படுகிறது. மேலும், சமயவாதம் வேறு; சமயம் வேறு. சமயம் என்பது அநுஷ்டிக்கப்படுவது; அறியப்படுவதன்று; அறிந்துவிட்டாலே பயன் கிட்டிவிடாது. அநுட்டித்தால்தான் பயன் உண்டு. ஆதலால், யாவரையும் சரியான அநுட்டானத்துக்கு ஆளாக்குவதே இங்கு ஆசிரியரின் நோக்கம் ஆகும். ஆதலால், கோபமும்

துவேஷமும் காரணமாகக்கொண்டதன்று நிராகரணம் என்பது. இதனை முதலில் நாம் உள்ளத்துக்கொள்ளல் நன்றும்.

அன்றியும், இந்த மாயாவாதிநிராகரணம் ஏனைய நிராகரணங்களினும் விரிவுடையது. ஆதலால், இப் பகுதியின் விளக்கம் வாக்கியம் வாக்கியமாக விவரிக்கப்படாமல் நூல் பெருகாமைகருதிக் கட்டுரைமுறையில் சுருக்கமாகவே தரப்படுவதாயிற்று.

நமக்குப் பெத்தநிலை முத்திநிலை என்ற இரண்டு நிலைகள் உள்ளன. இவற்றை விவகாரநிலை எனவும் பாரமார்த்திகநிலை எனவும் மாயாவாதிகள் கூறுவர். உடம்போடுகூடியிருக்கும் நம்முடைய தற்போதுள்ள நிலையே பெத்தம் எனப்படும். பிறப்பு அற்ற நிலையே முத்தி எனப்படும். பிரமம் என்கிற ஒரே பொருள் தான் இந்த இரண்டு நிலையினையும் உடையது என்பர் மாயாவாதியர். இவர்கள் பிரமத்தைத் தவிர்த்து வேறு பொருளை உண்டு என்னார். இந்தக் கொள்கைக்கு இவர்கள் வேதத்தையே பிரமாணமாகக் காட்டுவர். வேதம் என்பது சுருதி. அது பிரமம் ஒன்றுதான் உள்ளது என்று சொல்லுகிறது. ஆனால் ஜீவம் - பரம் என்ற இரண்டு விஷயங்களைச் சொல்லுகின்றதெனக் கொள்ளுதல் சரியாகாது. ஒருவேளை இரண்டையும் அபேதமாகக்கொள்ளவேண்டும் என அறிவுறுத்தற்கு அப்படிச் சொல்லியுள்ளது என்னலாம். அப்படியானால் ஒன்று என்றதை இரண்டு என்றும், இரண்டல்ல என்றும் சொல்லவேண்டியதில்லையாம். வேதத்தில், பேதம் என்றும், அபேதம் என்றும், பேதாபேதம் என்றும் கூறப்படுவதெல்லாம் அந்தப் பிரமம் என்ற

ஒரு பொருளைத்தான் குறிக்கும் என்றால், இங்ஙனம் இரண்டு என்றும், இரண்டல்ல என்றும், இரண்டுமாய் இரண்டல்லவுமாம் என்றும் கூறுவதனால் அமைதி உண்டாகாது; சந்தேகமே அதிகப்படும். ஆதலால், வேதம், பிரமாண விரோதமுடையதாகக் கருதப்பட்டு விடும். இப்படி விரோதமுடையதாகக் கருதப்படாமல் இருத்தற்பொருட்டு, வேதம், பெத்தநிலையில் பேத முடையதென்றும் முத்திநிலையில் அபேதமுடையது என்றும், ஒரே பிரமப்பொருளைத்தான்கூறுகிறதென்று வாதிக்கலாம். இப்படி ஒன்றையே அறுதியிட்டுச் சொல்லாமல் இரண்டு வகையாகவும் சொல்வது சாத்திர விரோதம் எனப்படும். ஒருவேளை வேதம் இரண்டுவிதம் கூறுவதுகொண்டு அதனைப் பிரமாண மாகக் கொள்ளலாகாது என்பது தகாது; ஒன்றுதான் பொருள் என்பதே அதன் கருத்து என்று வாதிக்க லாம். பெத்தத்தில் ஒரு பொருளை இரண்டு என்று சொல்லிப்போட்டுப் பிறகு அதனையே முத்தியில் சீவம், பரம் என்ற இரண்டும் ஒரேபொருள்தான் என்று முன்னுக்குப்பின் முரண்பாடாகக் கூறுதல் குற்ற முடையதேயாகும். இவ்விஷயம் ஆராய்ந்தால் புலப் படக் கூடுமாதலால், பழுது ஆம் இத்திறம் பதையாது ஆய்க என்றுரைத்துக் காட்டியுள்ளார் ஆசிரியர். இது காறும், வேதாந்தியால் பிரமாணமாகக் காட்டப் பட்ட வேதம் கூறிச்செல்லும் முறைமைபற்றிய நிரா கரணம் தரப்பட்டது. இதனில், மாயாவாதி வேதத் தின் கூற்றினை முன்னுக்குப்பின் முரண்படப் பொருள் படுத்துதல் சரியன்று என மறுக்கப்பட்டது.

அடுத்தபடியாக வேதம் யாராலே சொல்லப்பட்டது என்கின்ற கொள்கைபற்றி வாதிக்கப்படுகிறது.

மாயாவாதியர், வேதம் ஒருவராலும் சொல்லப்பட்ட தன்று; சுயம்புவாய் உள்ளது என்று சொல்லுவர். பிரமமே வேதத்தை அருளியது என்னுமல் வேதம் தானே ஆயினது என்பதால் பிரமம் ஒரு முதலும், வேதம் ஒரு முதலும் ஆக இரண்டு முதல்கள் ஆகி விடும். இப்படியானால், ஏகம் என்ற கொள்கைக்குக் குறைவு ஏற்பட்டு அநேகம் என்ற கொள்கைக்கு வழி ஏற்படுவதாகும். மேலும், வேதம் என்பது சப்தரூப மானது. ஆதலால், ஒருவர் இயம்பாமல் - உச்சரி யாமல் சப்தரூபம் தானுகப் பிறக்காது. தானுகப் பிறக்க இயலாமையால் வேதம் சுயம்பு அன்று எனப் படும். ஒருவேளை சப்தமானது, ஆகாயத்திலே ஒருவ ராலும் உச்சரிக்கப்படாமலே உண்டாகலாம். ஆத லால், ஒருவரால் இயம்பப்படவேண்டிய அவசியம் வேதத்துக்கு இல்லை என்றால், ஆகாயத்திலே சப்தம் தானுக ஒருபோதும் உண்டாகாது; வாயு ஏதுவாகவே தோன்றுவதாகும். எனவே, வேதம் சுயம்பு அன்று என்னத் தடையில்லையாம். அதுவுமல்லாமல், வேத மானது எழுத்து, பதம், சொற்றொடர் முதலான பல வேறு ஒலிகளை உடையதாய் அறிவூட்டும் அர்த்தத் தைக் கொண்டுள்ளது. ஆகவே, வேதமானது, வெறும் சப்தஜாலமன்று; சப்தங்களும் அர்த்தங்களு மாக இருப்பதாகும். ஆனால், ஆகாயத்திலே உண் டாகும் சாதாரணச் சப்தங்கட்கு அர்த்தமில்லை. ஆகை யால், அறிவுதரும் இயல்பில்லையாம். எனவே, வேத மானது அறிவுதருமியல்பினதாக இருப்பதால், இது சாதாரண சப்தமன்று என்னத் தடையில்லை. அறிவா யிருப்பதொரு சப்தத்தை அறிவுடைய ஒருபொருள் செய்துதான் இருக்கவேண்டும் என்பது ஏற்படு கின்றது.

அவ்வாறன்றி, வேதமானது சரீரத்தாலே சொல்லப்பட்டது என்று சொன்னால், சரீரம் சடப்பொருளாகும். அதற்கு அறிவு கிடையாது. ஆகவே, அது சப்தத்தையும் அர்த்தத்தையும் சொல்லும் திறமுடையதாகாது. மேலும், பிரமம் அகண்டிதமானது; கண்டிக்கப்படாதது. ஆகையினுல் அந்த அகண்டிதப் பொருள் சப்தத்தையும் அர்த்தத்தையும் அது என்றும் இது என்றும் சுட்டிச்சொல்லாது. இதனுலே, பிரமம் சரீரத்தால் கூறியது என்ற கருத்தும் சரியாகாது. எனவே, எல்லாம் ஒன்றே என்ற சொல் நிலைபெருது என்பது உறுதியாம்.

அருமறையானது அகண்டிதமான பிரமப்பொருளின் பேச்சு ஆகும் என்றுல், அந்தப் பிரமம், அருமறைச் சொற்களை உச்சரிப்பதற்குப் பல், நாக்கு முதலான கருவிகளைப் பெற்றிருக்கவேண்டிவரும். ஆனுல், பிரமம் அகண்டிதமானது. அது கருவிகளற்ற பிரமநிலையிலிருந்தே உச்சரித்தல் ஒருபோதும் நிகழக்கூடியதன்றும்.

பிரமம், கருவிகளைப்பெற்றுச் சொல்லாவிடினும், ஓர் உடம்பினைப் பெற்றிருப்பவனிடம் ஆவேசித்து வேதத்தைச் சொல்லியிருக்கலாம். அது பேயானது ஒருவனிடத்திலே நிலைபெற்று, வருங்கால நிகழ்ச்சிகளைச் சொல்வதுபோன்றதாகும் என்று வாதித்தால், பிரமமானது, தேவருடம்பையா அல்லது இருடியருடம்பையா இவ்விருவகையாருள் யாரைச் சார்ந்து சொன்னது என்று கொள்வது? அப்படியே இவ்விருவருள் ஒருவரைச் சார்ந்திருந்து சொன்னது எனக்கொண்டால் அந்த வேதம், பதிவாக்கியம்

எனப்படாமல் பசுவாக்கியம் எனவேபடும். இதனால் வேதத்துக்குக் கூறப்படும் குற்றமற்ற இயல்புக்குப் பங்கம் ஏற்படும். ஆதலால், வேதத்தைப் பிரமம் எப்படி அருளிச்செய்திருக்கக்கூடும் என்பது இங்கு ஆராயப்பட வேண்டியதாகும்.

பிரபஞ்சத்தைச் சுயம்பு என்கிறோமே அப்படியே வேதத்தையும் சுயம்பு என்றால் என்ன எனக் கேட்கலாம். அதற்குச் சமாதானம் யாதெனில், பிரபஞ்சத்தைச் செய்தோன் சுயம்பு ஆதலால் பிரபஞ்சமும் செய்தோன் பெயரால் சுயம்பு எனப்பட்டது. அப்படியே, நிட்களப்பொருளாகிய கர்த்தா சகளீகரித்து வேதத்தை அருளிச்செய்திருத்தலின் - சொன்னவன் சுயம்புவாதல் நோக்கி - வேதத்தையும் சுயம்பு என்று உலகம் சொல்லுகின்றது. இதுவே வேதம் சுயம்பு என்பதன் உண்மைக்கருத்தாகும் என்று தெரிக என்பதாம்.

வேதத்தில் அநேக இடங்களிலே பற்பல தேவர்களை வணங்கிக் கூறப்படும் வாக்கியங்கள் உள்ளன. கர்த்தாவாக உள்ளவன் வேதத்தைச் சொல்லியிருப்பின், அவன் தன்கீழ்ப்பட்ட தேவதைகளை நமஸ்கரித்துச் சொல்லியது பொருந்துமா? அப்படி அவன் ஏன் சொல்லவேண்டும் என்று ஆட்சேபிக்கலாம். அதன் காரணத்தை இனிக் கூறுவோம். இது மாயாவாதி மேற்கண்டவாறு கூறியதற்கான சமாதானம் ஆகும். அதாவது :- ஓர் அரசனுடைய குடிமக்கள் யாவரும், அரசனிடம் எப்படிப் பேசுவது என்றும் நடந்துகொள்வது என்றும் தெரிந்திருக்கமாட்டார்கள். அரசனே அந்த முறையை மந்திரி முதலானவர்கட்குக் கூறித் தெரிவித்திடுவான். இதனால் அரசன்,

தன்னுடைய குடிமக்களினும் கீழ்ப்பட்டவன் என்று கருதப்படமாட்டான். இவ்வாறே கருத்தாவும், எல்லாரும் பக்குவர்களாக இல்லாத காரணத்தினலே அபக்குவர்கள் எப்படி வழிபாடு செய்யவேண்டும் என்று அந்த அந்தத் தேவதைகளை வியாஜமாகக் கொண்டு சொல்லியதாகும். இதனுல், கர்த்தாவானவன் தேவர்கள் யாவரினும் கீழானவன் எனக் கருதப் படுதல் சரியாகாது. இந்த முறைமையல்லாமல் ஏனைத் தேவர்களைக் கருத்தாவாவான் நமஸ்கரித்துச் சொன்னுன் என்று கூறுதல் அடாது. இது கனவினும் நிகழக் கூடாததாகும் என்றுகூறி நிராகரிக்கப்பட்டது என்க.

அப்படியானுல், கர்த்தாவானவன், தன்னைத் தானே புகழ்ந்து கூறிக்கொள்ளுதல் குற்றமன்ரே என்று ஆக்ஷேபிக்கலாம். ஆனுல், கர்த்தா, தன்னைத் தானே தோத்திரம் பண்ணியிருப்பதெல்லாம், பக்குவ ஆன்மாக்களாக இருப்பவர்கள் தன்னை வழிபாடு செய்யத்தக்க வழிகளைத் தெரிந்துகொள்ளுதற்பொருட்டே கூறியதாகும். மேலும், நமக்கு ஒருபோதும் தெரியாத ஒரு புதியவன், தன்னை நமக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்பும்போது தன்னைப்பற்றிய யாவும் சொன்னுலன்றி நாம் வேறு எவ்வகையினுலும் அப்புதியோனைப் பற்றித் தெரிந்துகொள்ள இயலாது. ஆகவே, 'யான் இன்னேன் ஆவேன்' என்பது ஒருபோதும் குற்றமாகாதென்க. "தன்னுடை ஆற்றல் உணராரிடையிலும் தான் தற்புகழ்தல் தகுதி அன்றே" என்று இலக்கண நூலும் கூறுதல் காணலாம்.

அதுவுமல்லாமல், கருத்தாவானவன் வேதவாசகங்களைத் தனக்குத்தானே சொல்லிக்கொள்ளவில்லை.

வேறொருவர் கேட்டுக்கொள்ளுதற்பொருட்டே கூறி னுன் ஆவன். அப்படிச் சொல்லியது சரீரத்துக்குச் சொல்லப்பட்டதாகாது. ஏனெனில், சரீரம், சொன் னதை உணரக்கூடிய சித்துப்பொருளன்று. ஆகவே, தன்னின் வேருகிய உயிர்களை நோக்கிக் கூறியதே யாகும். எனவே பிறரை நோக்கிக் கூறப்பட்டதென் பதில் ஐயமில்லை. எல்லாம் அறிந்த பிரமம், தன்னை அறிவித்துக்கொள்ள விரும்பித் தனக்குத் தானே சொல்லிக்கொள்ளும் என்றல் அசம்பாவிதமாகும். ஆகையால், வேதம் என்பது பிரமாணம் என்றும், அதனை அருளிச்செய்த கருத்தாவே பிரமேயம் என் றும், அதனைக் கேட்கும் கடப்பாடுடைய ஆன்மாவே பிரமாதா என்றும், கேட்டுக்கொள்ளும் ஆன்ம அறிவே பிரமிதி என்றும் நான்கு பொருள்கள் இத ஞல் சித்திக்கின்றமை காணலாம். எனவே, மாயா வாதம், பொருள் ஒன்றுதான் என்பது பொருந்தா தென்க. வேதத்துள்ளும் இங்ஙனம் நாற்பொருள் பேசப்படுதலால், அதுவும் பொருள் ஒன்றுதான் என்று நிலைநாட்டிற்றில்லை என்பதே அறியத்தக்கதாம். சுருங்க இதனைக் கூறிஞல் ஆன்மாவும் (ஞாதிருவும்), ஆன்மஞானமும் (ஆன்மாவுக்குச் சகாயபூதமான சிவசக்தியும்), சிவமும் (அந்தச் சக்தியால் அறியப் படும் முதற்பொருளும்) உண்டு என்று ஏற்படுதல் தெரியலாம். இதனையே, "நாடி ஞாதிருவும் ஞான ஞேயமுடன் நாளும் நான்மறையும் ஓதலால் ஓடு மாகும் உனது ஏகம்" என்று சித்தியார் கூறிக்காட்டுத லாலும் உணரலாம். ஆதலால், மாயாவாதி கூறும் ஏகம் என்பது சரியன்ரும். இது, உனது ஏகம் நன் றன்றே என்று இவ்வாசிரியர் கூறிக்காட்டுதலால் தெரி யப்படும். ஆகவே பிரமேயமும் வேதத்தியல்பையே

காட்டுவதாகும். இதுகாறும் முதல் 47 வரிகளால் பிரமம் ஏகம் என்பது வேதப்பிரமாணங்கொண்டே மறுக்கப்பட்டது என்க.

## பிரமம் பிரமேயம் அன்று

பிரமம் தன்னுடைய இன்பத்தைத் தான் அறியாது என்பது மாயாவாதியின் கூற்றும். இதற்குக் கரும்பி னிடமாக உண்டாகும் இரசம் கரும்பினின்றும் வேறு பட்டது அன்று ஆதலால் கரும்புக்குத் தோன்றாது என்ற உவமை காட்டப்பட்டது.

பிரமம் அறிவுடைப்பொருள் ஆகும். அறிவுப் பொருளுக்கு உவமை சொல்லுங்கால் அறிவுடைப் பொருளையே கூறவேண்டும். சடமாக உள்ள கரும் பையும் அதன் இரசத்தையும் கூறிக்காட்டுதல் பொருந் தாது. ஆதலால் இந்த உவமை குற்றமுடையதாம். மேலும், கரும்பிலிருந்து செய்யப்பட்ட வெல்லத்தைத் தன்னிலே பிரித்துவைத்துப் பின்பு ஒருசமயம் கூடின பொழுது, இவ்வளவு காலம் அந்த இரசத்தை இழந் தோமே; இப்போது அதனைப் பெற்றோமே என்கிற தன்மை அந்த வெல்லத்துக்கு உண்டாகாது. அதன் இனிப்பு எப்போதும் உள்ளதே. இழந்து பிறகு அடையப்படுவது மன்று. குறைவை நிரப்பிக்கொள் வது மன்று. ஆதலால், பிரமத்தின் அனுபவத்துக்கு இந்த உவமானம் பொருந்துவதன்றாம். இது, அசத் தாம் கட்டி பிறிவித்து ஒட்டினும் பேறது உறாதே என்ற வரியில் கூறப்பட்டதாகும். "உவமமும் பொருளும் ஒத்தல்வேண்டும்" என்னும் இலக்கணமும் இங்குச் சிந்தித்தல் தகுதியுடைத்தாம். இதனால், இன்ப

அனுபவமுடையது ஆன்மா என்பது கருதத்தக்கது. ஆகவே, ஆன்மா பிரமமன்று என்பது தெளிவாம்.

## பொன்பணி உவமை

தற்பர விரிவு பொன் பணி தரும் என்பர் மாயாவாதிகள். அதாவது, பரப்பிரமமே, தேகம் முதலான பிரபஞ்சமாகவும் பலவாகவும் விரிந்தது. அது, பொன்னனது பற்பல ஆபரணங்களாக இருந்த தன்மைபோலாகும் என்பதாம். இதனால் இவர்கள் அபேதவாதம் மேற்கொண்டோர் ஆவர். இக்கருத்தினால் பொன்னே ஆபரணங்களாக ஆனதுபோலப் பிரமமே உயிராயிற்று என்று கொள்ளவேண்டிவரும். இவ்வாறு கொண்டால் ஆபரணத்தினிடத்துப் பொன்னின் தன்மை விளங்குவது போலவே, உயிரினிடத்தே பிரமத்தின் இயல்பு விளங்கவேண்டும். பிரமத்துக்கு நினைப்பு மறப்புக்களும், சுகதுக்கங்களும், கட்டுப் பட்ட தன்மையும் ஆகிய இவை இல்லை. இம்மாதிரியான குறைபாடுகளெல்லாம் உயிர்களிடம் உள்ளன. ஆதலால், இந்த உவமையானது பிரமத்துக்குச் சுக துக்கம் முதலிய விகாரம் உண்டென்று காட்டுதலின் குறைபாடுடையதாகும். ஆனால் பொன்னும் பணியும் போல என்று உபநிடதங்கள் உவமை உரைப்பதானது, பொன் என்ற ஒரு பொருள் உண்டு; ஆபரணம் என்ற ஒரு பொருள் உண்டு; ஆபரணம், பொன்னையின்றித் தனித்திராது; உடல் உயிர்போலப் பிரிக்கவராக் கலப்புடையது; ஆதலால், இறைவனையின்றி உயிர் தனித்து நில்லாது என்பதே உண்மைக் கருத்தாம் என்க. வேதத்தில் ஒன்றுதான் பொருள் என்பதற்குப் பதிப்பொருள் ஒன்றே; இரண்டல்ல

என்பது பொருளாகக் கொள்ளப்படும். உயிர்கள் நிலைத்தற்கு இறைவன் உதவிப்படுதலையே மேற்கூறிய உவமை காட்டும் எனக் கொள்ளுதல் நேரிது ஆகும். அன்றியும்,

பொன்னானது, தானாகவே ஆபரணங்களாக மாறாது. பொன்னை ஆபரணங்களாக ஆக்கும் தொழிலைப் பொற்கொல்லன் புரிகின்றான். ஆதலால், செய்வோன் வேறொருவன் உண்டு என்று இந்த உவமை குறிக்கலுறும். ஆகவே பிரமம், பிரபஞ்சமாக விரிந்ததும் வேறு ஒருவனால் என்று கூறப்பட்டு இறைமைக்கு இழுக்குண்டாகிவிடும். இதனை, "பொன் பணி போல் அபேதப் பிறப்பு இலதாய்" என்று சித்தியாரில் கூறிக்காட்டுதல்கொண்டும் உணரலாகும். மற்றும், பொன்னும் பணியும் மாற்றொன்று ஆற்றுபோல எல்லார்க்கும் சுகதுக்கங்கள் ஒத்தல்வேண்டும்; அப்படிக் கில்லை என்று அவ்விடத்தே கூறப்படுதலும் காணல் தகும். பிரமத்தை விகாரம் அற்றது என்று கூறிவிட்டுப் பிறகு விகாரம் உற்றது என்று கூறுதலும் மயக்கம் தருவது ஆகும். இவ்விஷயத்தைக்கூறுவது, செய்வோ ரின்றிச் செய்வினை இன்மையின் என்ற இடம் ஆகும்.

இனிச் செய்வோன் வேறொருவன் வேண்டுவ தில்லை; பிரமமே எல்லாவற்றையும் செய்யும் என்று மாயாவாதி கூறுதலை மறுக்கலுறுகின்றார் ஆசிரியர். சால், குடம், சட்டி, பானை முதலியவை செயப்படு பொருள்களாம். இவைகள் யாவும் மண் என்கிற முதற் பொருளினாலே செய்யப்பட்டவை ஆகும். ஆகவே, மண் உபாதான காரணமாம். ஆனால், மண்ணானது தானாகவே பாண்டங்களாக மாறாது.

அதனை அவ்வாறு மாற்றுதற்கு மண்ணின் வேறான குலாலன் ஒருவன் இருக்கவேண்டும். இவனை நிமித்த காரணன் என்பர். குலாலனே, சட்டி முதலிய பாண்டங்களாக மாறமாட்டான். தன்னின் வேறான மண்ணினைக்கொண்டே இங்ஙனம் செய்கிறான். ஆதலால், பிரமத்தின் வேறாகப் பிரபஞ்சத்தை ஆக்குதற்கான உபாதான காரணம் வேறு ஒன்று தேவைப்படுகின்றது. அதுவே பிரமத்தின்வேறாகிய மாயை ஆகும். எனவே, பிரமமே பிரபஞ்சமாகத் தன்னைத்தானே செய்து கொள்ளுகின்றது என்பது பொருந்தாது என்று தெரிதல் நன்றாம்.

முதற் காரணமானது தானாகவே செய்பொருள்களாக மாறும் என்றும், ஆனதினால் பிரமமே முதற் காரணமாய் நின்று, தானே பிரபஞ்சமாகவும் மாறிற்று என்பதும் மாயாவாதி கூறும் செய்தியாகும். இதனை ஆசிரியர் மறுத்து உரைக்கின்றாராவர். மண்ணானது, குடம் முதலியவற்றிற்கு முதற்காரணமாம். அந்த மண்ணானது தானே குடம் முதலியவைகளாக மாறாது. ஏனெனில், மண் சடப்பொருளாம். ஆகையால், சடமான உபாதானம் பிரபஞ்சமாக மாறாது. அதாவது மாயை, பிரபஞ்சமாக மாறாது. அதனை மாற்றுதற்கு ஒரு கர்த்தா வேண்டும். அக்கர்த்தாவே செய்பவன் ஆவான். ஆதலால், அவன் நிமித்த காரணனேயன்றி ஒருபோதும் உபாதான காரணமாக ஆகமாட்டான். செய்வோர் ஒருவரில்லாமல் எந்தச் செய்பொருள்களும் முதற்பொருளிலிருந்து விளைதல் இல்லை என்பது உலகத்துக் கண்கூடாகக் கண்ட செய்தியே ஆம் எனத் தெரிக.

பிரபஞ்சம் உண்மைப்பொருளன்று; அசத்தியப் பொருளேயாகும். ஆதலால், இப்பொய்யாயுள்ளதும் - மெய்போலக் காணப்படுவதும் ஆகிய பிரபஞ்சத்தைக் குடம் முதலியவைபோல முதற்பொருள் ஒன்று கொண்டு பிரமம் செய்யவேண்டுவதில்லை என்பது மாயாவாதியின் ஒருகொள்கையாகும். இதற்கு இவர்கள் இப்பியானது வெள்ளியாகத் தோற்றமளித்தலை உவமையாகக் காட்டிக் கூறுவர்.

இப்பி, வெள்ளி இரண்டுமே சடப்பொருள்களாம். இப்பியானது, தன் ஒரு தன்மையான வெண்மை கொண்டு வெள்ளியை உண்டாக்கவில்லை. இவற்றை ஒன்றையொன்றுகக்கண்டு மயங்குவோன் இவ்விரண்டின் வேறுபட்டவனுவன். மேலும் பிரமம் என்பது அறிவாயுள்ள பொருளாகும். இது சடமாய் உள்ள பிரபஞ்சத்தைத் தன் ஒரு தன்மையால் உண்டாக்காது. உண்டாக்குமெனக் கொள்ளின் பிரமத்தினிடமும் அறியாமை - சடத்தன்மை உள்ளது எனக் கொள்ளவேண்டி வரும். ஆதலாலும் பிரமம், தான் உபாதானத்தின் வேருக நின்றே உண்டாக்கும் என்பது பெறப்படும் என்க. மற்றும், கண்ணுக்குக் காணப்படும் உலகத்தை மித்தை என்று சொன்னது, உலகம் செயற்படுகின்றதென்றமையால் பொருந்தாத பிராந்திக் கூற்றுகும். ஆகையால், மெய்யாய்க் காணப்படும் பொருளானது உண்மையில் பொய்யாம் என்று முன்னுக்குப்பின் மலைவாகக்கூறுதல் கூறுவோரின் மறதி காட்டும் தன்மையதாகும். பிரபஞ்சம் பொய்ப் பொருள் என்பதன் உண்மைப்பொருள், அது காரியப்பட்டு நின்ற இயல்பு நீங்கிக் காரணப்பட்டு அதாவது சூக்குமப்பட்டு உள்பொருளாகவே முதல்வனிடம்

ஒடுங்கியுள்ளது என்றே கொள்ளப்படுதல் நேர்மையாகும் என்க.

விவகாரத்தில் வேண்டுதும் உலகம் - பரமார்த்தத்தில் பகராம் என்பது மாயாவாதியின் கொள்கையாகும். பேச்சுக்கு ஒன்றும், நடைமுறைக்கு வேறு ஒன்றுமாக மாயாவாதியர் இரண்டு கொள்கைகள் உடையர். அவற்றை விவகாரம் என்றும் பரமார்த்திகம் என்றும் பெயரிட்டுக்கூறுவர். இவர்கள் உபாதி வயப்பட்டதான பிரபஞ்சத்தை விவகாரம் என்பர்; பிரமத்தைப் பரமார்த்திகம் என்பர். இவ்விரண்டு கொள்கைகளையும் அடிப்படையாகக் கொண்டே இவர்கள், எதனையும் விவகரிப்பது வழக்கமாம். ஆதலால், பிரமத்தை விவகாரத்தில் பிரபஞ்சம் என்பதாகக் கொள்வதில் இழுக்கு ஏதும் இல்லை என்பர். நான் பிரமம் என்று அறியாதநிலையே விவகாரநிலை ஆகும். நான் பிரமம் என்று அறிந்த நிலை பரமார்த்தநிலையாம். விவகாரதிசையில் பிரமமானது உபாதிகள்வசத்தால், தன்னைச் சீவன் என்று பிரமாணம் பண்ணிக்கொண்டு நிற்கும். நான் பிரமம் என்று அறிந்தமாத்திரத்திலே எல்லாம் பொய்யாயிருந்தபடியால் அந்நிலை உலகம் என்று சொல்லப்படத் தக்கதாகாது. இவ்வாறெல்லாம் கூறுவது மாயாவாதியின் பக்ஷம் ஆம்.

இந்த உலகமானது பரமார்த்தமாக உள்ள பிரமத்தினின்றும் உண்டானது என்றால், பிரமம் சத்தியமானது ஆதலால் உலகமும் உள்பொருளாகிய பரமார்த்தமே ஆகவேண்டும். பரமார்த்தத்தில் உலகு இல்லை என்று சொன்னால், பிரமத்தினின்று தோன்றிற்று உலகம் என்கிற வார்த்தை பயனற்றதாகும்

ஆதலால், உலகத்தோற்றம் பற்றிய மாயாவாதமும் முன்னுக்குப் பின் முரணாகவே உள்ளதாகும்.

ஒருவேளை, உலகம் பிரமத்தினிடமிருந்து தோன்றியதன்று எனக்கொண்டால் அது தோன்றுவதற்கான முதற்பொருள் வேறு எது? என்று சொல்ல வேண்டி வரும். அப்படிச் சொல்ல முடியாவிடின் வாதம் பயனற்றதாகும். ஆகவே தோல்வி அடைந்தபடியாம்.

மற்றும், பரமார்த்தநிலையாய் இருப்பது பிரமம். அதாவது அறிவாய் இருப்பதாகும். ஆனால் ஜீவனோ மாயா உபாதிகளோடு சம்பந்தப்பட்டதாக உள்ளது. ஆகையால், உபாதி சகிதமான ஜீவன் ஒரு முதல் (பொருள்) ஆகும். மேலும், அந்தப் பிரமம்தான் இப்படி அறியமாட்டாத நிலைமையுடையதாக உள்ளது என்றால், பரமார்த்தத்தே அறிவுடையதான அப்பொருள் ஏன் அறிவில்லாததாக விவகாரத்தில் ஆகிறது? உபாதிவசத்தால் அறியாமலுள்ளது என்றால், பிரமமும் ஆன்மாவும் வேறு பொருளாகாமல், ஒரே பொருளாயிருத்தலால் உபாதிவசத்திலே உள்ளபோது பெற்றிருக்கும் அறியாத்தன்மை பிரமத்தினிடத்தும் இருந்தே தீரும். பிரமம் அறியாமை உடையதாகுமானால், வேதமாகிய பிரமாணத்தைக்கொண்டு பிரமம் அறிவுடைய பொருள் என்று மாயாவாதி சொல்லிய செய்தி தவறுபடும். ஆதலால், பிரமாணம் தவறிவிட்ட குற்றம் உண்டாகும். ஆதலால், பிரமம் வேறு, உலகம் வேறு, ஜீவன் வேறு என்று கொள்வதே பொருந்துவதாகும்.

பிரமாணம் அல்லது அளவை என்பது மூன்று வகைப்படும். அவையாவன பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் என்பனவாம். இந்திரியத்தால் தோன்றும் யதார்த்த ஞானம் பிரத்தியட்சம் (Sensuous Perception) எனப்படும். ஆன்மாவானது மனத்தோடும், மனம் இந்திரியத்தோடும், இந்திரியம் பொருளோடும் கூடுவதனுல் விஷயம் விளங்கலுறுகிறது. இது பிரத்தியட்சப் பிரமாணம் ஆம். இலிங்க பராமரிசம் (Inference) அனுமானம் எனப்படும். அதாவது, குறிப்புக்கொண்டு ஆராய்வதாகும். ஆகமம் ஆப்தவாக்கியமாம். தன்னிடம் பிராந்தி இல்லாமல் பொருள்களை உள்ளவாறுணர்ந்து விருப்பு வெறுப்பு இன்றி அவற்றை உணர்ந்தவாறே உரைப்பவனை ஆப்தன் என்பர். மயக்கத்தால் விபரீதமாக உணர்ந்து கூறுபவனைப் பிராந்தன் என்பர். விருப்பு வெறுப்பால் அறிந்த ஒன்றை விபரீதமாக உரைப்பவன் வஞ்சகனுவான்.

இந்த நியாயங்களை வைத்துக்கொண்டு கூறினுல் ஆப்தவாக்கியமான ஆகமத்தைப் பிரமாணமாக ஏற்றுக்கொண்டு, பிரமத்தை அறிவுடையது என்று முன்னம் சொல்லிப் பின்னர் அதுவே உபாதிவசத்தால் அறியாமல் இருப்பது என்று கூறினுல் அஃது உரை ஆர் அளவை ஒழிந்தமை ஆகும் என்க. ஆதலால், முன்னே சொல்லப்பட்ட இந்தமூன்றுவித அளவைகளின் வழியே நுழைந்துஆராயின் வாக்கு மனங்கட்கு எட்டாதது எனப்படும் பிரமேயம் என்பது. அறிவு குறைந்தது எனப்படாது. எனவே பிரமாணத்தின் மாறுபடாததே பிரமேயம் எனப்படும் கர்த்தா ஆகும் என்க.

## பிரமிதி மறுப்பு

பிரமிதி என்பது ஆன்ம அறிவு ஆகும். இறை யறிவே ஆன்ம அறிவு என்பதில் பொருத்தமின்மை காணப்படலாகும். ஆனல், மாயாவாதியர் பொன் பிதிர் பிதிர்ந்தும் பொன்னே ஆம் என்பர். அதாவது, பொன்னும் பணியும் போன்றதே பிரமமும் பிரபஞ்சமும் என்பதாம். ஆனல், ஆபரணங்களுடையதும், பொன்னினுடையதுமான மாற்றும் நிறமும், பொன்னனது பல பணிகளாக மாறுவதால் மாற்றம் அடைவதில்லை என்பது நன்ருய்த் தெரிந்த விஷயமாகும். ஆபரணங்கள் திரும்பவும் கட்டியாம்போது பொன்னுகவே ஆகின்றன. அப்போதும் மாற்றம் ஏதும் முன் சொல்லப்பட்டவற்றில் இல்லை. இந்த நியாயத்தின்படி பார்த்தால் பிரமமும் பிரபஞ்சமும் ஒரேமாதிரியான அறிவுடைமை பெற்றிருக்க வேண்டும். பிரபஞ்சம் அசித்தென்பது யாவர்க்கும் உடன்பாடாம். பிரமம் சித்துப்பொருளாம். பிரமமே பிரபஞ்சமாக ஆவதானல், பொன் ஆபரணமான இடத்துத் தன்மைமாறுபடாமைபோலவே, பிரபஞ்சமும் சித்துத்தன்மை பெற்றிருக்கவேண்டும். உண்மையில் அப்படி இல்லை. ஆதலால் பிரபஞ்சமும் சித்திநிடமிருந்து பிறந்தது என்று சொல்லும் மாயாவாதியின் கூற்றுச் சரியன்ரும் என்க. இதனல் சத்தாயுள்ள பிரமம் அசத்தாயுள்ள பிரபஞ்சத்தைத் தந்ததென்றல் பொருந்தாமை தெரியலாம்.

இங்ஙனம், மறுக்கக்கேட்ட மாயாவாதியானவன், சித்தினிடமிருந்து அசித்துத் தோன்றுதல்கூடும் என்பதற்குச் சிலம்பி நூல் தரும் என்ற உவமை கூறிக் காட்டினன். சிலம்பி சித்துள்ளது. நூல் சடமானது.

இவற்றைக் கருதிப்பார்த்தால் சித்தாயுள்ள பிரமத்திலே சடமாய் உள்ள பிரபஞ்சம் தோன்றுதல் அசம்பாவிதம் ஆகாது என்றனன் மாயாவாதி. இதனை மறுப்பது இனிவரும் கூற்று ஆகும். சிலந்தியாகிய சித்திலிருந்து நூலாகிய சடம் தோன்றும் என்பது நுட்பமாக ஆராயாதார் பேசுவதாகும். சிலந்தி என்பது உடம்பும் உயிரும் கூடிய ஒன்றின்பெயராம். இதனில் சிலந்தியின் உடம்பாகிய சடத்திலிருந்துதான் நூலாகிய சடம் தோன்றிற்றே அல்லாமல் உயிரிலிருந்து தோன்றிற்றில்லை. மனிதனுடைய உடம்பிலிருந்து நகம் மயிர் முதலியன தோன்றுவதும் இப்படித்தான். ஆனால், உயிரில்லாத சிலந்தியினுடலிலிருந்து நூல் தோன்றாது. ஆதலால் உயிர் நிமித்தகாரணம் எனப்படும்; உடம்பு முதற்காரணம் எனப்படும். இதனால் சித்திலிருந்து சடம் தோன்றிற்று என்றல் ஏற்றுக் கொள்ளத்தக்கது அன்றாம். உயிருள்ள சிலந்திக்கு நூலைத் தோற்றுவிப்பது அதன் தொழிலெனவேபடும். இத்தொழிலை அது எப்போதும் செய்துகொண்டே உள்ளது. ஆனால், பிரபஞ்சம் என்பது பிரமத்தினிடமிருந்து ஓர் அவதரத்திலே தோன்றுகின்றதேயன்றி எப்போதும் தோன்றிக்கொண்டே இல்லை. மேலும், சிலம்பியினிடம் தோன்றுகின்ற நூல் ஒரேவிதமான தன்மை உள்ளது. பிரபஞ்சமோ அப்படியில்லை. அது பலவிதமாக உள்ளது. ஆதலால், சித்திலிருந்து சடம் தோன்றும் என்ற உவமை ஆராயுங்கால் பொருத்தமின்றி இருத்தல் காணப்படும் என்க.

இதைக்கேட்டதும் மாயாவாதியானவன் பிரமத்தினிடமிருந்து தோன்றிய பிரபஞ்சம், சிலந்திநூல்போல ஒரேவிதமாக இருக்கவேண்டுமென்றதில்லை. மரம்

என்கிற ஒன்றிலிருந்து இலை, பூ, காய், பழம் முதலிய பலவகைப்பொருள்கள் தோன்றுகின்றன. நீரிலிருந்து நுரை, திரை, நீர்த்துளிகள், குமிழிகள் முதலிய பல தோற்றங்கள் எழுகின்றன. ஆதலால், பிரமத்தினிட மிருந்து தோன்றிய பிரபஞ்சமும் இப்படியே பலவித மாக இருத்தல் வியப்பன்று என்று வாதித்தான். இனி இக்கருத்தைச் சித்தாந்தி சத்து அசத்தாகவும், சத்தி னில் அசத்தின் கொத்து உளதாகவும் கூறினர் இலர் என்ற நியாயம்கூறி மறுக்கலுற்றார். அறிவாயுள்ள பொருள் அறியாமையாயும் இருக்கும் என்பதும், அறிவினிடமிருந்து அறியாமைக் கூட்டங்கள் பிறக் கும் என்பதும் மலைவான வாதம் என்று யாவரும் ஒப்புவர். இது புத்தர் சமணர் முதலாயினோரும் ஒப்பும் செய்தியாகும். அன்றியும், இலையும், கனியும், விழுதும் முதலியவைகளாகக் காணப்படும் பெரியதோர் ஆல மரம், அவற்றையெல்லாம் தன்னகத்தடக்கிய சூக்கும மான வித்திலிருந்தே தோன்றுகின்றது. அந்தச் சூக்கும ரூபமான வித்துத்தான், மேலே சொல்லியவாறுள்ள தூலமாகப் பரிணமிக்கின்றது. அப்படியே, சூக்கும மாகவும் அசத்தாகவும் உள்ளதொரு முதற்காரணத்தி னிடமிருந்துதான் தூலமான பிரபஞ்சம் உண்டாதல் வேண்டியுள்ளது. ஆகவே, தூலப்படுவதும், சூக்கும மாயிருப்பதுமானதொரு முதற்காரணம் பிரபஞ்சத் துக்கும் உள்ளது என்று தெரிதலே அறிவுக்குப் பொருந்துவதாகும் என்க. நெல்லிலிருந்து பதரும், வைக்கோலும் தோன்றுவதும் உபாதானகாரணம் உள்ளதென்பதையே காட்டவல்லதாகும் என அறிய லாம். மேலும், எது காரணமாகுமோ அதன்தன்மை காரியத்திலும் காணப்படும். "விரை ஒன்றுபோடச்

சுரை ஒன்று முளைக்குமா?" என்ற பழமொழியும் இதனை விளக்கவல்லதே. இப்படிப்பட்ட காரண காரிய இயைபு இல்லாவிட்டால் மண்ணிலிருந்து புடவை உண்டாகலாம்; பருத்தியில் இருந்துதான் புடவை உண்டாகவேண்டும் என்ற நியதியில்லை. இப்படி மாறுபடாத ஒரு நியதி இருப்பதால் சடம் காரணமாகச் சடமே உண்டாகும்; சித்துக் காரண மாகச் சடம் உண்டாகாது. இதனால், சித்தாய் அழி வில்லாததாய் இருக்கும் பிரமம், சடமாய் அழிந்து போவதாய் இருக்கும் உடல் முதலாம் பிரபஞ்சத் துக்கு உபாதான காரணம் என்றமை பொருந்தாது என்பது தெரியப்படும்.

சித்தாயுள்ள பிரமத்தினின்று சடமாயுள்ள பிர பஞ்சம் தோன்றுவது இயற்கையாகும். இயற்கைக் குக் காரணகாரிய இயைபு கூறவேண்டுவதில்லை என்று மாயாவாதி தன் கொள்கையை மீட்டும் நாட்டுதலாயி னன். அதாவது அக்கினிக்கு வெம்மை இயல்பாம்; இதற்குக் காரணம்கேட்டல் முறையன்று என்பதாம். அப்படியானல் அக்கினிக்கு உஷ்ணம் இயல்பாவது போலச் சித்துக்கு இயல்பு எனப்படும் பிரபஞ்சமும் சித்தாக இருப்பதே இயல்பு எனப்படவேண்டும். பிரபஞ்சத்துக்குச் சடத்தன்மைதான் இயல்பு என்று கூறினல், பிரமத்தினுடைய இயல்பு பிரபஞ்சத்து இயல்பே உடையதாகவேண்டும். ஆதலால் இயற்கை என்ற வழக்கும் பொருத்தமில்லாத பேச்சாகும். பிர காசத்தை இயற்கையாகக்கொண்ட விளக்கு இருட் டினைப் பொதிந்துகொண்டிராது. அப்படியேதான், சித்தாயுள்ள பிரமத்துக்குச் சடமாயுள்ள பிரபஞ்சம் இயற்கை ஆகாது என்க. இதனை, "பிரிவில்லா

இருளொன்று பிணக்கொன்றில்லாப் பெருவெயிலை மறைத்துலகம் காட்டும் என்ன, அறிவில்லா அறிவொன்றை அவித்தை மூடி அகம் புறம் என்றிவை யனைத்தும் அமைக்கும் என்பார்" என்றார் உரையொடும் பொருத்திக் காணலுமாகும்.

இனி விளக்கு உவமைகொண்டது நல்லதுதான். பிரகாசமான பெரிய அகல்விளக்கிலிருந்து கருமையான மையானது உண்டாகிறதல்லவா? அப்படித்தான் சித்தாய் உள்ள பிரமத்தினிடமிருந்து அதற்கு மாறுபட்ட பிரபஞ்சம் தோன்றுகிறது என்றனன் மாயாவாதி. இதனை மறுப்பது தன் இயல்பு அன்று அதன் உபாதி வசத்தால் மன்னியது என்ற வரியாகும். விளக்கினுடைய இயல்பன்று கரிய மையின் விளைவு. ஆனால் அவ்விளக்கிலே உள்ள திரி, நெய் முதலிய உபாதிகளின் விளைவாகும். இதனை விளக்கின் இயல் பென்றல் ஏலாது. மேலும் பிரமத்தில் தோன்றிய பிரபஞ்சம் திரும்பவும் பிரமத்தினிடமே ஒடுங்கிவிடுகிறது. விளக்கில்தோன்றிய மையானது திரும்பவும் அந்தவிளக்கிலே சென்று ஒடுங்கக் காண்கிலோம். இதனாலும், மையானது விளக்கினிடமிருந்து தோன்றிய இயற்கையாகாதென்னலாம். மேலும், வேதம் பிரமப் பொருளினை ஒப்பற்றவன் என்றும், சுத்தன் என்றும் சொல்லுகிறது. அதனிடம், அசுத்தப் பிரபஞ்சம் தோன்றுதற்கு எவ்விதப் பிரமாணமும் இல்லையாம். ஆகையினலே, இந்த மாயா உபாதிகளுடன் பிரமம் கூடியிருக்கவேண்டிய அவசியம் எதுவும் இன்று என்பது வெளிப்படையாம்.

பிரமத்தினிடம் எப்போதுமே உபாதிகள் இருப்பதில்லை என்பது உண்மைதான். உபாதிசூனியமானது

பிரமம் என்பது சரியே. பிரமம் உபாதியை விளைத்தது என்று கொள்ளாமல், உபாதிகள் ஓர் அவதரத்தில் பிரமத்தினிடம் கூடின என்று கொள்வதில் தவறில்லை என்று மாயாவாதி கூறலாகும்.

அப்படியானால், மாயா உபாதிகள் எனப்படுவ தொன்று எப்போதும் அழிவின்றி இருப்பதாகிய ஒரு பொருள் எனப்படும் அன்றே! அப்படிப்பட்ட முடிவற்ற மாயா உபாதிகள் காரணமில்லாமல் பிரமத்தினிடம் வந்து கூடமாட்டா. மாயை சடப்பொருளாதலால், அதனிடம் காரணமாதற்கு வேண்டிய அறிவு இல்லை. ஆகவே, அந்த மாயா உபாதிகளின் கூட்டுறவுக்குப் பிரமத்தினிடந்தான் ஏதாவது காரணம் இருக்க வேண்டி வரும். அவ்வாறாயின் மாயைப் புணர்ப்புக்குப் பிரமத்தினிடம் என்ன காரணம் உள்ளது என்று சித்தாந்தி கூறிக்கேட்டு மறுக்கலுற்றாராவர்.

இதுகேட்ட மாயாவாதி, நின்மலமாயிருக்கும் வானவெளியை மேகம் வந்து மறைக்கிறதல்லவா? அதற்குக் காரணம் ஏது? அது இயற்கையாய் நிகழ்வதுதானே? அப்படித்தான் சுத்தமுடையதான பிரமத்தை மாயா உபாதிகள் இயல்பாகவேவந்து கூடின என்பது பொருந்தும் என்றான்.

இவ்வாறு மாயாவாதி கூறுதலும், சித்தாந்தியாவார், இப்படி உபாதிகள், சுத்தப்பொருளை இயல்பாக வந்து பொருந்தும் என்றால், முக்தி என்கிற சுத்த நிலையே நிலையில்லாததாகுமே! ஏனென்றால், எல்லா உபாதிகளையும் நீங்கப்பெற்றுச் சுத்தத்தை மேவினவர்களையும் அது - உபாதி வந்து பொருந்துமே! இதனால் முக்தி என்கிற ஒன்றே இல்லை எனப்பட்டு வழுப்படும் என்றனர்.

இந்த விஷயத்தை மறுப்பதற்காக, மாயாவாதி, பிரமம் இப்படிப்பட்ட மாயா சரீரங்களைப் பொருந்தி மயங்குவதுபோலக் காட்டுவது பிரமத்தின் ஒரு விளையாட்டாகும். ஆதலால் முத்திப்பேறு உண்டென்றே கொள்ளப்படும் என்றனன்.

விளையாட்டு என்று சொல்வாயாஞல், விளையாடுபவனும், அவன் விளையாடற்குக் கொண்ட பொருளும் என இரண்டு பொருள்கள் வேறு வேருக இருக்கவேண்டிவரும். ஆகவே, மாயா சரீரங்கள் பிரமத்துக்கு வேறுபட்டவை என்னப்படும். அப்படிக் கொண்டால், பிரமத்தினிடம் தோன்றிப் பிரமத்தை மறைக்கும் என்ற கூற்றுப் பொருத்தமில்லை என்று சித்தாந்தியால் மறுப்புரைக்கப்பட்டது. மேலும், உலண்டுப்புழு, தன்னிடமிருந்து தோன்றிய நுண்ணிய நூற்கூட்டினுள் தானே புகுந்திருப்பதை உவமையாகக் கூறிஞல் அதுவும் ஏற்கத்தக்கதன்று. ஏனெனில், அங்ஙனம் உள்ளே அகப்பட்டுக்கொண்ட புழுவானது பிறகு வெளிவரமாட்டாமல் உள்ளேயே மடிந்துபோகக் காண்கின்ருேம்; அன்றி, நூலின் பொருட்டு மடிக்கப்படுதலும் காணப்படுகின்றது. ஆகவே, கூட்டுப்புழுவுக்குத் தாஞக வெளிப்படும் இயல்பு இல்லாமையால், அதற்குச் சுதந்தரம் இல்லை என்பதும், முற்றறிவு இல்லை என்பதும் தோன்றும். அப்படியே, பிரமமும் மாயாசரீரத்துக்குள் விளையாட்டாகத் தானே விளைத்துப் புகுந்துகொள்ளுமாஞல், தானே வெளிவரமாட்டாமல் வருந்தநேரும். அல்லது அதனை வெளிப்படுத்துதற்குச் சுதந்தரமுள்ள மற்ஞெரு முதலின் உதவி தேவைப்படும். ஆகவே, பிரமப் பொருள் பாசபந்தி எனப்பட்டு முழு முதன்மையும்

பூரண ஞானமும் இல்லாததாகும். மேலும், அதற்கு முத்தி உபாயம் கற்பித்தாக்குதற்கு ஒரு குரு முதலும் இருந்தேதீரவேண்டும். இவ்வாறு ஒரு குரு முதல், பிரமத்தை மாயா சரீரத்தினை நீங்கச்செய்து, பாவ நீக்கம் புரிந்து, தனக்கு அடிமையாக ஆண்டுகொள்ளு மாறல், அது பிரமம் எனப்படாது. குரு முதலே பிரமம் எனப்படுவதாகும்.

அன்றியும், அதன் அவித்தையை (அதன்) வித்தை தவிர்க்கும் என்று ஒருவேளை கூறலாம். அதாவது, தாமிரம் என்னும் காளிதப்பொருளானது இரச குளிகையுடன் கூடினதும் இயல்பாகவே காளிதம் நீங்கப்பெற்றுப் பொன்னுகிறது. இப்படியே பிரமத் தின் மாயா சரீர சம்பந்தத்தை அதே பிரமத்தினிட மிருந்து தோன்றிய விவேகஞானம் நீக்கிவிட அந்தப் பிரமம் சுத்தமாகிவிடுகின்றது என்பதாம். இப்படிச் சொல்லும் உவமானமும் பொருத்தமானதாகாது. ஏனென்றல், பிரமப்பொருள் நித்தியமானது; எல்லா மறிவது; குற்றமற்றது என்று முன்னே பிரமலக்ஷணம் கூறியது பொருந்தாதுபோய்ப் பிரமம் அசுத்தமாயிருக் கும் ஒருமுதல் எனப்படும். மேலும், ஒரே பிரமத்தி னிடம் அவித்தை விவேகம் என்ற இரண்டும் இருக்க முடியாது. அன்றி, அவித்தையோடு விவேகம் கூடி நிற்பதொரு முதலாகாது. ஆகவே, விவேகம் வேறொரு முதல் எனவேண்டி வரும். இந்த விவேகமே அந்தப் பிரமம் என்று கூறினல், பிரமப்பொருளும் சகலர் முதலாவார் போன்று பாசபந்தப்படும் ஒன்றெனவே கொள்ளப்படும். இங்ஙனம், பிரமத்துக்கு இழுக்கு உரைத்தல் நன்றன்றும். இதனை ஒப்புக்கொள்ளாமல் பிடிவாதமே கொண்டால் அங்ஙனம் கொள்ளுவோர்

பொல்லாதவர் என்று கூறப்படுவர் என்றும் சித்தாந்தம் செய்யப்பட்டது என்க.

## பிரமாதா மறுப்பு

பிரமமே ஆன்மா என்ற கொள்கைபற்றிய வாதம் இனிப் பேசப்படுகின்றது.

மாயாவாதி பேசுவது: ஆன்மா ஒன்றுதான். அது பிரமமேயாகும். பலவித நிறங்களுடைய இரத்தின மணிகளால் ஆகிய மாலையின் ஊடே ஒரே நூல் செல்லுகிறது. அந்த அந்த நிறமுள்ள மணிகளின் உள்ளேசெல்லும் நூலின்பகுதி அந்த அந்த நிறமுள்ள நூல்கள்போலக் காணப்படுகிறது. ஆனால், உண்மையில் ஒரே நூல்தான் இவற்றின் ஊடே செல்வதால் இப்படிப் பலவாகக் காணப்படுகிறதென்று தெரியலாம். மற்றும், பசுக்கள் பற்பல நிறமுடையனவாக இருக்கலாம். இந்தப் பசுக்களின் வேறுபட்ட நிறங்கள் அவைதரும் பாலைப் பேதிக்கமாட்டா. எல்லாப் பசுக்களின் பாலும் ஒரே வெண்மை நிறமுடையதே யாகும். மேலும், பாண்டங்கள் பல வடிவுடையன வாக இருக்கலாம். ஆனால் அவற்றின் உள்ளே பிரதி பிம்பிக்கின்ற சூரியன் ஒரே பொருளேயாகும். குளம் குட்டை ஆறு ஏரி முதலான பலவிதமாக நீர்நிலைகள் காணப்படினும், பேசப்படினும் அவற்றில் உள்ள தண்ணீர் ஒரே தன்மையதாகும். இப்படியே, பற்பல பேதங்களான உடலங்களுக்குள்ளும் கூடி நிற்கும் பிரமமும் ஒன்றே என நாம் தெரியலாம். நூலை உருவியும், பாலைப் பார்த்தும் பருகியும், சூரியனை வானத்தில் நோக்கியும், தண்ணீரைப் பரிசித்தும்

அவற்றின் ஒன்றும் தன்மை உணரப்படுவது போலவே, விவேகித்துக் காண்டலால் பிரமத்தின் ஒரு பொருளாயிருக்கும் உண்மை உணரப்படும். இவ்வாறு மாயாவாதி ஏக ஆன்மவாதம் சாதித்துக்கூறினன்.

சித்தாந்தி செப்புவது: மணிகள் பலநிறமுடையன என்பதும் அவற்றின் ஊடே செல்லும் சரடு ஒன்றே என்பதும் உண்மைதான். ஆனால், பிரமம், தானுக எல்லா யோனி பேதங்களுள்ளும் புகுந்து கொண்டதென்பதுபோல இந்த உவமையில் நூல், தானுகப் பன்னிற மணிகளுள்ளே புகுவதில்லையே. அந்தச் சரட்டினை அங்ஙனம் புகுத்தினன் ஒருவன் வேருக இருத்தல்வேண்டியுள்ளது. அவன் அங்ஙனம் பலவாகப் பேதப்படுவதில்லை. ஆகையால், இந்த உவமானம் பிரமத்தையும் உலையும் கூட்டினவன் ஒருவன் உண்டு என்ற சித்தாந்தத்தையே செப்புவதாகும். இது தடமணி சரடொடு தாம் கூடலவே என்பதால் பெறப்படும்.

இனிப் பசுக்களும் பாலும் என்கிற உவமையைப் பார்ப்போம். பசுக்கள் அறிவுடையன. அவற்றின் உள்ளே நிற்பது பால்; அது அறிவில்லாதது. அறிவில்லாப் பொருள் ஒரே தன்மையாக உள்ளது. அறிவுடைப் பொருள் பல்வேறு வகையாக உள்ளது. ஆனால், பிரமம் அறிவுள்ளபொருள். பிரபஞ்சம் அறிவில்லாப்பொருள். மேற்சொல்லப்பட்ட உவமானத்தோடு பொருத்தினல் பிரமம் அறிவில்லாதது எனவும், பிரபஞ்சம் அறிவுடையது எனவும்படும். உண்மை அங்ஙனமில்லை. ஆதலின் இந்த உவமை, பிரமத்துக்குப் பொருந்தி நிற்கவில்லை என்பதை அறியலாம்.

மற்றும், பாத்திரங்கள் பல; ஆதித்தன் ஒன்றே. நீர்நிலைகள் பல; தண்ணீர் ஒன்றே என்ற உவமைகளை எடுத்துக்கொண்டால், சூரியன் பாத்திரங்களை ஆக்கிக் கொள்ளவில்லை. தண்ணீர் நீர்நிலைகளை அமைத்துக் கொள்ளவில்லை. ஆதலால், பாத்திரபேதமும், நீர்நிலைப் பேதங்களும் பிரமபேதங்கட்கு உவமையாகக் காட்டப்படுவது பொருந்தாமல் திருஷ்டாந்த விரோதம் ஆகும். எனவே, பொருட்பொருத்தம் இல்லாத இந்த வகையான உவமைப் பேச்சுக்களைச் சும்மா பேசுவது கேட்டு மயக்கம் அடைதல்கூடாது எனக் கூறிச் சித்தாந்தி மறுக்கலுற்றனர் என்க.

## வேறு சில உவமைகள் மறுப்பு

கண்ணாடிக்குள் நிழல் தோய்வற்று நிற்கிறது. அப்படியே சரீரத்துள் பிரமம் சலனமின்றித் தோய்வற நிற்கும் என்று மாயாவாதி கூறுவது உண்டு. இந்த உவமையை ஆராய்ந்து பார்த்தால், பிம்பம் சலனப் படுவதுண்டு. கண்ணாடி சலனப்படுவதில்லை. பிம்பத்தைப் பிரதானமாகக்கொண்டு கண்ணாடி சலிப்பதானால் பிரமத்தின் சாயலைப் பிரதானமாகக்கொண்டு இந்த உடலங்கள் கூடியும் பிரிந்தும் சலிக்கின்றன என்னலாம். அப்படி நிகழாமையால் இவ்வுவமையும் பொருந்தாக் கூற்றெனவேபடும்.

காந்தம், விகாரம் அற - சலனம் இன்றி உள்ளது. அதன் எதிர்ப்பட்ட இரும்பு விகாரப்படுகிறது. இப்படித்தான் பிரமம் சலனமின்றி - விகாரம் அற நிற்கப் பிரபஞ்சம் சலனப்படுகிறது என்று உவமித்துக் கூறுதலும் பொருந்ாது. ஏனெனில், காந்தம் கண்டிதப் பொருள். அதற்குக் குறிப்பிட்ட சந்நிதி உண்டு.

அந்தச் சந்நிதிமுகப்பட்ட இரும்பு சலனப்படுகிறது. ஆனால், பிரமம் அகண்டிதப்பொருள். அதற்குச் சந்நிதி யல்லாத இடமே இல்லை. ஆகவே, பிரபஞ்சத்து உயிருடைப்பொருள் - உயிரில்லாப்பொருள் ஆகிய யாவும் பிரமத்தின் சந்நிதியுட்பட்டனவே ஆகும். இவ்வாறிருந்தும் குடம் துணி முதலான பொருட்கள் தாமே சேட்டிக்கக் காண்கிலோம். அவை கிடந்தபடியே கிடக்கின்றன. இதனால் பிரமத்தின் சந்நிதியில் எல்லாப் பொருளும் சேட்டிக்கும் என்கிற கொள்கை சரியாக இல்லை என்று உணரலாம். ஆகவே, பிரமத்தின் சந்நிதி விசேடத்துக்கு இவ்வுவமையால் குறைபாடு காட்டப் படுகின்றது என்பதே உண்மையாகும்.

மேலும், காந்தமும் இரும்பும் தாமாகக் காரியப் படுவதில்லை. அவற்றை முகப்படுத்திக் காட்டுபவர் செயலால் அவை தொழிற்படுகின்றன. ஆகவே. பிரமத்தையும் உடலையும் கூட்டிக் காரியப்படச் செய்வதற்கு வேறொரு முதலின் துணை வேண்டுமென்பதையும் இந்த உவமை வெளியிடுவதால் குற்றமுடையதாகும்.

அல்லாமலும், காந்தம் இரும்பைக் கூட்டிக் கொள்ளும் சக்தி ஒன்றே உடையது. பிரித்துநீக்கும் இயல்புடையதன்று. அப்படியே பார்ப்போமாயின் பிரமத்தின் சந்நிதியில் உடல்கள் கூடுவதொன்றே நடைபெறுவதோடு நின்றுவிடவில்லை. கூடியும் பிரிந்தும் வருகின்றன. ஆகவே, கூடுதற்கு ஒரு சந்நிதியும், பிரிதற்கு ஒரு சந்நிதியும் என இரண்டு முதல்களின் விரோதபாவ சந்நிதிகள் தேவைப்படும். ஆதலால், இந்த உவமை முற்றிலும் திருஷ்டாந்த விரோதம் உடையதாகும் என்க.

## கனுத்துயர் கயிற்றரவு உவமைகளின் மறுப்பு

சுகதுக்க அனுபவங்கள் பிரமப்பொருட்கு உண்டாதல் இல்லை. சொப்பனத்திலே ஒருவன் பயங்கரமான காரியங்களைக் காண்கிறான்; வெருவுகிறான். ஆனால் கண்விழித்தபின் இவை எல்லாம் பொய் என உணருகிறான். மற்றும் இராவேளையிலே புற்றினிடமாக ஒரு கயிறு கிடப்பதைக்கண்ட ஒருவன் பாம்பு தான் என்று முடிவுசெய்கிறான்; அஞ்சுகிறான். ஆனால் பொழுது விடிந்தபோது பாம்பு அன்று; தாம்புதான் என்று தெரிகிறான். உடனே அவனது துயரம் விடுபடுகிறது. ஆகவே கனுத்துயரும், கயிற்றரவச்சமும், கண்டானை ஏதும் செய்துவிடவில்லை. உண்மை தெளிந்து பொய்யெனக்காட்டி உதவுகின்றன. இவ்வாறே பிரமத்துக்குச் சுகதுக்கங்கள் இருப்பனபோலத் தெரிவதேயன்றி உண்மையில் அவை அதற்கு இல்லை என்று மாயாவாதி கூறலுற்றான்.

இதுகேட்டலும் சித்தாந்தி, அநுபவம் இல்லாத சுகதுக்கங்கள் இரா. சொப்பனத்தில் சூக்குமதேகம் தொழிற்படுகிறது. ஆகையால் சப்தம்முதலான விஷய அனுபவங்களை ஆன்மா புசிக்கிறது. விழிப்புநிலையில் தூலத்தையும் பொருந்தி ஆன்மா முற்கூறிய விஷயங்களை நுகருகின்றது. இதனால் சொப்பனப் புசிப்புப் பொய் என்றும் சாக்கிரப் புசிப்பே மெய் என்றும் கூறுதல் கூடாது. பிராரத்தம் என்கிற வினையை ஆன்மா இவ்விருவழிகளாலும் அவ்வதனுக்கு ஏற்ற கருவிகளோடும் கூடிப் புசிக்கின்றது என்பதே உண்மையாகும். சூக்கும சரீரத்துக்கும் தூல சரீரத்துக்கும் ஒற்றுமை உள்ளது. ஆகையாலும் அநுபவம் மெய்யேயாம்.

மேலும், இரவிலே ஒருவன்கண்ட புற்றும், கயிறும், அவனுடைய உடம்பும் சடப்பொருள்களாம். ஆன்மா, சடத்தோடு பொருந்தியமையால் இங்ஙனம் மயங்கியதாகலாம். ஏனெனில் ஆன்மா பேரறிவுடையதன்று. சடமும் அறிவுடையதன்று. ஆனால் பிரமத்தின் விஷயம் இப்படிப்பட்டதன்று. அது அறிவுமயமானது. அறிவு அல்லது பிரமம் கயிற்றைக் கயிறு என்று அறியவல்லதாம்; பிரமிக்காது. பிரமிக்குமானால் பிரமம் அறிவு எனப்படாது. அப்போது பிரமம் அறிவுடையது எனப்பட்ட பிரமாண உரை செல்லுபடியாகாமல் பொய்த்துவிடும். இது சரியன்று. மற்றும் பிரமம், கயிற்றைப் பாம்பு என்று கருதி மயங்குமானால் அது கர்த்தா எனப்படாது. அதுவுமன்றி, கனவில் கண்டது பொய் என்றும், இரவில் கயிறு பாம்புத்தோற்றங் காட்டுவது பொய் என்றும் ஒருமுறை அறியப் பெற்றபின், திரும்பவும் இத்தகைய அச்சம் சொப்பனத்திலும் இரவிலும் கொள்ளக் கூடாது. அச்சப்படுமாயின், அச்சப்படுமது அறிவு எனப்படாது. ஆகவே, உடம்போடுகூடி இப்படித் திரும்பத்திரும்ப மயங்குவது பிரமம் அன்று என்று தெரிவதே திண்மையுடைத்தாம்.

## செம்மலர்ப்பளிங்குவமை மறுப்பு

சிவந்த பூவோடுகூடிய பளிங்கு தன்னுடைய தன்மை இழந்து சிவந்த நிறமாகவே இருப்பினும், அந்தச் சிவப்புநிறத்தோடு தோய்வுபட்டில்லை. அப்படித்தான், பிரமம் அநுபவிப்பதுபோலத் தோன்றுகிறதே யன்றி, உண்மையில் தோய்வற உள்ளது. ஆதலின் பிரமத்துக்கு அனுபவம் இல்லை என்பது பொருந்தும் என்பது மாயாவாதமாம்.

இனி இந்த உவமைக் கருத்துப் பொருந்தாமை காட்டப்படுகின்றது :- ... படிகம் பூவோடு கூடி யிருந்தபோது சிவப்புநிறம் ஒன்றே உடையதாய்க் காட்டிற்று. அப்படிப் பிரமம் வினையோடு கூடியுள்ள போது ஒரேவிதமாயில்லை. பலவிதமாய் உள்ளது. புண்ணிய பாவங்கள் பலபல விதங்களாக இருப்பத னாலே பிரமமும் வெகு விதங்களாய் இருந்தது என்று கூறலாம். இப்படியெல்லாம் சொல்லுவதனால், பிரமையை நீக்கும் விவேகஞானம் ஒன்றுண்டு என வும், அறியாமையோடுள்ள சரீரமும் உண்டு எனவும், பலவிதங்களாக உள்ள புண்ணிய பாவ இருவினைகள் உண்டு எனவும் கொள்ளவேண்டிவரும். அப்படிக் கொண்டால், களவுசெய்த குற்றத்துக்காகக் கள்வ ரைச் சிறை செய்வதற்கும் தண்டனை பிறப்பிப்பதற் கும் ஆணையிடும் அரசன் ஒருவன் கள்வரின் வேருக இருப்பதுபோலவே, முன்னைப் பிறவியில் செய்த பழ வினைக்கேற்ப உண்டாகப்பட்ட உடம்பு ஆகிய சிறை யிலே பிரமத்தைப் புகவிட்டுப் புண்ணிய பாவங்களை அனுபவிக்கச்செய்து பிறகு கிருபைகாட்டும்படியான கர்த்தா ஒருவன் பிரமத்தின் வேருக இருந்தே தீர வேண்டும். அப்படிப்பட்ட கர்த்தாவே சித்தாந்தப் படி இறைவனுவான். உடம்புட்பட்டுத் துய்ப்புண் டுள்ள. உயிர்கள் பிரமமன்று; ஆன்மாக்களேயாகும்.

அதுவுமல்லாமல், அருமையுடைய கருமவினைக்கு ஈடாக எடுக்கப்படும் உடலில் பிரமம் நின்று மூன்று அவத்தைப்படும் என்பது மாயாவாதி சொல்வது. அப்படி மூன்று அவத்தையும் புசிப்பது பரப்பிரமம் ஆகாது. ஏனெனில் அது பரிபூரணமானது. அப்படிப் பட்டது நனவு, கனவு, சுழுத்தி என்கிற மூன்று

அவத்தைகளுக்குள் அடங்குவதன்று. உடம்பு சடப் பொருளாதலால் அது அவத்தைப்படுவதென்று சொல்வதற்கில்லை. அந்தக்கரணப் பிரிவினலாய மயக்கம் இவ்வவத்தை என்ருல் சரீரத்துக்கு முதன்மை உடையது அந்தக்கரணமா? பிரமமா? என்ற மயக்கம் சம்பவிப்பதாகும். பரப்பிரமமே முதன்மையுடையதென்று கொண்டால் பிரமம் நிற்கக் கரணம் நீங்காது. அந்தக் கரணங்களே முதன்மையுடையதென்று கொண்டால் எல்லாமுதன்மையும் பரப்பிரமத்துக்கே உண்டு என்கிற வேதவாக்கியம் பழுதுபடும். வேதம் பிரமாண நூலாதலால் இப்பழுதுரை தகாது.

## சாளரத்து விரல் அநுபவ மறுப்பு

பிரமமாகிய அறிவுதான் அவத்தையை அனுபவிப்பது; ஆன்மா என்கிற உயிரன்று. ஏனெனில் பொருளே ஒன்றுதான் இருப்பது. அது பிரமம்தான் என்பது மாயாவாதமாம். அதனை மறுப்பதற்குவேண்டிய விஷயம் வருமாறு: ஒரு ஜன்னலின் வெளியே நின்ற ஒருவன் உள்ளே ஒரு விரலை நீட்டினுன். அந்த விரலின் நுனியில் ஒரு வண்டு கொட்டிவிட்டது. அதனுல் உண்டான துன்பத்தை அந்த விரல்மாத்திரம் அனுபவிப்பதோடு நிற்காது. உடம்பு முழுதும் கடுப்புப்படுகின்றது. "கண்டு கலுழுமே கண்" என்பதற்கிணங்க எல்லா உறுப்புக்களும் துயரம் அடைகின்றதை நாம் காண்கிருேம். ஆதலால், உடலில் பொருந்தி நிற்கும் பிரமம் ஒன்றே அவத்தையைத் தனித்து அனுபவித்தது என்று சொல்ல இயலாது. விரல் நுனியில் வண்டு கொட்டின கடுப்புப் பாதாதிகேசம் முழுதும் நின்று கடுக்கின்றமையால், உடலில் இருக்கும்

அறிவானது அவத்தையைத் தனியே உறும் என்று சொல்வது பொருத்தமன்றும்.

## தர்ப்பணநிழல் உவமை மறுப்பு

கண்ணாடியில் காணப்படுகிற நிழலின் கண்ணில் கூர்மையான பாரைகொண்டு கடாவினால் கண்ணாடி தான் உடைபடும். ஆனால் கண்ணுக்குத் துன்பம் வாராது; அதுபோலவே சுகதுக்க அனுபவம் உடம்புக்கேதான்; பிரமத்துக்கு இல்லை என்று கூறுவர் மாயாவாதியர். அது சரியன்று. சாத்திரங்கள் சுக துக்க அனுபவம் அறிவுக்கே உள்ளது என்கின்றன. அப்படியிருக்க வேதத்தைப் பிரமாணமாக ஏற்றுக் கொண்டபின் உடலுக்குத்தான் அனுபவம்; அறிவுக்கு இல்லை என்பது சாத்திர விரோதமான கூற்றாகும். அறிவு சுகதுக்கங்களை அநுபவிக்கிறதென்பது நேரிலே நன்றாய்த்தெரிகிறது. அப்படியிருந்தும் இல்லை என்பது பிரத்தியக்ஷ விரோதமும் ஆகும். ஆகவே மேலே சொல்லப்பட்ட உவமை சுருதி அனுபவங்கட்கு முரண்பாடுடையது எனத் தெரிதலே தக்கதாகும். இதனால், பிரமம் ஒன்றே பொருள்; வேறு பொருள் இல்லை; நானே பிரமம் என்றெல்லாம் சொல்லுதல் சுலபமாக இருக்கிறதே ஒழிய அதை நிரூபித்தல் முடிய வில்லை. நிரூபிக்கும்போது சுருதி யுக்தி யநுபவ முரண் பாடு உண்டாகின்றது. ஆதலால், மாயாவாதியின் பேச்சு, "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் - சொல்லியவண்ணம் செயல்" என்னும் குறளுரையைப் புதுப்பிப்பதுபோல் உள்ளது. ஆதலால், போலிப் பேச்சாம் என்க. இதனைப் பலகலை சொல்லுதல் எளிது; அரிது அத்தொழில் புரிவு என்ற வரி உணர்த்துவதாம்.

மேலும், பரப்பிரமம் ஒன்றுலும் கண்டிதப்படாதது; அகண்டிதமாய் இருப்பது என்று சொல்லி விட்டுப் பிறகு அது மாயா உபாதிகளால் பந்திக்கப் பட்டு நிற்கும் என்று சொல்வது முரண்பட்ட பேச்சாகும். இப்படிச் சொல்வது ஆகாயத்திலே வியாபித்து நடக்கும் காற்றைப் பிடித்து எங்கும் அசையா வண்ணம் பெரிய விலங்கு இட்டுக் கட்டிவைக்கும் செயலை நிகர்க்கும். ஆதலால், இஃது அறிவுடையார் சொல்லாகாது. அறிவுடையோர் இதனை ஏற்பதும் செய்யார் எனச் சித்தாந்தம் சொல்லி மறுத்தவாருயிற்று என்க.

## சீவன்முத்தி மறுப்பு
## பந்தநீக்கம்பற்றிய உவமை மறுப்பு

ஒருவன் பந்தம் அகலப்பெறுவதற்கு அவன் பாலே விவேகம் உதிக்கப்பெறும். அதாவது, பிரமம் மாயா உபாதிகளால் பந்திக்கப்பட்டிருப்பது. அந்தப் பந்தம் நீங்கப்பெறுவதற்கு அதனிடமே தோன்றுவது விவேக ஞானம். எதைப்போல என்றுல், ஆகாயத்தை மேகம் மறைத்திருக்கும்போது அந்த ஆகாயத்தினிடத்திலேயே ஒரு வாயுத்தோன்றி மேகங்களை ஒதுக்கிப் போக்கி வானத்தை நின்மலம் ஆக்குவதைப் போல இது நிகழ்கின்றது. ஆகவே, ஞானம் பிரமத்தினிடமிருந்தே தோன்றுவதாகும் என்பது மாயாவாதி சொல்வது.

அப்படியாளுல், பிரமத்தினிடம் முன்பே ஞானம் இருந்தாகவேண்டும். இல்லாதிருந்தால் புதிதாக உண்டாகாது. அங்ஙனம் பிரமத்தினிடம் முன்பே விவேக ஞானம் இருக்கையில் இடையே இந்த மாயாபந்தம்

எப்படி வரக்கூடும்? இச்செய்தி, சூரியனை, இருட்டு முற்றுகையிட்டது என்பதுபோலுள்ளதன்றே!

ஒருவேளை, பிரமத்துக்கு விவேகஞானம், முன்பு இருந்ததில்லை; இடையே ஒருகாலைத் தோன்றுவது ஆகும் என்றால், முன்பு இல்லாதது பின்பு உண்டாகாது. அப்படி உண்டாவதற்கான மூலமானது முன்பே இருந்தே தீரவேண்டிவரும். முன்பு இல்லாதது பின்பு உண்டாகக்கூடும் என்று பிடிவாதமாகக் கூறினால், ஆகாயத்தில் பூத்தோன்றி மலர்ந்து மணம் வீசிற்று என்பதுபோலாம். ஆகாயப்பூ, முயற்கோடு முதலனவற்றை இல்பொருளுக்கே உதாரணம் காட்டுவர் ஆன்றோர். இதனால், இல்லாதது பிறவாதென்கிற சித்தாந்தம் காட்டப்பட்டது.

இதுகேட்ட மாயாவாதி, மரத்தினிடத்திலே முன்பு இல்லாதிருந்த நெருப்பு - காணப்படாதிருந்த அக்கினி - பிறகு அதைக் கடையும்போது தோன்றுகிறது போலவே ஒருகாலத்தே காணப்படாத விவேகஞானம் பின்பு உண்டாகிக் காணப்படுதல் கூடும் என்று கூறி வெளிமலர் அது தரும் என்ற வாதத்தை மறுக்கலாயினன்.

இந்தவிதமான வாதத்தைச் செவியேற்ற சித்தாந்தி, கட்டையினிடம் முன்பு காணப்படாதிருந்த நெருப்பு, தோன்றிற்றென்பது சரியானாலும், அந்த நெருப்பு அந்தக் கட்டையிலிருந்து தானே உண்டாகவில்லை; அக்கட்டையினிடம் ஒரு தீக்கடைகோலை நாட்டிக் கடைந்த பிறகுதான் உண்டாகிறது. "விறகில் தீயினன் ... ... கடைய முன்நிற்கும்" என்பது மறைமொழி. ஆகவே, பிரமத்தினிடம் விவேகஞானத்தைப்

பிறக்கச்செய்வதற்கு வேறொருவன் முயற்சி - துணை - தேவைப்படவேண்டுமே. அங்ஙனம் பிறனொருவனைத் துணைக்கொள்ளின் பிரமப்பொருள் துணையற்றதோர் ஏகப்பொருள் என்பது பழுதுபடுமே. மேலும், விறகினிடம் அக்கினி தோன்றியது என்பது, அறியாமையாகிய பெத்தநிலையிலிருந்து விவேகஞானம் தோன்றிற்று என்பதற்குப் பொருந்துவதாம். அங்ஙனம் பெத்தத்தினின்று விவேகம் தோன்றுவதாயின், பிரமத்தினிடமிருந்து விவேகம் தோன்றிற்று என்பது பொருந்தாக்கூற்றாகும். ஏனெனில் விறகுக்கட்டையே பிரமத்துக்கு உவமையாகக் காட்டப்படுகிறது. தீக்கடைகோல் அன்று. ஆகவே, அறியாமையினின்றும் அறிவு தோன்றிற்று என்பது "மலடி மகன்" என்பது போலத் திருஷ்டாந்த விரோதமுடையதாகும் என்று உரைத்தலாயினர்.

## இற்படப் பிரிப்பும் மடி இழைவாங்கலும் மறுக்கப்படல்

பிரமத்தினிடம் அதன் இயல்பான விவேகஞானம் எப்படித் தோன்றுகிறதென்றால், மாயா உபாதியுட்பட்ட காலை, சரீர முதலாகக் கூடிக்கொண்டிருக்கும் உபாதிகளை இது நான் அன்று, இது நான் அன்று என்று ஆய்ந்து நீக்கிக்கொண்டேபோனால் கருவிகள் முற்றும் நீங்கப்பெற்ற இடத்து எஞ்சுவது பிரமம் ஒன்றேயாதலால், அப்பிரமமே சிவம் என்கிற விவேக நிலை தானே வாய்ப்புறுகிறது. எதைப்போல என்றால் ஒரு வீட்டினுடைய கூரை வாரை முதலியவைகளை ஒவ்வொன்றாக நீக்கிக்கொண்டேபோனால் வீடெனப்படும் கட்டுக்கோப்புப்போய் வெறு வெளியே தோன்றுவது போலாம். மற்றும், ஓர் ஆடையிலுள்ள

குறுக்கு நெடுக்கு நூலிழைகளை ஒவ்வொன்றாக உருவிக்கொண்டேபோனால் ஆடையென்கிற நாம ரூபங்கள் ஒழிந்து யதார்த்தமே நிலைபெறுகின்றது. இப்படியே அறியாமை நீக்கத்தினின்று அறிவு உதய மாவது உள்ளது என்று மாயாவாதி கூறலாயினன். இனி இதன் மறுப்புரை தரப்படுகின்றமை காணலாம்.

பிரமம் இயல்பாகவே அறிவுப் பொருளாகும். ஆதலால் இதற்கு அறியாமையின் செயலாகிய பிரபஞ்ச பந்தம் தோன்றக் காரணமில்லை. ஆகவே அறியாமை யின் முன் அறிவு நில்லாது என்பது தெரியவேண்டும். எதுபோல என்றால், மிகுந்த ஒளியுள்ள சூரியன் எதிரிலே இருட்டு நில்லாதுபோலாம். ஆகவே, இருளின் முன் சூரியன் இல்லாதிருப்பதாம் என்பது தெரிய லாகும். ஏனிப்படி ஒன்றின்முன் ஒன்று நிற்பதில்லை என்றால், சுத்த ஒளியால் இருளுக்கு ஏதும் பயன் கிடையாது. அப்படியே சுத்த இருளால் ஒளிக்கு ஏதும் பயனில்லை. ஆதலால், இவை இரண்டும் ஒன்று கூடி நிற்கமாட்டா. இதுவே இயற்கையாம். ஆதலால், பிரமமாகிய அறிவும், பிரபஞ்சமாகிய அறியாமையும் ஒருசேரக் கூடியிருப்பதென்ற கூற்று இயற்கைக்கு மாறுபட்டதொன்றும். பின், இருள் என்றும் ஒளி என்றும் எது தெரிந்துகொள்ளுகிறதென்றால், இரு ளோடுகூடி இருளை அனுபவித்தும், ஒளியோடுகூடி ஒளியை அனுபவித்தும் ஆனால் இவ்விரண்டு பொருளு மாகாமல் தனியே தானொரு பொருளாக உள்ள பெரிய கண்ணே ஆகும். "நீடும் ஒளியும் நிறை இருளும் ஓரிடத்துக் கூடல் அரிது" என்பது பிரமாணமாகும். ஆதலால், அறிவாயுள்ள பதியோடுகூடிப் பதி என அறிவதும், அறியாமையோடு கூடிப் பாசம் என

அறிவதுமாகிய இவ்விரண்டுமல்லாததான பசு ஒன்று உண்டு; அது பிரமம் அன்று என்று தெரிதலே நேரிதாகும். தவிரவும், பதியை அறிவதாலும் அதனில் அழுந்துவதாலும் பசுவுக்கு இன்பம் ஏற்படும். பிரமமாகிய ஒன்று பிரமமாகிய தன்னையே அறிவதால் ஒரு பயனும் விளையாது. மற்றும், பிரமம், தன்னிலே தன்னைக் காண்பதென்பது இயல்பன்று. கண்ணானது எல்லாப் பொருள்களையும் தான் காணவல்லது. ஆயினும் தன்னில் தன்னைத் தானே காணாது. ஆகவே, பிரமம் தன்னைத்தானே கண்டு இன்புறும் என்பது அர்த்தமன்று. பிரமம் இன்பக் குறைபாடு உடையதொரு பொருளன்று; ஆதலால் அதற்கு இன்ப நுகர்ச்சி என்பது இயல்பன்றாம். "யாது நீ பெற்ற தொன்று"; "பொன்னுக்கு அங்கு ஏது உண்டு" என்னும் வாசகங்களும் இக்கருத்தைத் தருவனவேயாதலால் ஈண்டு ஒப்பிட்டுக் காணல் தகும். இதனால், பசு என்பது ஒருமுதல் உண்டு என்றும், அதுவே பாசம் நீங்கி, அருளால் இன்பம் அடைந்து நுகர்வது என்றும் தெரிந்துகொள்ளவேண்டும் என்பது சித்தாந்தபக்கம் ஆகும்.

## வெல்லக்கட்டிபோல் என்பதன் மறுப்பு

பிரமப்பொருள், பிரபஞ்சபேதம் உண்டாதற்கு முன்பு ஏன் தன்னுடைய சுகத்தைத் தான் அனுபவியாமல் இருந்தது என்றால், கருப்புக்கட்டி, தன்னிடத்தில் உண்டான இரசத்தைத் தான் அநுபவிப்பதில்லையாதல் போலவாம் என்று மாயாவாதி கூறுதலும், பாச பந்தப்பட்டபோது இன்ப அநுபவம் இல்லாதிருந்து, அது நீக்கமடைந்த பிறகு இன்ப அநுபவத்தைத் தன்னில் தானே பிரமம் அடையும் என்றால்,

பாச பந்தம் அடையுமுன்னரும் அங்ஙனமாய அநு பவம் பிரமத்துக்கு இருந்தேயாகவேண்டும்; அப்படி யில்லை என்பதனுல் அப்பொருள் பிரமம் எனப்படாது; பாச நீக்கமும் இன்ப நுகர்ச்சியும் என்ற இரண்டுமே பிரமத்துக்கில்லை; இவ்விரண்டையும் உடையது பசு எனப்படும் ஆன்மாவே ஆகும்; ஆகவே ஆன்மா என்பதொரு முதல் உண்டு என்பதே உறுதியாம் எனக் கொள்க என்றனர் சித்தாந்தியார்.

## தத்துவமசியர்த்தம்

அது நீ ஆகின்ருய் என்பது இம் மகாவாக்கியத் தின் பொருளாம். ஆகவே ஒன்றேதான் பொருள் என்பது மாயாவாதி கூற்ரும். இதன் உண்மை வேருரும். அது வருமாறு விளக்கப்படும். 'நீ புலி ஆயினை' என்று ஒருவன் சொன்னல், அவனே புலி என்பது பொருளன்று. 'ஆயினை' என்ற சொல்லால், புலி என்று ஒருபொருள் உண்டு; அதுபோலும் வீரம் முதலியன எய்தினன் ஒருவன். ஆகவே, அங்ஙனம் எய்தப்பெற்ருன் ஒரு பொருள் உண்டு. எனவே இரண்டு முதல்கள் உள என்பது அர்த்தமாம். மற்றும், மெலிந்து நின்ருன் ஒருவனை நோக்கி நீ 'இப்படி ஏன் மெலிந்தாய்' எனலும் அவன் நான் நோயாய்க்கிடந் தேன் என்பானுயின் அவனே வெப்பமும் குளிரும் அல்லன். வெப்புநோய் அவனின் வேருய் இருந்தது ஒன்றே எனத் தெரியலாம். ஆகவே, அகம் தானே பிரமம் ஆகா நின்றது என்ருல் 'ஆகு உவமைத்து' என்னும் இலக்கண விதிப்படி பிரமம் ஆயினவன் வேருெருவன்; அவன் வேறு; பிரமம் வேறு என்று தெரியவேண்டுவதே முறை ஆகும்.

தத்துவமசி மகாவாக்கியம் சாந்தோக்கிய உபநிடதத்தில் உள்ளது. அது, தத்பதம் துவம்பதம் அசிபதம் என்ற மூன்று பதங்களை உடையது. இவற்றில் தத்பதம் இறைவன் தடத்தநிலை பொதுநிலை ஆகிய பதித்தன்மையைக் குறிப்பதாகும். துவம்பதம் உயிரின் தடத்தநிலையாகிய பசுத்தன்மையைக் குறிப்பதாகும். அசிபதம் அந்த இரண்டு பொருள்களின் சொரூபநிலையாகிய ஐக்கியத்தைக் குறிப்பதாகும். இதனை, "வேதாந்த தொம்பதம் மேவும்" என்னும் திருமந்திரப் பாடலில் காணலாம். எனவே முத்தியில் உயிர் சிவனைச் சேர்ந்து சிவமாகும் என்பது பெறப்படும். இதனையே, சிகரம் பதியையும், யகரம் பசுவையும், வகரம் அவ்விரண்டின் ஐக்கியநிலையாகிய அருளையும் குறிப்பது என்னும் குறிப்புடைய சித்தாந்த மகாவாக்கியமாகிய முத்தி பஞ்சாக்கரத்தாலும் தெளிவாய்த் தெரிதல் கூடும் என்க. "பண்டை மறைகளும் அது நானானேன் என்று பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணே" என்பது சித்தியார் சுபக்கம். ஆகவே, உண்மையாய் நோக்கின், அது என்னும் பதிப்பொருள் ஒன்றும், நான் என்னும் பசுப்பொருள் ஒன்றும் ஆக இரண்டு பொருள்கள் உண்டென்பதும், ஆனேன் என்பதனால் அங்ஙனம் ஆகவொட்டாமல் தடை செய்து நின்ற பாசப்பொருள் ஒன்றுண்டு என்பதும், இப்பாசப் பொருள் பிரிக்கப்படுவதுபோலப் பதிப் பொருளும் பசுப்பொருளும் பிரிக்கமுடியாது என்பதும், பிரிக்கக்கூடிய பாசத்தைப் பிரித்துப் பிரிக்க முடியாத பதிப்பொருளை, (ஆன்மா சார்ந்ததன் தன்மையடைவதாம் இயல்பு உடையது ஆதலால்) தானாகப் பாவித்தால் பதியாகும் என்பதும் தெரியப்படும்.

அத்துவிதம் என்னும் சொல்லின் சரியான பொருளும் இங்குக் கருதிப்பார்த்தல் பயனுடையதாம்.

## சலம் உறும் வெண்மதி உவமைப்பொருள் மறுப்பு

உண்மையில் நமக்குச் சலனம் இல்லை. உடலி னிடத்து உண்டாகிய சலனம் உடற்கே உளதாம். சலத்தோடுகூடி இருக்கும் பிரதிபிம்ப சந்திரன் சலம் அசையும்போது தானும் அசைவதுபோலக் காணப் படும். ஆனால், உண்மையில் சந்திரனுக்கு அச்சலனம் இல்லை. இப்படித்தான் முத்திநிலையில் இருப்போம் என்பது மாயாவாதி கூறும் முத்தியனுபவமாம். இக் கூற்றும் அகம் பிரமம் என்பதே சாதிப்பதாகும் என்ப.

ஆற்றிலே ஓடுகின்ற நீரின் அசைவினுள்ளே உள்ள பிரதிபிம்ப சந்திரன் அசைகின்றதொழிய உண் மையான சந்திரனுக்கு அசைவில்லை என்பது உண்மை தான். ஆனால், அங்ஙனம் அசைவு இல்லை என்பதை ஆகாயத்துச் சந்திரன் உணருகிறதில்லை. அதனின் வேறாக உள்ள பொருளாகிய நாமே உணருகிறோம். அந்த மதியே அப்படிக் காணுமாயின் மேற்சொன்ன உபமானம் பொருந்தும். சந்திரனுக்கு அசைவில்லை என்று சொல்லும் சொல் வேறொருவன் கண்டு சொல்வது ஆதலால், பிரமத்துக்குச் சலனமில்லை; உடலுக்கே சலனம் உளது என்று அந்தப் பிரமத்தை விட்டு அந்நியமாயுள்ள ஒருவன் கண்டு சொல்லுகை யினாலே ஏகம் பிரமம் என்ற சொல் பொருந்ாது எனத் தெரியலாம். இதனாலும் முத்தியனுபவம் சீவ னுக்கேயன்றிச் சிவத்திற்கில்லை என்பது சித்தாந்த மாம் என்க என்பது மறுப்புரையாகும்.

## பரமுத்தி மறுப்பு

பரமுத்தி என்பது இந்தச் சரீரம் நீங்கினபொழுது இந்தச் சரீரத்தில் நின்ற அறிவு, தன்னில் தானே ஒன்றுபட்டு விடுவதாம். எப்படி என்ருல், ஒரு குடத்துக்குள்ளே அகப்பட்டு நின்ற ஆகாயம் அந்தக் குடம் உடைபட்டமாத்திரத்தே பராகாயத்தில் ஒன்றுபட்டு விடுகிறது போன்றதாகும். கடோபாதி நீங்கப்பெறுதலே குடாகாயத்திற்கு முத்தியாவதுபோன்று சீவோபாதி நீங்கப்பெறுதலே பரமுத்தியாம் என்பது மாயாவாத முத்தியுரையாம்.

குடத்துக்குள் நிற்கும்போது ஆகாயம் எந்தவித துக்கத்தையும் அநுபவிக்கவில்லை. குடம் உடையப்பட்டு மகாகாயத்தோடு ஒன்றுபட்டபோதும் அது ஒரு சுகத்தையும் அடையக் காண்கிலோம். ஆகையினுலே பிரமமானது உடலுக்குள் நின்றபோதும் ஒருவித துக்கமும் அடைந்திருக்கக்கூடாது. உடலை விட்ட காலத்தும் ஒருவித சுகத்தினையும் அநுபவித்த தில்லையாகல் வேண்டும். பிரத்தியக்ஷமான அநுபவத்தில் நாம் உடலுள் இருக்கையில் பலவித துக்கங்களை அநுபவிக்கிறேம். உடலை விட்டபோது சுகத்தையும் அநுபவித்து நிற்கிறேம். ஆதலால், பரமுத்தி நிலைக்கு இந்த உவமை கூறியது திட்டாந்த விரோதமுடையதாகும். அன்றியும் எல்லா ஆன்மாக்களாகவும் இருப்பது பிரமம் ஒன்றே என்பது மாயாவாதக் கொள்கை. அப்படியாகுல் சாத்திரப் பிரமாணப்படி ஒருவன் மாறுபாடு அற்றுப் பிரமம் எனத் தெளிவுற்றதும் சர்வ ஆன்மாக்களும் அத்தெளிவுற்று முத்தி பெற வேண்டும்; அப்படி எவரும் அடையக் காண்கிலோம்.

ஆதலால், அந்த அந்த ஆன்மாவும் தனித் தனிப் பட்டவை எனத் தெரியலாகும். மேலும், பிரமஞான முடையோர் முத்தியடைவர்; அஃதில்லாதவர் முத்தி அடையார் என்பது பிரமாணமானால், அங்ஙனம் அடைந்தவர்கள் எனவும் அடையாதவர்கள் எனவும் ஜீவான்மவர்க்கம் பலபேதப்படுதலை ஒப்புக்கொள்ள வேண்டும். இதனாலும், பிரமத்தை ஒழிந்து ஜீவான்ம வர்க்கம் வேறில்லை என்ற கூற்று நிலையற்ற பேச் சாகும். ஆகவே, கர்த்தா ஒருவன் உண்டு; அவன் ஒருவனே ஆவான்; ஆன்மவர்க்கங்கள் பல; அவை பாசத்தை நீக்கிக்கொள்ளும் முறைமையினாலே தனித் தனியே பதிப்பொருளோடு ஒன்றுபடும் என்பதே சித்தாந்தமாகக் கொள்ளல் பொருந்துவதாம் என்பதே சித்தாந்தியர் கூறிய தேற்றுரை என்க.

## பதிஞானம் எய்தும்முறை விளக்கம்

ஒருவன், கன்ம காண்டத்தே கூறியுள்ளபடி யாகாதிகளான கன்மங்களை அநுட்டித்தால் பிறகு விவேக ஞானம் உண்டாகும். தன்னிலே உண்டாகும் விவேக ஞானம். அப்படி அடையப்பெறுதாருக்கு இதுவே முறை என்பது மாயாவாதி காட்டும் வழியாம்.

அப்படியானால், பிரமத்தை மாயா உபாதிகள் வந்து ஏன் கூடின? அவை ஏன் பிரமத்தை மயக்கு கின்றன? இதற்கு மாயாவாதத்தில் ஏன் காரணம் கூறப்பட்டிலது? கன்மகாண்ட காரணமாக விவேகம் உதிப்பதுபோல, பிரமத்துக்கு எது காரணமாகக் குற்றம் உண்டாயிற்று? என்பதும் சொல்லப்படுதலே

முறைமை ஆகும். அப்படி ஒன்றும் சொல்லப் படாமை குறையுடை வாதமாம். அன்றியும்.

தீக்கடைகோலை மரத்தில் இட்டுக் கடைந்தத னாலே உண்டாகிய அக்கினி அந்த இரண்டு கட்டை களையும் சுட்டெரித்தது என்று சொல்வதுபோலவே. கன்மங்களைச் செய்வதனால் உண்டாகும் விவேகம் கன்மங்களை இல்லையாக்கிவிடும் என்று சொல்லிவிட்டு. சதாசாரங்களை அதாவது வேத ஒழுக்கங்கள் எல்லா வற்றையும் கைவிடுதல் என்ன முறைமை ஆகும்? பிரமஞானம் என்பது ஒரு சிறிதும் அடைந்தறியாத வரும் பிரமஞானம் உண்டாகிவிட்டது: ஆதலால் கன்மாசாரம் தேவையில்லை என்று அனுசாரங்களைச் செய்து திரிவது தகுவதாயில்லையே. இப்படி இவர் திரிவது இவர் தம் தலை எழுத்தினாலா? அறியாமையி னாலா? பிறவித் துன்பம் நீங்குவதற்கு ஏதுவான கன் மங்களை இவர்கள் விட்டுத் திரிவது அறியாமையே யாகுமன்றே! இப்படி இவர்கள் இறைவனுரையை உல்லங்கனம் செய்து மாறுபட்டொழுகுதல் "செய்ந் நன்றி கொன்ற மகன்" செயலையே ஒப்பதாகும். ஆத லால், அக்குறள் கூறியபடியே இவர்கட்கு உய்வில் லாமற் போவதே உறுதியாம் என்பதில் என்ன தடை உளது? ஞால நீதியும் நான்மறை நீதியும் நன்றி மறவாமை வேண்டும் என்றே சொல்வனவாகும்.

யாதொன்றையும் விகற்பியாமல் நிருவிகற்பமாய்க் காணுவது பாலர் இயல்பு. வைதாரையும் வாழ்த்தி னரையும் சுட்டியறியப்பெறுமை மதுபானம் செய்தா ரியல்பு. ஆகாரம் முதலன இல்லாது திரிதல் பசாச ரியல்பு. கையிலே பிடித்திருந்த பாக்கு நழுவுதல்

அறியாமை நித்திரை புரிவோரியல்பு. இப்படிப்பட்ட வகையெல்லாம் பொருந்தியதே பிரமஞானம். இது இல்லாதபோது எப்படி ஆசாரங்கள் தாமாக நீங்கிவிட முடியும்? இந்த நிலை அடையப்பெற்ருல் ஆசாரங்கள் தாமாக நீங்கிப்போம் என்னலாம். அப்போது அவை நீங்கியமைகூட அறியப்பெருது. அவ்வாறின்றித் தானே எனக்கு ஆசாரங்கள் தேவையில்லை என்று சொல்லி அநாசாரங்களைப் புரிந்து திரிந்தால் மீளா நரகமன்றே சித்திக்கும். இது தப்பா நியதியாயிற்றே.

ஆசாரத்திருல் பிரமஞானம் உண்டாகும் என்று சொல்வதைக் கைவிட்டு, நானே முத்தன் என்று சொல்வது, பித்து மேலிட்ட கூற்ருகும் அல்லவா? உடம்பு சடம் என்று சொல்லுகிறது மாயாவாதம். அது ஞானமுடைய பேச்சுத்தான். ஆனுல் செயலில் அப்படியில்லையே. வையினும், வாழ்த்தினும், கொய்யினும், கொளுத்தினும், வணங்கினும், உதைப்பினும் இதம் அகிதம் தெரியாமலிருக்க வல்லதான பிரம ஞானம் எங்கே மாயாவாதியினிடம் காணப்படுகின்றது? இல்லையே! ஆனுல், அஃது எப்போது உண்டாவது? மனிதர்க்கு வயது நூறல்லதில்லை; இதில் பாதி நித்திரையால் போம். வாலிபத்தால் பதினையாண்டு செல்லும். பதினையாண்டு விருத்தாப்பியத்தில் போம். நின்ற இருபதில் நோயால்போம் சில நாட்கள். இடையில் வீணேகழியும் காலமும் உண்டு. "வேத நூல் பிராயம் நூறு" என்னும் பாசுரம் கருதிப்பார்ப்பதாலும் இக்கருத்து விளங்கும்.

இவ்வாறு ஆயுட்காலத்தின் நிலைமை இருக்க, பற்பல நூல்களைக்கற்று, யாவரோடும் தருக்கம் பேசி

அதனால் தலைபறியுண்டு. கண்டவர்கள் கொடுக்கும் உணவுகளையும் புசித்து, அவர்கட்குப் பிரமஞானம் போதிக்கிறேன் என்று சாக்குச்சொல்லி வயிற்றை வளர்த்து, பல நோய்களுக்கும் இருப்பிடமாகும் உடம்பிலே வியாதிகள் வந்து நெருக்கும்போது சாக்காடு வந்துவிடுமே என்று நெஞ்சம் பறைகொட்ட, அந்த வேளையில் தெய்வம் வேருக உண்டு என்ற கொள்கையைக் கடைப்பிடிக்காமல் காலத்தை அவமே கழித்தமையாலே, 'அஞ்சேல்! நான் உண்டு' என்று சொல்லி மரணவேளையிலே அபயமளித்தற்கான தெய்வத் திருவருளையும் பெருமல் மரணமுறநேருமே.

மரணமடைந்த பிறகும் அமைதியிராதே! மாயாவாதி, யானே பிரமா; யானே விஷ்ணு; யானே உருத்திரன்; யானே இந்திரன்; யானே எமன்; யானே யாவரும் என்று சொல்லிவந்தவன். ஆதலால், அந்தத் தேவர்களும் 'நம்மை இவன் தான்' என்று கூறினவன் என்று கூறிக் குமுறிக்கொண்டு தங்கள் தங்கள் சீற்றமும் செல்லுபடியாகும் காலமும் உள்ளவரையில் நன்ருக நிரயத்திலே அழுந்தத் தள்ளிவிடுவரேயல்லால் வேறு துணைபுரிவார் இவற்கு யாருளர்? ஆதலால், எல்லாரும் இறந்துபோய்த் தேவவர்க்கத்தில் ஒருவர் இருக்கநேரினும் நிரயத் துன்பம் நீங்காமல் நிலைத்துவிடுமே! எப்படியும் அழிவில்லா ஒருவர் உண்டு. ஆகையால் இவற்கு நரகினின்றும் மீட்சியின்ருய்விடும் என்பது சித்தாந்தியர் கூறும் பொருள் மொழி ஆகும்.

இதுகாறும் கூறியவற்ருல் கடவுள் ஒருவர் உண்டு. ஆன்மாக்கள் பல உள. பாசபந்தமுடையது

ஆன்மா. பாசபந்தம் நீங்கிலைன்றி இன்பம் கிட்டாது. அதனை நீக்கி உதவிபுரிவது கடவுளருள் எனப்படும் குருமூர்த்தமே. சீவன்முத்தர்க்கும் குருலிங்க சங்கம சிவவேட வழிபாடுகளாம் சதாசாரம் இன்றியமை யாதது. சீவான்மாவே சிவத்திடை அழுந்திப் பேரின் பநுபவம் பெறுவது. காட்டியும் ஊட்டியும் அருள் வது முழுமுதலே என்றெல்லாம் நாம் தெரிதல் வேண்டும்.

இதுவரையில் மாயாவாதியின் சங்கற்பமும், நிரா கரணமும் இயன்றளவும் மூலநூலைத்தழுவி உரைக்கப் பட்டன. இனி அம்முறையிலே ஐக்கியவாதியின் சங்கற்ப நிராகரணங்களையும் காண்போம்.

மாயாவாதி நிராகரணம் முற்றிற்று.

## செய்யுள்—5.

## II—அ

## ஐக்கியவாதி சங்கற்பம்

### பெத்தநிலை

அரிதேர்ந்(து) உணராப் பெரியோன் உரைத்த
பதி பசு பாசம் விதிமுறை கிளக்கில்
ஈசன் ஏகன் எண்இலி பசுக்கள்
பாசம் இருவகைப் பரிசின(து) உலகத்(து)
ஆய்அவன் உயிர்க்கு மாயையின் அருளால்
இருவினைத் தொகையின் உருவினைத் தரும்ஆல்;
கருமுகில் அடர இரிதரு கதிர்போன்(று)
அறிவாம் உயிரில் பிறியா(து) ஏயும்
ஈட்டும் இருபயன் ஊட்டிடும் நியதி(க்கு)

### முத்திநிலை

ஒருபோ(து) இருபயன் நுகர்வுற மருவுதல்
இன்மை ஆதல் முன்னிய காலைச்
சத்தி நிபாதம் உற்(று)இறை அருளால்
உருவுகொடு உலகு தெரி(வு)உற மருவி
மாசுறு தூசு தே(சு)உற விளக்கும்
தன்மையின் உணர்த்தும் புன்மைகள் நீங்கி
நீரும் நீரும் சேரும் தகைமையின்
அறிவினோ(டு) அறிவு செறிவுறப் பொருந்தி
ஒன்(று)ஆம் என்பதை உலகோர்
நன்(று)ஆம் முத்தி எனநவிற் றினரே.

## பொழிப்பு

*இவ்வாதினத்து 74 ஆம் வெளியீடுகொண்டு அறிக.*

## விளக்கம்

இதுகாறும் மாயாவாதம்பற்றிய சங்கற்பங்களும், நிராகரணங்களும் பார்த்தோம். புறச்சமயங்களுள் ஒன்றாக வைத்து மறுக்கப்படுவது மாயாவாதம். இது ஏகான்மவாதத்து நான்குவகைகளில் ஒன்றும். புறப் புறச் சமயங்கள் வேத சிவாகமங்களாகிய ஆதி நூல் களைப் பிரமாணமாகக் கொள்வன அல்ல. ஆதலின் அவற்றைவிடுத்து, வேதத்தை உடம்பட்டுச் சிவாக மத்தைப் பிரமாணமாகக் கொள்ளாதனவாகிய புறச் சமயங்களுள் ஒன்றான மாயாவாதம்பற்றி ஆசிரியர் முதற்கண் இந்நூலிற் கூறலுற்றார். இஃதொன்றைக் கூறி நிராகரித்தமையால் அவ்வருக்கத்து ஆறு சமயங் களும் மறுக்கப்பட்டு உண்மை நிலைநாட்டப்பட்டது என்னலாம்.

இனி, ஐக்கியவாதி சங்கற்பமும், நிராகரணங் களும் ஆசிரியர் கூறலுறுகின்றார். ஐக்கியவாத சமயம் அகப்புறச் சமயங்கள் ஆறனுள் ஒன்றும். அகப்புறச் சமயங்கள் வேத சிவாகமங்களை உடம்பட்டு அவற் றோடு மாறுபடும் பசு நூல்களையும் பிரமாணமாகக் கொள்வனவாகும். இவ்வகை ஆறனுள் ஐக்கிய வாதம் மறுக்கப்படுதல்கொண்டு இவ்வருக்கத்து ஆறும் மறுக்கப்பட்டு உண்மை புலப்படுத்தப்பட்ட வாறாயிற்றும் என்க. இனி, ஐக்கியவாத சமயத்துக் கொள்கைகள்பற்றிச் சுருக்கமாக அறிவோம்.

ஐக்கியவாதம்: இந்தச் சமயத்தின் கொள்கை யினைச் சிவப்பிரகாசநூலின் இரண்டாம் சூத்திரத்துப் பதினாறுவது பாடல் சுருங்க உரைக்கும். அப்பாடல் "இன்மை மலம்" என்று தொடங்குவதாகும். அஃது இந்நூலாசிரியர் அருளிச்செய்ததேயாம். இம் மதத்தின் கொள்கை வருமாறு;-

மாயாமலமே ஞானத்தை மறைக்கும். அதனின் வேறாகச் சகசமலம் என்பதொரு மலம் உண்டென் பது மிகை ஆகும். மாயை கன்மங்களே ஆணவமலம் ஆம். உயிர் அறிவிக்க அறியும் தன்மையின்றித் தானே அறியும்தன்மை உடையது. மாயை கன்மங்க ளிருத்தலால் கருத்தாவானவன், பல ஆன்மாக்களும் முன் பிறப்புக்களில் புரிந்த புண்ணியபாவங்களின் முறைமைக்கீடாக எல்லா உயிர்களுக்கும் உடலாதிய வற்றைக் கொடுப்பன். இதனால் உயிர்கள் மீளவும் புண்ணிய பாவங்களைப் பொருந்தப்பெறும். அந்தக் கன்மங்களெல்லாம் நேரே ஒப்புக்கொண்டபோது இறைவன் தன் கருணையினால் அக்கன்மங்கள் எல்லா வற்றையும் போக்கிடுவன். ஆகையினால், பிறகு அந்த இரண்டுமலமும் பொருந்துவதில்லை. உயிர்கள் இதனால் முன்புள்ள பிரகாசத்தைப் பெற்றிடும்; இவ்வாறே பாசுபதியின் கொள்கைகளும் இருப்பதாம். எனவே, ஆணவமலம் என்பது ஒன்று இல்லை என்பது ஐக்கிய வாத சமயத்துக் கருத்தாம் என அறியலாம்.

சிவனே இறைவன் ஆவான். அவன் பிரம விட்டுணுக்களாலும் அறியமுடியாதவன். அவன் அருளியவை வேதாகமங்களாம். அவை பதி, பசு, பாச உண்மைகளைச் சொல்லும் உண்மை நூல்களாகும்.

ஆராய்ந்து கண்டு பிடித்தலில் வல்லமை உடையவன் விஷ்ணு ஆவான். அவனாலும் சிவன் அறியப்படாதவன் என்று கூறுமுகத்தால் சிவனது முதன்மை புலப்படுத்தப்பட்டது. இது, அரி தேர்ந்து உணராப் பெரியோன் என்பதனால் அறியப்படும்.

இதனில், பெரியோன் என்ற சொல்லால் பதியுண்மையும், அரி என்ற சொல்லால் பசு உண்மையும், தேர்ந்தும் உணரா என்ற தொடரால் பாச உண்மையும் குறிப்பாகக் கூறப்பட்டிருத்தல் காணலாம். இதனால் ஐக்கியவாதிக்கு முப்பொருள் உண்மை உடம்பாடாம் என நாம் தெரியலாம். எனினும்,

பதி என்று சொல்லப்படுபவன் பரமசிவன் ஆவான். அவனே கருத்தா. பசு என்று சொல்லப்படுவன ஆன்மாக்களாம். அவை எண்ணில்லாதன. எனவே பல ஆம். பாசம் என்று சொல்லப்படுவது மாயை என்றும் கன்மம் என்றும் இருவகைப்படும். ஆணவம் என்பது ஒரு மலம் இல்லை. இவையிரண்டுமே ஆணவமாகக் கொள்ளப்படும். ஈசன் ஏகன் என்றதனால் பற்பல தெய்வங்கட்கு இவர்கள் முதன்மைதாரார் என்பது துணியலாம். எண் இலி பசுக்கள் என்றமையால் ஏகான்மவாதியரின் இவர்கள் மாறுபாடுடையர் என்பதும் தெரியலாம். பாசம் இருவகை என்பதில்தான் மாறுபாடுளது. அதனை நிராகரணப் பகுதியில் காணவேண்டும்.

சிவனே உலகத்திற்கு அம்மையப்பராய் உள்ளவர். ஆதலால் மிகுந்த கருணை உடையவராவர். இந்தக் கருணை மிகுதியினாலேதான் உயிர்களுக்கு

அவ்வவற்றின் புண்ணிய பாவங்கட்கு ஏற்றபடியாக மாயையிலிருந்து சரீரங்களை ஆக்கியளிப்பன். அவன் மாயையின் அருளால் உருவினைத் தரும் என்பதனால், முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம் என்ற மூன்றும் கூறப்பட்டிருத்தல் காணலாம். இறைவனே நிமித்த காரணன், அருளே துணைக்காரணம். மாயையே முதற்காரணமாம் என்க.

சூரியன் இயல்பாகவே பேரொளியுடையவன். ஆனால், கரிய மேக படலத்தால் மறைக்கப்படுகிறான். அப்போது அவனுடைய ஒளிக்கிரணங்கள் யாவும் நீங்கிவிடுகின்றன. இவ்வாறே, அறிவு மயமாய்ச் சுத்தமாய் இருக்கும் ஆன்மாவினிடத்திலே மாயா தேகம் ஒருபோதும் நீங்காமல் பொருந்தி வரும். இதனால், ஞானத்தை மறைப்பது மாயை என்பது ஐக்கியவாதி கொள்கையாம்.

முன்னே செய்த புண்ணிய பாவங்களைக் கர்த்தா, ஆன்மாவுக்கு இச்சரீரத்தில் புசிப்பிப்பன். இப்படியாகப் புசித்து வருகையில் புண்ணிய பாவங்கள் துலை ஒத்திடும். ஒரே பிறப்பில் எல்லாக் கன்மங்களும் புசித்துத் தொலைக்கப்படும். அப்போது ஏதேனும் ஒரு சிவபுண்ணியம் வந்து எதிர்ப்படும். இதனால், இறைவனுடைய திருவருள் இந்த ஆன்மாவினிடம் வந்து பதியும். இதனைச் சத்திநிபாதம் என்பர்.

இவ்வாறு அருட்பதிவு நிகழுங்காலத்தே கருத்தாவானவன், தன் கருணைப் பெருக்கினாலே அருளே திருமேனியாகக்கொண்டு உலகத்தோர் யாவரும் காணத்தக்க விதமாக ஆசாரியனாகி எழுந்தருளி

வருவன். பிறகு அழுக்குத்துணியை வெள்ளாவி வைத்து அழுக்குநீக்கித் தூய வெள்ளையாக்கிடும் தன்மைபோன்று, இவனிடம் உள்ள பாசங்களைத் தீக்ஷையினால் போக்கி உபதேசம் செய்தருளுவன். அப்படி அருளப்பட்ட பிறகு இவனிடத்துள்ள எல்லாக் குறைகளும் நீங்கிவிடும். அதனால் சுத்த னுவான். அப்போது தண்ணீரும் தண்ணீரும் தன்னிற் கூடி ஒன்றும் தன்மைபோன்று சிவனுடைய அறி வோடு இவனுடைய அறிவும்கூடி ஐக்கியம் உண் டாகும். இங்ஙனம் ஒன்றுபடுவதே நல்ல முத்திப் பேறு என்று யாவரும் சொல்வர்.

இனி, இருவினை ஒப்பு என்பது யாதெனில், நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளும் பொன் விலங்கும் இரும்பு விலங்கும்போலப் பிறப்பு இறப்புக்களில் கட்டுப்படுத்தும் விஷயத்தில் சடமானதன்மையுடை யன என்கிற உறுதி ஆன்ம அறிவினிடமாக விளங்கப் பெற்று அதனால் அந்த இரண்டு வினைகளையும் ஒப்பக் கருதி உவர்த்துவிடுதலாகும் என்பர்.

சிவபுண்ணியமாவது சிவபெருமான் திருவடியை அடைதலே விருப்பாகக்கொண்டு அதனை அடையச் செய்வதற்கான உபாயங்களாகிய சரியை முதலான தவங்களைப்புரிதல் என்று கூறப்படும்.

சத்திநிபாதமாவது சிவபெருமானடி அடைய வேண்டுமென்ற நாட்டத்தினால் ஆன்ம அறிவினிடம் திருவருள் பதிதலாம். இத்தகைய திருவருட் பதிவு சற்குருவையே தேடியோடச்செய்யும். உலகப்பற்று அறவே விட்டுப் போகச்செய்யும்.

"அகத்துறு நோய்க்கு உள்ளினரன்றிச் சகத்தவரும் - காண்பரோ தான்" என்னும் அருளுரு நிலைப் பாடற்கேற்ப உயிரின் பக்குவத்தை உயிர்க்குயிராகிய கடவுளே அறிவனுதலால் அவனே குருவாகி வந்து ஞானத்தை உணர்த்துவன் என்பர். ஆகவே, ஞானம் உண்டாவதற்குச் சரியை முதலன முதற்காரணமும் குரு துணைக்காரணமும் ஆம் என்க. "தம்து முதல் தானே குருவுமாய் உணர்த்தும்" என்பது மேற் கோளாம். இதுகாறும் ஐக்கியவாதியின் சங்கற்பம் கூறப்பட்டது. இனி நிராகரணம் சொல்லுமதனைக் காண்போம்.

ஐக்கியவாதி சங்கற்பம் முற்றிற்று.

த. ந. உலகநாதன்

### செய்யுள்—6.

### II—ஆ

## ஐக்கியவாதி நிராகரணம்

### பெத்தமறுப்பு

முத்தி என்பதை எவனே சுத்த
அறிவெனில் பாசம் செறியா மாயை
உருஇரு வினையால் வரும்இரு வினையும்
உருவால் அன்றி மருவா(து) இவற்றின்
முந்திய(து) ஏதோ வந்(து)அணே வதற்(கு)ஓர்
ஏது வேண்டும் தான்இயல்(பு) என்னின்
வீடுற் றவரினும் கூடக் கூடும்
ஈங்கிவை நிற்க, நீங்காக் கருவிகள்
கொண்(டு)அறி(வு) அறியக் கண்டதும் அன்றி
மருவிய உருவு துயில்பெறும் காலைச்
சிறுபொறித் தறுகண் கறைஅணல் சுடிகைத்
துத்திக் கடுஉள் துளைஎயிற்(று) உரகக்
கொத்(து)அயல் கிடப்பினும் குவைதரு நவமணி
ஒருபால் துதையினும் பெரு(கு)ஆர் வத்தினே(டு)
அச்சமும் அணுகாக் கொச்சமை என்னே!
கருவி யாவும் பிரிவுறு நிலையேல்
பொறிபுலன் ஆதி குறைவற நிறைந்து
காட்சிய(து) அளிக்கும் மூட்சியின் முன்னைக்
கொடுத்தோர் ஆழி விடுத்தவன் நாடிக்
கொள்வோர்க் காணு(து) உள்கி மீண்டுழித்

தந்தவற் கண்டாங்(கு) அந்தம்இல் அதனைத்
தருக என்னும் பெருமதி பிறங்கும(து)
அறிவி லாமைஎன் றனைஅது மல்மாக்
குறிகோ ளாளர் அறைகுவர் அன்றே ;

## முத்திமறுப்பு

அறிவிற்(கு) அறிவு செறியவேண் டின்றே
உண்மையில் இருமையும் ஒளியே எனில்ஒரு
தன்மை யாகமுன் சாற்றினர் இலரே
முன்பு நன்றுடன் ஒன்றிய காலை
இன்பம் எய்துதற்(கு) இல(து)உயிர் ஆதலின்
நீஅலை பொருத மாயா வாதி
ஆயினை அமையும் அருள்நிலை கேள்மதி.

### பொழிப்பு

*முன்பு கூறப்பட்ட நூலாற்கொள்க.*

### விளக்கம்

ஐக்கியவாதி நிராகரணம் இரண்டு பகுப்பில் தரப்படுகின்றது. அவற்றுள் ஒன்று பெத்தநிலை பற்றியது. மற்றது முத்திநிலை பற்றியது. இவ்வாதியரை ஆணவமலம் என்பது ஒன்று உண்டு என ஒப்புக் கொள்ளச்செய்து, உண்மை முத்திநிலை இன்னவிதமாயிருப்பதெனவும் உணரச் செய்துவிட்டால் போதுமானது. அவ்வழியில் நூல் சொல்லிச் செல்வதைத் தெரிவோம்.

ஐக்கியவாதி நன்றும் முத்தி இன்னதெனக் கூறி முடித்ததும் அந்த முத்திநிலை நன்றன்று என மறுத் தற்கண் வாதம் முதற்கண் ஓடலுறும். என்றாலும், ஆசிரியர் அங்ஙனம் பதைப்படையாதவராய் அமைதி யுடனே எதிரி கொள்கையை மறுக்கப் புகுகின்றா ராதலால் படிப்படியாகவே நிராகரணத்தைத் தாம் தொடங்கலுறுதலை முத்தி என்பது எவனோ? என்று சொல்வதோடு நிறுத்திக்கொண்டனர் என்னலாம். இதனால் வாதம்புரிவோர் குரோதம் இன்றி அறிவுவழி நிற்றலே தக்கதென நாம் தெரிதல் நல்லது.

ஆன்மா முதலிலேயே - அநாதியிலேயே - சுத்த அறிவாய் இருப்பது என்ற கொள்கை சரியன்று. அப்படி அது சுத்தமாய் இருப்பதை முதலிலேயே கொண்டிருந்ததாயின், பாசம் அதனைவந்து பொருந்து வதற்குக் காரணமே இல்லை. ஆகவே, அதனைப் பாசம் வந்து பற்றிக்கொள்வதற்கான அறிவின்மை அதன் பால் இருத்தல்வேண்டும். அறிவின்மை ஆன்மாவின் இயல்பு அன்று. அதனை அறிவின்மை உடையதுபோ லாக்கிக்கொண்டிருக்கும் குற்றம் அதனிடம் கூடவே இருக்கவேண்டும். அதனைக் காரணமாகக்கொண்டு தான் பாசம் ஆன்மாவைப் பற்றுவதாகவேண்டும். அந்தக்குற்றமே மலம் எனப்படுவதாம்.

மேலும், ஆன்மாவினை மாயாசரீரம் தானாகவந்து பொருந்தாது. ஆன்மாவின் புண்ணிய பாவங்கட்கு ஈடாகவேவந்து பொருந்துவதாகும். இந்தப் புண்ணிய பாவங்கள் ஒரு சரீரம் ஆன்மாவுக்கு வந்த பிறகு அந்த ஆன்மா திரிகரணங்களாலும் செய்யும் செயலால்தான் உண்டாகும். ஆகவே. சரீரம் இல்லாமல் இருவினை

ஏற்படாது. இருவினையின் காரணமாகத்தான் சரீரம் அமைகிறதென்பது ஐக்கியவாதியின் கொள்கையாக உள்ளது. அப்படியானால் மாயாமலம், கன்மமலம் என்ற இரண்டனுள்ளும் எது ஆன்மாவினை முதற்கண் வந்து கூடியது என்று உறுதியாகச் சொல்ல முடியா மற்போம். ஆகவே, காரணகாரிய முறைமை ஒழுங்கு படாமல் தவறுகிறது. எனவே, இந்த மாயா கன்மங்க ளெனப்படும் பாசமானது ஆன்மாவை வந்தடைவ தற்கு ஆன்மாவிடம் ஒரு மலம் இருந்தாகவேண்டும். அதுவே ஆணவமலம் எனப்படும். இதுவே சித்தாந்த மாம் என்பது நிராகரணம்.

ஆணவமலம் என்ற ஒன்று உயிருடன் முதலி லேயே இருக்கவேண்டுவதில்லை. வெள்ளையான துணி யிலே, வெள்ளை நிறம் முதலிலேயே இருந்தபோதிலும், இடையிலே அழுக்குவந்து பொருந்துகிறது போலவே, ஆன்மாவினிடமும் பாசம் இடையிலே வந்து பொருந் தும். இது இயற்கையே என்று ஐக்கியவாதி கூறுதல் கூடும். இக்கொள்கை பொருத்தமற்றதாகும். சுத்த மான அறிவுடைய ஆன்மாவிடம் பாசம் இடையிலே வந்து தானாகவே பொருந்துமானால், மாயாகன்மங்களை விட்டு நீங்கிச் சுத்தம் - வீடு - பெற்றவரிடமும் திரும்பப் பாசங்கள் வந்து பொருந்தலாகும். அதனைப் பொருந்தவொட்டாமற் செய்வதற்கு என்ன ஆதாரம் உள்ளது? ஆகையால் மூலமலம் ஒன்று அநாதியிலே ஆன்மாவுக்குச் செம்பிற்குக் களிம்புபோல இருந்தே யாகவேண்டும் எனக் கொள்ளுதல் ஏற்புடையதாம்.

அநாதியிலே விட்டு நீங்காததொரு சகசமலம் இருப்பதனாலேதான் அதனை நீக்கிக்கொள்வதற்குத்

துணைபுரியுமாறு மாயா கருவிகள் வந்து இடையிலே கூடுகின்றன. இந்தக் கருவிகளின் துணையினால்தான் ஆன்ம அறிவு சப்தாதி விஷயங்களை அறிகிறது. இது நேரில் நடைபெறுவதை நாளும் காண்கிறோம். அப்படியிருந்தும் ஆணவமலம் என்பது கிடையாது என்பது பொருந்தாக் கொள்கையாகும் என்க.

இந்தக் கருவிகளின் துணையை வேண்டாமலே அறியவல்ல அறிவு ஆன்மாவுக்கு உண்டு என்றால், அது விழித்திருக்கையினும் தூங்குகையினும் ஒரு நிகராக அறிதலைச் செய்யவேண்டும். அப்படி அது செய்யக் காண்கிலோம். கொடுமையான நஞ்சுடைய பாம்புக் கூட்டம், ஒருவன் தூங்கும்போது அவன் அருகிலே வந்து கிடந்தால் அதை அவன் அறிவு அறிந்து அஞ்சக் காண்கிலோம். அல்லது தூங்கிக் கொண்டிருக்கும் அவன் அருகிலே நவரத்தினங்கள் குவியல் குவியலாகக் கிடக்க நேரிட்டால் அதை அவன் உணர்ந்து ஆசைப்படவும் காண்கிலோம். ஆகவே, ஆன்ம அறிவு, கருவிகளின் துணைகொண்டறிவதான சிறுமை உடையதென்று நாம் நன்கு தெரியலாம். இச்சிறுமைப்பாடு ஆன்ம அறிவுக்கு எதனால் உண்டாயிருக்கக்கூடும் என்று எண்ணிப்பார்ப்பின், ஆன்ம அறிவை அணுத்தன்மைப்படச்செய்ய வல்லதான ஆணவம் என்பதொருமலம் இருத்தலால் தான் என்பது தெரியலாம்.

தூங்கும்போது கருவிகள் யாவும் பிரிவுற்றிருந்தமையினால் பாம்பு பற்றிய வெறுப்பும், நவமணி பற்றிய விருப்பும் உண்டாகவில்லையே ஒழிய ஆன்ம அறிவில்

ஏதும் குறைபாடு இல்லை என்று ஐக்கியவாதி வாதிக்கக்கூடும். அதற்கான சமாதானமும் காண்போம்.

பொறி புலன்களெல்லாம் விழிப்புநிலையில் குறைவறத் தொழிற்படும்போது, ஒருவன், இன்னொருவனிடம் தன் கைவிரல் மோதிரத்தைக் கொடுத்துக் காசுக்கடையில் விற்றுவரச் சொன்னான். அதனை எடுத்துச்சென்றவன் கடைத்தெருமுழுதும் சுற்றித் திரிந்தும் வாங்குவோர் எவரும் அகப்படக்கண்டிலன். ஆகையால், அவன், அந்த மோதிரத்தை உடனே கொண்டுவந்து மோதிரக்காரனிடம் தந்துபோனான். மோதிரக்காரன் தந்த அந்த மோதிரத்தை விரலில் அணிந்துகொள்ளாமல் எங்கோவைத்து மறந்துவிட்டான். மோதிரத்தின் நினைவுவந்தவுடனே, அம்மோதிரக்காரன், மோதிரத்தை விற்கக் கொண்டுபோனவனிடம் சென்று "யான் விற்பதற்கு உன்னிடம் தந்த மோதிரம் எங்கே?" என்று கேட்டான். அதற்கு அவன், "யான் உடனே உன்னிடம் திருப்பித் தந்துவிட்டதை மறந்துவிட்டாயா" என்று கேட்டு நினைப்பூட்டினான். பிறகுதான், மோதிரக்காரனுக்குத் தான் அந்த மோதிரத்தைத் திரும்ப வாங்கி வேறிடத்தே வைத்ததமை நினைப்புக்குவந்தது. மறந்துபோய்த் தவறாகக் கேட்டதற்கு வருந்தினான். இவ்வளவும், கருவிகளோடு கூடியுள்ள விழிப்புநிலையிலே நடைபெற்ற நிகழ்ச்சியாகும். ஆகவே, விழிப்பு நிலையிலேயும் மறந்து பிறகு நினைத்தலாகிய அறியாமை நிகழக்காண்கிறோம். நினைப்பதும் மறப்பதும் அறிவுடைமை ஆகாது. ஆதலால் இத்தகைய அறியாமையை விளைப்பதொருதடை இருக்கவேண்டும். அதுவே ஆணவம் எனப்படும் மூலமலமாம் என்று தெரியலாம். இப்படியெல்லாம்,

ஆன்மாவினிடத்தே அறியாமை இருப்பதைக்கண்டு தான் பெரியோர்கள் ஆணவமலம் என்பதொன்று உண்டு என்று நிச்சயித்துத் திரிபதார்த்தங்களின் உண்மை சாதித்துள்ளனர் என்பதே சித்தாந்தமாம் என்க.

## முத்திநிலை மறுப்பு

ஆன்மாவும் சுத்த அறிவு ஆம். சிவமும் அறிவே. ஆகவே ஆன்ம அறிவும் சிவத்தினறிவும் ஒன்றுபடும். அதுவே நல்லமுத்தி என்பது ஐக்கியவாதியின் கூற்றுகும். அப்படியானுல் - அதாவது இரண்டும் சுத்த அறிவேயாருல் ஒன்ருேடு ஒன்று கூடவேண்டுவதே இல்லை. முத்தியில் நீரும் நீரும் கூடினாற்போலப் பதியும் பசுவும் கூடிப் பிரகாசமாயிருக்கும் என்ருல் ஆன்மாவும், சிவமும் ஒரே தன்மையுடையன என்று எவரும் சொல்லினரிலர். சிவன் சர்வஞ்ஞன், பரிபூரணன், நின்மலன், பதியாவன்; ஆனுல் ஆன்மாவோ கிஞ்சிஞ்ஞன், ஏகதேசி, மலசகிதன், பசுவாவான். ஆகையால் தன்மையில் வேறுபாடுடைய இருவரையும் ஒரு தன்மையராகச் சொல்லுதல் தவருகும்.

மேலும், ஆன்மாவானது அநாதியில் சுத்தமாயிருப்பது; பிறகு, அசுத்தங்கள் நீங்கி முத்தியில் சிவனேடு கூடி இன்பம் அநுபவிப்பதாகும் என்ருல், மாயா கன்மங்கள் கூடுதற்கு முன்புள்ள சுத்தநிலையின்போது ஏன் இன்பமனுபவிக்கவில்லை. அப்படி அநுபவிப்பதாயிருந்தால் அதுவே முத்திநிலையாம். பின், பாசம் கூடவேண்டுவதில்லையாம். ஆகவே, மாயாவாதி சொல்லுவது போலவே - குடாகாய

மகாகாயக் கூட்டுறவுபோலவே உள்ளது ஐக்கிய வாதியின் முத்திக் கொள்கையும் என்னலாம்.

இதுவரை கூறியவதனால் ஆணவமலம் என்கிற மூலமலம் ஆன்மாவுக்குளது என்பதும், அதுபற்றியே மாயா கருவிகளின் கூட்டுறவும், கன்ம பந்தங்களாம் இறப்பு பிறப்புகளும் உளவாகின்றன என்பதும், இம் மலநீக்கத்தினைத் திருவருட்டுணையால் நீக்கி விடுவதே பேரின்ப நிலையாகும் என்பதும் நாம் தெரிதல் தக்க தாம். இனி, அருள்நிலை இயல்பு தரப்படும்.

ஐக்கியவாதி நிராகரணம் முற்றிற்று.

## செய்யுள்—7

## III — அ

## பாடாணவாதி சங்கற்பம்

மூல மலத்தால் சாலும் மாயை
கருமத்(து) அளவில் தரும்உரு இறைவன்
செறிந்(து)இரு பயனும் நுகர்ந்திடும் உயிர்கள்
இருள்உறு மலத்தில் பருவரல் படுதலின்
இடைஇரு நோக்கும் தடைபட் டோரின்
துயர்உறும் அதனுல் செயிர்உறு துன்பம்
கொத்தை மாந்தர் உய்த்துறும் துயில்போல்
காட்சி என்னக் காணுத் துயர
மாட்சியை முத்தி எனவகுத் தனரே.

### பொழிப்பு

*முன்புபோற்கொள்க.*

### விளக்கம்

அகச்சமயங்கள் என்று சொல்லப்படுவன, வேத சிவாகமங்களைப் பரமப் பிரமாணமாகக் கொள்ளும். என்ருலும், முத்திநிலைகளில் வேறுபடும். ஆதலால், அவைகளைப்பற்றி இனி ஆராய்ந்து மறுக்கப்புகுதல், இந்தப் பாடாணவாதி சங்கற்பம் முதல் தொடங்குகிறது. அகச்சமயம் ஆறு. அவை பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்தவாதம், ஈசுர அவிகாரவாதம், சிவாத்துவித சைவம் என்பனவாம். அவற்றுள் பாடாணவாதி கொள்கைகளாவன:-

ஆன்மாவிற்கு ஆணவமலம் குணம்போலச் சகசமாய் அநாதியே உள்ளது. அதனால் மாயை கன்மங்கள் ஆன்மாவை வந்து கூடும். இறைவன் இருவினைக்கீடாகச் சரீரங்களைக் கொடுப்பன். ஆன்மா அவற்றைப் பொருந்தி இன்ப துன்பங்களை நுகரும். அப்பொழுது, கண்ணொளியைக் காசபடலம் மறைத்தாற்போல ஆன்ம அறிவை ஆணவமலம் மறைக்கும். அதனால் பிறவித்துன்பம் அதிகரிக்கும். பாச ஞானமெல்லாம் தன்கீழ் அடங்குவன என்று அறிந்து நீங்குவதே முத்தியாம். முத்திபெற்றபோதும் ஆன்மா சகசமலத்தின் நீங்காது. சுட்டறிவும் சுகதுக்க அநுபவமும் நீங்கிப் பாடாணம் (கல்)போல் கிடக்கும் என்பதாம். இந்த மதம் ஆணவத்தை உயிரின்குற்றம் என்னுமல் குணம் என்கிறது. முத்தியிலும் ஆணவமலம் நீங்காது என்கிறது. ஆன்மாவின் அறிவு சிவத்தோடுகூடாமல் மலத்தில் அடங்கிக் கல்போலக்கிடக்கும் என்கிறது. ஆணவம், [உயிரின் குணமாதலால், குணியாகிற ஆன்மாவைவிட்டு அது ஒருபோதும் நீங்காது என்கிறது. இனி, நூலில் உள்ளபடிச் சங்கற்பம் காண்போம்.

ஆன்மாக்களுக்கு அநாதியே ஆணவமலம் உண்டு. இது மூலமலத்தால் என்பதால் பெறப்படும். இந்த மலத்தின் வேகத்தைப் போக்குவதற்காக மாயை ஆன்மாவை வந்துபொருந்தும். இது சாலும் மாயை என்று கூறப்படுவதால் அறியப்படும். இந்த மாயா கருவிகளையுடைய சரீரமானது ஆன்மா முன்செய்த கன்மத்துக்கு ஈடாகக் கருத்தாவால் கொடுக்கப்படும். கன்மங்கட்கு ஏற்பச் சரீரங்கள் உண்டாம். இச்சரீரங்களிலே பொருந்தியிருந்து ஆன்மாக்கள் தங்களுக்கு உண்டான புண்ணிய பாவங்களைப் புசித்துவரும்.

அப்படி அநுபவித்துக்கொண்டுவரும்போது ஆணவ மலத்தால் ஆன்ம அறிவு மறைப்படைகிறது. அது. முன்னே பார்வையோடு இருந்த இரண்டு கண்களும் இடையே காசபடலத்தால் மறைப்புண்டு காணுந் திறனிழந்து வருவதை நிகர்ப்பதாகும். இப்படி அவத்தைக்குள்ளாவதால் குற்றம் உள்ளதாகிய பிறவித் துன்பம் மேலும் மேலும் அதிகரிக்கும். இதுகாறும் கூறப்பட்டதே பெத்தநிலைமை விஷயமாம்.

அஞ்ஞானிகளாகிய ஆன்மாக்கள் எல்லா அவத்தைகளும்நீங்கி அதீதத்தில் அழுந்தியிருப்பதுபோலவே சுட்டறிவும் காட்சியும் இல்லையாகிச் சுகதுக்க அனுபவங்களற்றுக் கல்போலிருக்குமதே ஆன்மாவின் முத்திநிலை என்பர். இது காணுத்துயர மாட்சியை முத்தி என வகுத்தனர் என்பதால் அறியப்படுவதாம்.

பாடாணவாதி சங்கற்பம் முற்றிற்று.

## செய்யுள்—8.

## III—ஆ

## பாடாணவாதி நிராகரணம்

### பெத்தநிலை மறுப்பு

வகுத்துரை பெருகத் தொகுத்திடும் முத்தி
நன்று நன்(று)இருள் ஒன்றிய மலத்தாம்
உளத்திற்(கு) உறுபொறி செறிபுலன் நுகர்தல்
விளக்கில் திகழும் மேன்மைய(து) அன்றே
கருவிகள் அகல்வுழி மருவிய துயரம்
நன்றெனல் ஆகும் துன்றிய படலத்(து)
இடைதடைப் பட்ட சுடர்விழி மாந்தர்
படலம் நீங்குதல் கடனா தலினே

### முத்திநிலை மறுப்பு

காட்சி என்னக் காணாத் துயர
மாட்சியை முத்தி எனவகுத்(து) உரைக்கில்
கரணஅபாவம் மரணம் கருமரம்
ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவர் அன்றே
அனைய கதிக்(கு)ஓர் முனைவரும் வேண்டா
தனிதரு துயரம் எனும்இது திடமே
பாடா ணத்தில் கூடா முத்தி.

### பொழிப்பு

*முன்பு சொல்லப்பட்ட நூலாற்கொள்க.*

## விளக்கம்

பதி, பசு, பாசம், பாசத்தின் பிரிவுகள் முதலிய எல்லாக் கொள்கைகளையும் பாடாணவாதி, சித்தாந்தி போலவே வகுத்துச் சொன்னமை நல்லதே. அவ்வளவு பெருகச் சொல்லிவிட்டு முத்திநிலையில் சுருக்கமாகிச் சித்தாந்தப்படி ஏலாமை சரியன்ரும். அதாவது, ஆன்ம அறிவு மலத்துட்பட்டுக் கேவலநிலையில் கிடத்தலே முத்தி என்று கூறியமை நகைப்புக்கிடமாவதாம். ஆதலால் நன்று நன்று என்று கூறி மறுத்தார் ஆசிரியர். மலம் நீங்குவதே முத்தி என்பர் யாவரும். அப்படியிருக்க மலத்து ஒன்றுவதே முத்தி என்றமை சால வியக்கத்தக்கதாகும். கண், இருட்டைப் பொருந்தி இருப்பது சிறப்பு அன்ரும். ஒளியைப் பொருந்தி வாழ்வதே சிறப்பு ஆகும். இந்தக்கருத்து இருள் என்ற சொற்பிரயோகங்கொண்டு குறிப்பிக்கப் பட்டது என்னலாம்.

சகலநிலையில் ஆன்மாவுக்குப் பொருந்தப்பட்ட இந்திரியங்கள் காட்டாகின்றன. அதனுல் ஆன்மா நெருங்கிய சப்தமுதலான விஷயங்களைப் புசிக்கிறது. அது, விளக்குக் காட்டாகக் கண் கண்டுவருந்தன்மை போலுள்ளது. "மாயா தனு விளக்காம்" என்பர். இத் தகைய சகலநிலை குற்றமுடையதென்று பாடாண வாதம் புகல்கிறது. ஆகவே, விளக்குப்போல் இருந்து ஆன்மாவுக்குக் காட்டும் கருவிகள் நீங்கிஞல் ஆன்மா ஆணவமலத்திலே அழுந்திக் கிடக்கலுறும். இது கேவலநிலை ஆம். அதனுல் இதனை முன்சொல்லப்பட்ட சகலநிலைபோலவே நன்ரும் என்று சொல்லலாகும்.

ஏனென்ருல், படல மறைப்பால் பார்வையுள்ள கண் இடையே தடைப்படுகிறது. பிறகு மருந்தாலும்,

உரிப்பாலும் அப்படலம் நீங்கித் திரும்பவும் பார்வை அடைகிறது. இந்த முறைமை போலுள்ளது கேவல சகல நிலைகள். ஆதலால், இந்த முறைமை பெத்த நிலைக்கு உண்மையில் பொருந்துவதாகும்.

## முத்திநிலை மறுப்பு

சுட்டறிவு இல்லாமல் காட்சியற்றுச் சுகதுக்க அனுபவம் இல்லாதிருப்பதே முத்தி என்று சொன்னால் அது உண்மையில் பேரின்ப முத்திப்பேறு ஆகாது. இது கேவலநிலை போல்வதாகும். இதனால் பிறப்பும் முத்திப்பேறெனக் கொள்ளவேண்டி வரும். கரணங்களைப் பிரியப்பெற்ற ஆன்மா மரணம் அடைதலும், கருவை அடைதலும், மரவர்க்கத்தைப் பொருந்துதலும்கூட முத்தி என்றே சொல்லவேண்டி வரும். இப்படிக் கேவலமும் சகலமுமாம் நிலைமைகளிலே ஆன்மா உழலுதல் முத்தி எனப்படுமானால் இதனை எய்துவிப்பதற்கு ஒரு முதல்வனும் ஆசிரியன் தேவையில்லையாகும். எல்லாக் கருவிகளும் நீங்கி ஆன்மா ஆணவத்தோடு கூடி ஒன்றுமறியாமல் கிடப்பது கேவலத்துயரம் எனப்படுமேயல்லாமல் முத்தி என்ப்படாது. ஆதலால், கல்லுப்போல ஒன்றும் அறியாமலும் இன்பானுபவம் இல்லாமலும் கிடத்தல் ஒருபோதும் முத்தி அன்றாம் என்பது சித்தாந்தம் கூறும் மறுப்பாம். இதனால் கேவலநிலை முத்தியன்றென்க.

பாடாணவாதி நிராகரணம் முற்றிற்று.

## செய்யுள்—9.

## IV—அ

## பேதவாதி சங்கற்பம்

ஈசன(து) அருளால் பாசத் தொகுதி
செறி(வு)உறு செம்பில் கறைஉறு களிம்பு
குளிகை தாக்க ஒளிபெற் றாங்கு
நித்த சுத்த முத்தர் ஆக
வைத்தனர் உலகில் மறைவல் லோரே.

### *பொழிப்பு*

*முன்புபோலக் கண்டுகொள்க.*

### *விளக்கம்*

பேதவாதம் எனப்படுவதன் சுருக்கமான கொள்கைகளை முதலில் காண்போம். மும்மலங்களும் செம்பிற் களிம்புபோல ஆன்மாக்களுக்கு அநாதியே உள்ளன. அவற்றால் ஆன்மாவானது சுகதுக்கங்களை அனுபவிக்கும். உச்சிப்போதில், சேய்மையாக முன்பு நீண்டிருந்த ஒருவன்நிழல் அங்ஙனம் நீண்டோடும் தன்மைகுன்றி அவனடியில் வந்து ஒடுங்கினாற்போல, கரணங்களிற்சென்ற ஒருவனறிவு பக்குவம் வந்ததும் அப்படிச் செல்லாமல் அவன்மாட்டு வந்து ஒன்றி நிராதாரமாய் நிற்கும். இரச குளிகையினால் செம்பானது, களிம்பு நீங்கிப் பொன்னாயதுபோல, ஆன்மாவும் இறைவன் திருவருளால் மும்மலங்களும் நீங்கிப் பெறுவானும் பேறுமாய் இருக்கும். அதன்மேல்

அடிமையாதல் இல்லையாம். இதுவே பேதவாதியின் கொள்கை என்ப.

இறைவன் அருள்மிக்கவன். அவனது திருவருளே ஆன்மாக்கட்கு உதவிபுரிவது. இது ஈசனது அருளால் என்பதனுல் விளங்கும். குகைக்குள் தாமிரம்வைத்து உருக்கப்படுகிறது. அப்போது அந்தச் செம்புக் குழம்பில் கரியதும் அதனின் கூடியிருப்பதுமான களிம்பும் உள்ளது. அந்த நிலையில் அதனிடம் இரசகுளிகையைச் சேர்த்தால் காளிதம்முழுதும் கெட்டு ஒழிகிறது. உடனே செம்பு பொன்னுகிவிடுகிறது. இவ்வாறே. ஆன்மாக்கள், ஆணவம் முதலிய மலக் களிம்புடன் அநாதியே கூடியுள்ளன. பிறப்பெனும் பேதைமைக் கலத்திலிட்டு ஆன்மாக்கள் உருக்கப்படுகின்றன. அதாவது சுகதுக்க அனுபவங்களால் உணர்ச்சிபெறுமாறு செய்யப்படுகின்றன. இதனுல் ஆன்மாக்கள் உவர்ப்புணர்வடைந்து பக்குவப்படுகின்றன. இந்த நிலையிலே இறைவனது திருவருள் கூடுகிறது. அதனுல், ஆன்மாவின் மும்மலங்களும் அடியோடுகெடுகின்றன. இப்படியாக மலக்கேடு நிகழ்கிறது.

இவ்வாறு மலம்நிவர்த்திபெற்ற ஆன்மாவானது அழிவற்றதாய்க் குற்றமற்றதாய் உள்ள முத்தி நிலையை அடைகின்றது. அப்போது பெறுவானும் பேறுமாய் இருக்கப்பெறும். இதுதான் வேதத்தின் உண்மையை நன்குணர்ந்தோர்கள் கூறும் முடிபாம் என்பது பேதவாத சங்கற்பம் எனப்படும்.

பேதவாதி சங்கற்பம் முற்றிற்று.

## செய்யுள்—10.

## IV—ஆ

## பேதவாதி நிராகரணம்

மறைகள் ஆகமத் துறைகள்மற்(று) எவையும்
நாசம்இல் பதிபசு பாசம்என்(று) உரைத்தல்
அயர்த்(து)ஓர் குளிகைச் சயத்தால் தாம்பிரக்
காளிதம் நாசம் பாசத்(து) ஏய்த்தல்
கூடா(து) அன்றியும் குளிகை சீருணம்
நீடா(து) அழித்த நிலைநிலை ஆதலின்
பேத வாதம் ஓதுதல் பிழையே
இன்னும் இன்உயிர் ஏமம் குளிகை
தன்னில் அன்னியம் தருவது திடமே
வீடு இத்திறத்தினில் கூடக் கூடா.

### *பொழிப்புரை*

*முன் நூலாற் கொள்க.*

### *விளக்கம்*

வேதங்களும் ஆகமங்களும் அவற்றின் வழிநூல் களாகிய புராணங்களும் சாத்திரங்களும் பதி, பசு, பாசம் என்கிற மூன்று பொருள்கள் உள்ளன என்றும், அவை அழிவில்லாதவை என்றும் கூறுகின்றன. அகச்சமயம் என்ற முறையில் பேதவாதிக்கும் இது சம்மதமாக இருக்கற்பாலதாகும். அப்படியிருக்க,

பேதவாதி ஓர் உவமானம் கூறுவதைப் பார்த்தால் மேலே சொல்லப்பட்ட பிரமாணங்களை மறந்து விட்ட தாகக் காணப்படுகின்றான். அந்த உவமானமானது வருமாறு:

தாமிரத்தில் காளிதம் உள்ளது; அதனை மாற்ற வல்லது இரசகுளிகை. எனவே தாமிரம், காளிதம், குளிகை என்ற முப்பொருள்கள் உள்ளன. இவை எவ்வாறாயினும் முப்பொருள்களாக இருக்கும் தன்மை இருந்தேதீரவேண்டும். ஆனால், காளிதத்தோடு கூடிய தாமிரத்தில் குளிகை சேர்க்கப்பட்டதும் தாமிரம் பொன் ஆகிவிடுகிறது. என்றாலும், களிம்பு கெட்டுவிடுகிறது. எனவே ஒரு பொருளுக்குக் கேடு உள்ளது; எஞ்சுவன இரு பொருள்களே என்பது தெளிவாம். இந்த உவமையானது முத்தியிலும் முப் பொருள் உண்டு என்கிற வேதாகமப் பிரமாணங் கட்குப் பொருந்திவரவில்லை. ஆகவே பாசத்திற்குக் கூறப்பட்ட காளித உவமை பொருந்தவில்லை. காளிதம் தன் இயல்பு கெட்டுத் தான், தாமிரம் பொன்னாதற் கண் உபகாரப்பட்டிருப்பதானால் பொருந்தும். அப் படியில்லை, ஆகவே உவமானம் சரியன்றாம்.

அன்றியும், செம்பைக் குளிகையானது நிலைநிற்கச் செய்யாமல் அழித்துப் பொன்னாக்கிவிட்டது. இத் திட்டாந்தநிலை பேதவாதிக்குத் தாட்டாந்தநிலையாகி விட்டதாகும். செம்பு, தன்னை மாற்றிய குளிகையாக வும் மாறவில்லை. தன் நிலைமையும் கெட்டொழிந்தது. நடுவே பொன்னும் தன்மை பெற்றது. ஆகவே, பசு முதல் கெடாமல் பெறுவானும் பேறுமாய் இருக்கும் என்று சொல்லப்பட்ட பேதவாதம் பழுதுபடுகிறது.

இப்படியே, ஆன்மாவானது, தன்னைச் சுத்தமாக்கின சிவசொருபமும் ஆகாமல், தன் ஆன்மத்தன்மையும் கெட்டு வேறொரு சொருபம் அடைவதாக இந்த உவமானம் காட்டுகின்றது. ஆகவே குற்றம் உண்டு எனப்படும். இதனால் முத்திநிலை என்பது செம்பும் இரசகுளிகையும் போலாவது என்பது பொருந்தாதாம். ஒன்றுகூடும் நிலை இன்மையால் இப் பேதவாதம் பொருந்தாதபடியாகும் என்க என்பது சித்தாந்த மாகக் கொள்க.

பேதவாதி நிராகரணம் முற்றிற்று.

## செய்யுள்—11.

### V—அ

### சிவசமவாதி சங்கற்பம்

**பெத்தநிலை**

பாசமும் பசுவும் ஈசனும் என்(று)இம்
மூவகை உணர்வும் தாம்முதன் மையஆய்ப்
பாச ஐம்புலன் தேசுற உணர்த்தப்
பசுத்தனி ஞானம் புசித்திடும் அன்றே
இனைய ஞானம் பிரிவுற எரியாச்
செந்தழல் தகும்நெறி அந்தம்இல் உயிரும்
அறி(வு)ஆய் ஒன்றும் அறியா(து) அன்றே

**முத்திநிலை**

இவ்வா(று) ஒழுகும் ஏனை உயிர்க்கு
முன்னோன் தனது முதிர்ஒளி ஞானம்
அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
வண்டென உயிரைக் கொண்டிடும் உயிர்அது
தன்னை நோக்கித் தான்அது ஆகி
ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும்
பிரியா ஆறு பெற்றுத்
திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே.

***பொழிப்பு***

*இதன் முன்நூலாற் கொள்க.*

## விளக்கம்

இங்குரைக்கப்புகுந்தது, அகச்சமயம் ஆறனுட்பட்டதொன்றாகிய சிவசமவாத சங்கற்பமும் நிராகரணமுமாம். இச்செய்யுள் சங்கற்பம் கூறி நிற்பது. இனிச் சிவசமவாதம் எனப்படுவது, சங்கிராந்த சிவசமவாதம், உற்பத்தி சிவசமவாதம், ஆவேச சிவசமவாதம், ரூப சிவசமவாதம், அரூப சிவசமவாதம் எனப் பலவகைப்படும். இவையாவும், ரூப சிவசமவாதமும் அரூப சிவசமவாதமும் என இரண்டில் அடங்கும் என்பர். மற்றும் இந்நூலுள், பவுட்கரம் முதலான சிவாகமங்கள் எங்ஙனம் பிரசினமும் உத்தரமுமாய்ப் பரமத கண்டன முறைத்துச்சென்று சித்தாந்தத்தைத் தெரியச் செய்கின்றனவோ அம்முறையேபற்றிப் பரமதக்கொள்கையும் மறுப்புமாகக் கூறப்பட்டு வருதல் காணலாம். இங்குச் சிவசமவாதியரும், பாடாணவாதியர் பேதவாதியர்போலவே, பொருள்கள்பற்றிக் கொள்ளப்படவேண்டிய சிறப்பிலக்கணம் பொதுவிலக்கணமாத்திரத்தில் மாறுபடுவர். அம்மாறுபாட்டினையே அவர் தம் சங்கற்பம் கூறுமுகத்தால் இங்குத் தருகின்றார் ஆசிரியர் என்னலாம். மற்றும், இங்குச் சிவசமவாதக் கொள்கை இன்னதெனத் தெரிதற்பொருட்டுச் சுருக்கம் தரப்படுகிறது. அதுவருமாறு:-

பதிஞானம், பசுஞானம், பாசஞானம் என ஞானம் மூன்றும். இம்மூன்றும் அநாதியே உள்ளவை. பாசஞானமாகிய இந்திரியங்கள் விஷயங்களை விளக்கும். அப்போது பசுஞானம் அவற்றைப் புசிக்கும். இந்த இரண்டு ஞானங்களும் நீங்கிவிட்டபோது ஆன்மா சுவாலையில்லாமல் கிடக்கும் தழல்போல

ஒன்றையும் அறியமாட்டாது. அறிவுமாத்திரையாய் இருக்கும். அப்பொழுது, வேட்டுவன் புழுவை எடுத்துக் கொள்வதுபோலப் பதிஞானம் ஆன்மாவை எடுத்துக்கொள்ளும். புழுவானது, குளவியைப்போல நினைத்திருந்து அதன் வடிவாவதோடு, அங்ஙனம் ஆயின பிறகு குளவியின் தொழிலெல்லாம் புரியும். அதுபோலவே, ஆன்மாவும் பதியையே நினைத்திருந்து பதிவடிவாகி அப்பதியின்தொழிலைத் தானும் நிகழ்த்தும் என்பர். இங்குத் தரப்பட்டுள்ள உவமை ஆராயப்பட வேண்டுவதாகும். அன்றியும், ஆன்மா, பதியாகிப் பஞ்சகிருத்தியமும் நிகழ்த்தும் என்பது எம் மட்டில் செல்லுபடியாகும் என்பதும் கவனிக்கப்பட வேண்டுவதாம். இதன்மேலாகப் பாடலில் உள்ள வண்ணம் பார்த்துச் செல்வோம்.

பதி பசு பாசம் என்பன திரிபதார்த்தங்களாம். இம் மூன்றினுக்கும் பதிஞானம் என்றும், பசுஞானம் என்றும், பாசஞானம் என்றும் சொல்லப்பட்ட ஞானங்கள் அநாதியே முதன்மையாய் உண்டு. பாசஞானம் என்பது, பாசமாகிய கருவிகளால் ஆன்மாவினிடத்தே நிகழும் ஞானமாம். பசுஞானமென்பதே ஆன்மஞானம் ஆகும். ஆணவமலம் நீங்கியவிடத்து ஆன்மஞானம் பதிஞானத்தோடு ஒப்பதாகும் என்பர்.

விஷயங்களைப் பாசஞானம் எனப்படும் இந்திரியங்கள் மயக்கமற அறிவிக்கின்றன. இதனால், ஒப்பில்லாத ஆன்மஞானமெனப்படும் பசுஞானம் அந்த விஷயங்களைப் புசிக்கும். இந்த இரண்டு ஞானங்களுமே ஆன்மாவின் விஷயப் பிரவிர்த்தியில் ஓயாது தூண்டிக்

கொண்டிருக்கும். இந்த இரண்டு ஞானங்களும் நீங்கி விட்டால், கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த கட்டையானது எரியாமல் வெறும் நெருப்புமாத்தி ரையாய்க் கிடப்பதுபோல ஆன்மாக் கிடக்கும். ஆத லால், அவத்தையில் அழிவில்லாதிருக்கும் ஆன்மா அறி வாய்மட்டில் இருப்பதனால் சுட்டுணர்வினை இழந்து விளங்கும். எனவே ஏதொன்றையும் சுட்டியறியாது. இவ்வாறு கிடத்தலே, அதாவது சுட்டுணர்வும், விஷயப்புசிப்பும் அற்று விளங்கும் நிலையுடைமையே ஆன்மாவிற்குப் பெத்தநிலை எனப்படுங்காலை நிகழ்வ தாகும்.

## முத்திநிலை

ஆன்மஞானம் புசிப்பற்றுக் கேவலமாதலும், பாச ஞானத்தால் விஷய உணர்வுற்றுச் சகலமாதலும் கொண்டுள்ள ஆன்மாவுக்குப் பதிஞானம் வந்து கூடும். இவ்வாறு கூடுதல் மேலே சொன்னவண்ணம் சுவாலை அடங்கிய கொள்ளிபோல் விளங்குங் காலத் தாகும். மூன்று ஞானங்களுள்ளும் முந்தியதே பதி ஞானமாம். இது மிகுந்த அறிவாயிருப்பதாகும். ஒன்று மறியாமல் பச்சை நிறமாகவுள்ள ஒரு சிறிய புழுவைக் குளவியானது எடுத்துச்சென்று தன் கூட்டுள்வைத் துத் தன்மயமாக்குவதனால் அப்புழுவும் குளவியாகி விடுகிறது. இப்படியே, பாசஞான பசுஞானங்கள் அற்று ஒய்ந்துவிட்ட ஆன்மாவினைப் பதிஞானமானது வந்தெடுத்துக்கொள்ளும் செயல் நிகழும். புழு எப் படிக் குளவியையே எண்ணியிருந்து குளவியாகிவிடு கிறதோ அப்படியே ஆன்மாவும் சிவத்தியானமே பண்ணிச் சிவசொரூபமாகிவிடும்.

வேட்டுவனுகை ஆகிவிட்ட புழுவானது தன் புழுத் தன்மைபோய் வேட்டுவனுருவும் அடைந்து அது செய்தொழிலும் புரிந்து, அக்கூட்டத்தோடு கூடியிருக்கும். அப்படியே, ஆன்மாவும், பூரண அறிவுடைமையும், ஐந்தொழிலாற்றலுமாகியவற்றைத் தன்னை விட்டு நீங்காதவாறு எய்தப்பெற்று, இதற்கு முன்னே இங்ஙனம் அறிவும் தொழிலும் பெற்று நீங்கப்பெறுதுள்ள பெரியோர் கூட்டத்தோடும் கூடி நிற்கும். இன்னமும் தொகுத்துக் கூறினுல் முத்திபெற்ற உயிர் சிவனோடு சமமாகும். ஆதலால், சிவத்திற்கு அடிமையாதல் இல்லை என்பர். சிவசமமாவதால் சிவம் போலவே ஐந்தொழிலும் செய்யும். சிவம், ஆன்ம ஞானத்தினுலேயே அறியப்படுவன். சிவன் அருளால் அறியப்படுவன் என்பது சரியன்ரும். ஏனென்ருல் ஆணவமலம் நீங்கப்பெற்ற பசுஞானம் சிவஞானத்தினை நிகர்ப்பதாம். உயிர், தானே அறியும் தன்மை உடையது. பசுத்தன்மை நீங்கியபோது ஆன்ம அறிவு, பதிஞானம் ஒக்கும். ஆதலால் அத்தகைய ஆன்ம ஞானத்தினிடத்தே பதி விளங்கித் தோன்றும். பதி ஞானத்தாலன்றித் தன்னையும் தலைவனையும் தெளிந்தறிதல் கூடாதென்றல் பொருந்தாதாம் என்பனவும் இதன் கொள்கைகளாம்.

சிவசமவாதி சங்கற்பம் முற்றிற்று.

## செய்யுள்—12.

### V—ஆ

### சிவசமவாதி நிராகரணம்

#### பெத்தநிலை மறுப்பு

சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமும்
ஒருகால் அன்றித் தெரிவுற நிற்கில்
ஒண்பொருள் காணும் பண்பினுக்(கு) ஒருகால்
பரிதியும் மதியும் எரிதரு விளக்கும்
வேண்டல் இன்றே காண்தகு காலை
ஒன்றொன் றாக நின்றறி வுறும்எனில்
அன்னியம் அறியா மன்உயிர் பொறிபுலன்
தானே அறியா தலைவற்(கு) உலகினை
ஆனா அறிவால் அறியவேண் டின்றே
கொழுந்தழல் தகுமெனில் அழுந்திடும் அவத்தையில்
திரியாத் தலைவற் றெரியாத் தன்மைவந்(து)
எய்தல் ஆகா;

#### முத்தி மறுப்பு – சரீரமின்று என்பது

மெய்யுறு பொருட்கு
முன்னர்க் கீடம் தன்என எடுத்த
வேட்டுவன் இயல்பு கூட்டல் பெறாதே
வண்(டு)இறும்(பு) எடாஉள் கொண்டது தனக்கு
மந்திர வாதம் தந்ததும் இலதே
எடுத்திடும் அதனால் அடுத்த(து)என்(று) அறையில்

கருமயிர்க் குட்டி இருசிறைப் பறவை
ஆயினது எடுத்த தாயர்சாற் றிலரே
பிறவிப் பேதத் துறைஇவை கிடக்க
ஏயும் இத்திறன் ஆயுங் காலை
யோகத் தகுதி ஆகத் தகுமே
ஞானம் இன்மைஎன்(று) ஓதுவ(து) எவன்எனில்
உயிரும் உணர்வும் பயிலுதல் இன்றி
வேட்டுவன் உருவம் மென்புழு உணர்வு
கூட்டுத லால்உருக் கூடுத லானும்
முத்தியில் இறையில் பற்றுதல் இன்றித்
தன்உரு அணைந்த பின்அதன் உணர்வு
மாறுத லானும் ஊறுடைத்(து) அன்றே.

**பஞ்சகிருத்தியம் இன்று என்பது**

ஈசன(து) இயல்(பு)அருள் எய்(து)உயிர் இயற்றல்
பேசுதல் தவ(று)எனப் பெருமறை அறைய
ஐந்தொழில் உயிரும் தந்திடல் தகுமே
ஆவதென் முன்நாள் நாவலர் பெருமான்
பண்(டு)ஒரு முதலை உண்ட மைந்தனை
வரவழைத் தனர்என் றுய்ப்பிழைப்(பு) இலதுஅதூஉம்
தந்திட வேண்டும் என்றனர் அன்றே
இன்னவை கிடக்க முன்னவன் தன்மை
எய்தினர் எல்லாச் செய்தியும் செய்வர்
இரும்(பு)எரி எய்தித் தரும்செயல் தகஎனில்
பொருள்நிலை கிடக்க ஒருதிட் டாந்தப்
பேறே ஆயின் சீருக் கதுவிய
புனல்ஒரு புடைசேர் கனல்தகும் ஆயினும்
வேறொரு பொருளை நீ(று)ஆக் கிலதே

நெருப்(பு)எனும் இதனின் உருத்தனி காட்டுக
அங்கியும் ஒன்றில் தங்கிநின் றல்லது
தன்தொழில் நடத்தா(து) என்(று)அறி இனிநீ
இரும்(பு)அனல் செய்தி தரும்பரி(சு) உளதோ
அதுஎன்ஓர் அலகை பொதிதரும் காலை
அதன்செயல் அனைத்தும் இவன்செயல் ஆம்ஆல்
அவன்இவன் ஆகில் இவன்அவன் செய்திக்(கு)
என்அவை என்னில் பின்உறு செயலும்
அதன்செயல் அன்றி இவன்செயல் ஆகில்
இவன்செயல் பேயின் தன்செயல் ஆகி
இருந்த வாஎனத் தெரிந்திட வேண்டும்
தெரியா தாகில் புரியில் கடுங்கனல்
எரிந்த(து) என்னும் இதுதகும் அன்றியும்
அவன்இவன் ஆகில் இவன்அவன் செய்தி
என்று செய்வான் ஒன்றிய மதத்தாய்

## சர்வஞ்ஞத்துவம் இன்று என்பது

எல்லாம் அறிதல் செல்லா(து) உயிர்கள்
சிற்றறி(வு) எனும்இச் சொல்தவ றாகும்
என்ப(து)என் அலகை தன்பதம் அடைந்தோர்
கொண்ட வாறு கண்டனம் என்னின்
மூங்கை அந்தர்உற்(று) ஓங்கிய குணம்குறி
செய்வதென் இன்னும் பவ்வம்உற்று அழுந்தினும்
நாழி கொள்ளா(து) ஆழியின் அலைபுனல்
அதனால் கருத்து முதல்உள தாக
வேண்டும் அன்றே ஈண்(டு)இனி அமையும்
எல்லாம் எனும்இச் சொல்லால் படும்பொருள்

அனைத்தும் தாக்காத் தனிப்பரத்(து) உற்றவர்க்(கு)
எவ்வகை உணர்வு செய்வ(து)என் செப்புக.

## பரமுத்தி மறுப்பு

ஒன்றின் ஒன்(று)ஆம் ஒன்றா(து) உலகில்
நின்ற போ(து)உயிர் நேர்ஆம் அன்றே
முத்தி உற்ற நற்றவர் அவையிடைச்
சேர்வர் என்றனை சார்தரும் முத்தி
சாலோக் கியமோ சாயுச் சியம்எனில்
பந்தம் உற்ற கந்தல கழித்த
அறிவினோ(டு) அறிவு பிறியாப் பெற்றி
வேண்டும் என்றதற்(கு) ஈண்(டு)இவர் இவ்வா(று)
இருப்பர் என்பதற்(கு) உருத்தான் வேண்டும்
அண்ணல(து) அருளின் நண்ணி இருப்பினும்
சீவன் முத்தர்என்(று) ஓதினர் அகன்று
நீங்கியும் உருவம் நீங்கா தாயின்
ஓங்கிய முத்தி யாவ(து)என் உரைக்க
செடிஉடல் அணுகாக் குடிலை கொடுக்கும்என்(று)
ஓதினை நீயே பேதாய் பகட்(டு)உரல்
ஒளிர்சினை முச்சித் தளிர்எனும் இதுதகும்
இச்சா ரூபம் நச்சினர் என்னின்
மும்மலத்(து) ஏதும் இன்மைய(து) அன்றே
இதுவளர் முத்திப் பதம்என இயம்புவர்
ஈங்(கு)இவை நிற்க.

## பொழிப்பு

*இதனின் முதல் வெளியீட்டால் மொழிந்து கொள்க.*

*விளக்கம்*

இப்பாடலடிகளால் சிவசமவாத மறுப்பு, காரணங்களோடு கூறப்படுகிறது. சிவசமமாவது உண்மையில் மலம்நீங்கி முத்தொழிற்படாமையை உணர்த்துவதாகும். உண்மை அதிகாரம் 8-ஆம் சூத்திர உரைகள் இங்குப் பார்த்தல் நன்றும். மற்றும், இப்பாடலடிகளில் ஆங்காங்கு, சிவசமவாதப்பகுப்பினர் கொள்கைகளும் மறுக்கப்படுதல் காணலாம். ஐந்தொழில்செய்ய இயலாது என்பது சிவசமவாத மறுப்பாம். அடிமை ஆம் என்றல் சங்கிராந்தவாத மறுப்பாம். நித்தப் பொருள் ஆன்மா என்பதனுல் உற்பத்திவாதம் மறுப்புண்ணும். அடிமையாய் நிற்கும் என்றது ஆவேசவாத மறுப்பாகும். பொதுவாகக்கூறின் சிவனேடு சமம் ஆவேன் என்பதே சிவசமவாதமாகும். பிறவும் வந்தவாறு கண்டு உய்த்துணர்தல் கூடும். விரிப்பின் நூல் பெரிதாமாகலின் தொகுத்து ஈங்கு உரைக்கப் பட்டது என்க. மற்றும் நுட்பங்காண வேண்டுமாயின் 'சிவசமவாதவுரை மறுப்பு' என்னும் இவ் வாதீனத்து நூல்கொண்டும் அறியலாம்.

பதிஞானம் பசுஞானம் பாசஞானம் என்ற மூன்றும் ஒக்கக்கூடிநின்றே ஒருமுதல் அறியப்பட வேண்டும் என்ற கருத்துப் பொருத்தமற்றதாகும். ஏனெனில், ஒருபொருளை அறிதற்கு மூன்றன் துணையும் வேண்டுவதில்லையாம். எவ்வாறெனில், அழகியதொரு பொருளைக் கண் இந்திரியம் காண வேண்டுமாயின், சூரியனொளியேனும், சந்திரனொளியேனும், விளக்கினதொளியேனும் வேண்டும். இவற்றுள் ஏதேனும் ஒன்று வேண்டுவதேயல்லால் மூன்றொளியும் ஒன்று கூடித்தேவைப்படாது. ஆகையால் மூன்றுஞானமும்

கூடியறியும் என்பது ஆகாது என்க. பரிதியும் மதியும் எரிதரு விளக்கும் வேண்டல் இன்றே காண்டகு காலை என்ற வரிகள் இக்கருத்தைத் தருவனவாம்.

மேற்சொல்லப்பட்டவாறன்றித் தனித்தனியே நின்று ஒவ்வொரு விடயம் அறியும் என்றால், நிலை பெற்ற உயிர்கட்கு விடயங்கள் வேறாயிருப்பவை யாதலால், பசுஞானம் தானொன்றியாகவே ஒரு விஷயமும் அறியமாட்டாது. இதுவன்றிப் பாசஞானம் சடமாதலினாலே அதுவும் ஒருவிஷயம் அறியாது. பதிஞானமோ என்றால் அது அநாதியே பேரறிவாம். ஆகையால், விஷயத்தைப் புதிதென அதுகொள்ளாது. ஆதலால், சுட்டியறியாது. ஆதலால், தனித்தனி ஒவ்வொன்று ஒவ்வொரு விஷயத்தை அறியும் என்றல் ஏற்புடைத்தன்றாம்.

மற்றும், கருவிகள் யாவும் நீங்கி ஆணவத்தால் மறைப்புண்டுகிடக்கும் அவத்தையில் ஆன்மாவானது எரியாமற்கிடக்கும் நெருப்பை ஒத்திருக்கும் என்றால், ஆன்மாவைவிட்டு எப்போதும் பிரியாதிருப்பவனாகிய கர்த்தாவை ஆன்மா அறியாமலிருக்க இயலாது. ஆகவே, இதுவரையில் பெத்தநிலையின் இயல்பு இத்தகையதென எடுத்துரைக்கப்பட்டதென்க.

## ஆன்மா பஞ்சகிருத்தியம் செய்யும் என்பதை மறுத்தல்

சிவனோடு ஆன்மா ஒன்றுபடுவது முத்தித் தன்மையாம். ஆன்மா, இந்த முத்தித்தன்மை அடையுமுன் ஒன்றும் அறியாமற் கிடப்பது. அது அசையாது

கிடக்கும் பச்சைப்புழுப் போல்வது. இந்தப் புழுவைத் தன்னைப்போல் குளவியாக்க வேண்டுமென்று வேட்டுவன் எடுத்துவந்து அங்ஙனம் ஆக்குகிறது. இம்மாதிரியில்தான் ஆன்மா, தற்சொரூபப்படுத்தப் படுகிறது என்று உவமைகாட்டிக் கூறுவர் சிவசம வாதியர். முத்திக்கு இந்த உவமை கூறியது பொருந் தாது. ஏனெனில், வண்டு இறும்பு எடா உள்கொண்டது தனக்கு ஆம். வேட்டுவன் புழுவை எடுத்துத் தன் கூட்டிற்குள் கொண்டுசென்றது தன் முட்டையினின்று வெளிப்படும் புழுக்கட்கு உணவாக்குதற் பொருட்டாகும். இதுவே விஞ்ஞானிகளும் கூறுவது. ஆகவே, கொண்டுசெல்லப்பட்ட பச்சைப்புழு குளவியாதலில்லை என்பர். மேலும், அப்பச்சைப் புழுவைக் குளவியுரு எய்துதற்பொருட்டுக் குளவி ஏதும் மந்திர வாதம் - உபதேசம் செய்ததுமில்லை. ஆனால், ஆன்மா, தற்சொரூபப்படுதற்கு மந்திர உபதேசம் செய்யப் படுவதைக் காண்கிறோம். ஆகையால் இவ்வுவமை பொருந்துவதன்று எனப்படலாயிற்று என்க.

அப்படியில்லை; வேட்டுவன், புழுவை எடுத்த செயலே உபதேசச் செயலை நிகர்க்கும் என்றால், வேறொன்றாலும் எடுக்கப்படாத கம்பளிப்புழு முதலியனவும் கூட்டுப்புழுவாய் உறங்கிக்கிடந்து பிறகு இரு சிறகுகளுடைய பறவையாகின்றனவே. அவற்றை அங்ஙனம் தாயாக வந்தெடுத்துத் தாங்கியது வேறெதுவும் இல்லையே. ஆகையால், எடுத்ததே மந்திர உபதேசம் செய்ததை நிகர்க்கும் என்றமை தவறாகும். எனவே, பச்சைப் புழுவின் கதியும், மயிர்க்குட்டியின் பறவை மாற்றமும் அவ்வவற்றின் கன்மத்துக்கு ஈடாக நிகழும் காரியமாகும். இவை பிறவிப்பேதத்

துறை என்ற வரிகள் இதனை உணர்த்தும். ஆகவே, இத்தகைய அச்சுமாற்றம் முத்திக்கு உவமையாகக் கூறப்படுதல் பொருந்தாதாம். இவ்வகையான பிறவிப் பேதத்துறையினை ஞானமார்க்கம் என்றும் அதுதான் முத்திக்குநெறி என்றும் கூறுதல் தவறுபடுவதாம். இதனை வேண்டுமாயின் யோகத்திற்கு உவமை யாகக் கூறல் தகும். ஏன் இது ஞானமார்க்கமாகாது என்றால், பிறவி அடைதல் ஞானமன்று. பிறவி நீங்கு தலே ஞானமாம். அதாவது, ஆன்மாவும் சிவனும் கூடி ஒன்றுபட்டிருப்பதே முத்தி எனப்படும். மேற் சொல்லப்பட்ட உவமை பிறவியடைந்து எடுத்த ஒன்றின் வேறுபட்டிருப்பதற்கே பொருந்துவதா யிற்று. மேலும் முத்தியிலும் ஒரு சரீரம் கூடுவதாக அந்த உவமையால் அறியக்கிடக்கிறது. ஆகவே, முத்தியில் கர்த்தாவினிடத்தில் கூடியிருத்தலேயன்றி வேறாயிருக்கும் என்று கூறுதல் தோஷமாம். மேலும், எந்த ஞானத்தால் முத்தி கைகூடுகிறதோ அந்த ஞானம் முத்திநிலையிலும் இருக்குமேயன்றி மாறி விடாது. ஆனால் மேற்சொல்லப்பட்ட உவமையில், மயிர்ப்புழுவாயிருக்கும்போது இருந்த ஞானமே அது பட்டாம்பூச்சியாகிப்பறக்கும்போது இல்லை என்பதை அது அப்போது நிகழ்த்தும் தொழில்களால் அறிய லாம். ஆதலால், உருவுமாற்றமும் அறிவுமாற்றமுமே முத்திநிலை என்பது ஞானத்தால் உண்டாகும் முத்தி நிலை எனப்படாது என்க.

படைத்தல் முதலான ஐந்தொழிலையும் கர்த்தாவே செய்வன். ஆன்மா முத்தி எய்தியபின்னும் செய்யும் திறத்தது அன்று. திருவருளைப்பெற்ற ஆன்மா, பஞ்ச கிருத்தியங்களையும் செய்யும் என்பது வாயினும்

பேசத்தகாத வார்த்தையாகும். அப்படிப் பேசுதல் குற்றமுடைத்து என வேதம் சொல்லுகின்றது. ஆகவே, சிவசமவாதி, முத்திநிலை எய்திய ஆன்மாப் பஞ்சகிருத்தியம் செய்யும் என்று கூறுதல் ஒரு சிறிதும் பொருந்தாக்கூற்றாகும். இதனை, ஐந்தொழில் உயிரும் தந்திடல் தகுமோ? என்ற வினுவால் ஆசிரியர் வலி யுறுத்துக் கூறுதல்மூலம் அறியலாகும்.

முத்தியுற்ற உயிரானது படைத்தலாதி ஐந்தொழி லையும் இறைவனைப்போலப் புரியமாட்டாது. முத்தி நிலையினும் அஃது அடிமையாயிருத்தலே உண்மை என்றால், இவ்வுலகிலே முன்னாளிலே நம்பியாரூரர் முதலை விழுங்கிய பாலனை வரவழைத்துக் காட்டினரே அது எவ்வாறு அவரால் செய்யமுடிந்தது என்று சிவ சமவாதி கேட்கக்கூடும். இதற்குக் கூறப்படும் சமாதா னம், நம்பியாரூரர் அப்பிள்ளையைத் தாமே படைத்துத் தரவில்லை. "முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே" என்று ஆதியும் அந்தமும் ஆயினராகிய சிவபெருமானை வேண்டிக்கொண்டமையால், அவர் அப்பிள்ளைதருவித்த செயலைத் தாமேசெய்திலர் என்று தெரியலாகும் என்னலாம். ஆகவே, திருவருளைப் பெற்ற ஆன்மா, பஞ்சகிருத்தியம் செய்யும் என்பது பொருந்தாக்கூற்றாய் முடியும் என்க.

அப்படியன்று; திருவருள் பெற்றோர் கர்த்தா செய்யும் சிருஷ்டி முதலான காரியங்களைச் செய்ய முடியும். நம்பியாரூரர் திருவருள் பெற்றவராதலால் அவரால் இந்தக் காரியம் கண்ணெதிரே செய்து காட்டப்பட்டது. இதனை இல்லை என்பது ஒவ்வாது. இரும்பு நெருப்பினை அடைந்து பழுக்கக்காய்ந்துள்ள

போதுதான் நெருப்புச்செய்யும் தொழிலைச் செய்ய வல்லதாகிறதை நாம் பார்க்கிறோம். ஆகவே, தீயைச் சேர்ந்த ஒன்று தீச்செய்யும் எரித்தலாதி தொழிலைப் புரிதல் போலவே, திருவருள் சேரப்பெற்றோர் திருவருள் புரியும் பஞ்சகிருத்தியங்களையும் செய்யவல்லவராவர் என்னத் தடையில்லை என்று சிவசமவாதி மறுத்துச் சொல்லலாயினர். அது கேட்டலும், சித்தாந்தியர்,

மிகுந்த தீயைத் தண்ணீர் அடைந்து கொதிநிலை உற்றதாயினும் அது வேறொரு பொருளைத் தீய்க்கும் தன்மையை அடையவில்லை. தண்ணீர், வெந்நீரானாலும், தீயை அவித்தலாகிய தன்னுடைய செயலொன்றையே புரிகின்றதல்லால் மாறுபடவில்லையே. எவ்வளவு கொதிக்கின்ற நீரும் ஒரு சிறு வைக்கோல் துரும்பையும் எரிக்கவில்லை என்பதை நாம் நேரில் பார்க்கிறோமல்லவா? அப்படித்தான், திருவருள்பெற்ற உயிரானது கருத்தா புரியும் செயலைச் செய்யமாட்டாமை உள்ளது என்று தெரியவேண்டும் என்றனர். அதுகேட்ட சிவசமவாதி, அது நெருப்புக்கு மாறுபட்டதான தண்ணீரின் இயல்பு. அதனால் அது சுட்டதில்லை. தனித்துத் தீயாய் நிற்பின் சுடும் என்றனர். அதனைச் செவியேற்ற சித்தாந்தியர், நெருப்பு என்கிற பூதம் தனித்து நிற்கவல்லதன்று; ஆதலால் தனித்து நின்று தன் தொழிலைச் செய்யாது; அது தனித்து நின்று செய்ததான ஏதேனும் ஒரு காரியத்தைக் கூறிக்காட்டுக என்று கேட்டனர். இரும்புற்றதீச் செய்கிறதே என்று சிவசமவாதியர் சாற்றலும், அங்ஙனமன்று; தீயானது இரும்பைச் சார்ந்துநின்று தான் தன் தொழிலைச் செய்கின்றதே அல்லால், தனித்துச்

செய்ததில்லை. இரும்பு தீயைக் கூடியிருப்பினும் இரும் பன்று கொளுத்தும் தொழிலைச் செய்வது. தீத்தான் அங்ஙனம் தெறுகின்றது. இரும்பு தீக்கொரு சார்ச்சிப் பொருளாகமட்டில் உள்ளது. அதுபோலவே, திரு வருளைப் பெற்றோரும், கர்த்தாவைப்போல அவரது தொழிலாகிய பஞ்ச கிருத்தியங்களை ஒருபோதும் செய்ய இயலாது என்றனர் சித்தாந்தியர் ஆவர்.

ஒருவனைப் பசாசு பிடித்ததாக வைத்துக்கொள் வோம். அப்போது அந்தப் பசாசினுடைய செய லெல்லாம் பசாசு பிடியுண்டவன் செயலாகத் தானே காணப்படுகின்றது. ஆகையால், அருளைப்பெற்றவர் செயலையும் அப்படித்தான் கொள்ளவேண்டியுள்ளது என்று சிவசமவாதம் பேசினால், அதுவும் பொருத்த மற்றதாகவே முடியும். சிவன் ஆன்மாவின்மூலம் ஒரு தொழிலைச் செய்தானாயின், அது சிவன்செயல் எனப்படுமேயல்லால், இந்த ஆன்மாவின் செயல் என்று கூறப்படாது. அன்றியும் அத்தொழிலைச் செய் தற்கு இவ்வான்மாத்தான் உரிமையுடைத்து என்றால், ஒருவன், பேய் பிடியுண்டிருந்தபோது செய்த தொழிலை எல்லாம், அவனைவிட்டு அந்தப் பேய் நீங்கி விட்ட பிறகு, யாரும் இவன் செயல்கள் என்னாமல் பேயின் செயல்கள் என்றே சொல்லுதலாலும் இவ னுக்கு அச்செயல்களில் உரிமை ஒரு சிறிதுமில்லை என்பதைப் புலப்படுத்தும் என்னலாம். பேய் பிடி யுண்டவன், காரியத்தைச் செய்யும்போது பேயால் பிடியுண்டு இக்காரியத்தைச் செய்கிறேனென்று அறிவ தில்லையே என்றால், பேய் நீங்கிய பிறகு இவன் ஏதொன்றையும் அறியமாட்டாமையால், பேய் ஏறிச் செய்ததெனவே துணிகின்றானவன். எப்படி ஒரு

புரியினிடத்துக் கொடிய நெருப்புக் கூடிநின்று தன் தொழிலைச் செய்கிறதோ அப்படியே சிவனும் ஆன்மாவினிடம் நின்று தன்தொழிலைச் செய்தது என்ன வேண்டும். அவ்வாறன்றி, ஆன்மா சிவனது தொழிலைச் செய்யாது; செய்ததெனவும் சொல்லுதல் பொருந்தாது எனத்தெரிதலே தக்கதாம்.

மேலும், படைத்தலாதி தொழிலைச் செய்பவன் தான் அத்தொழிற்கு அப்பாற்பட்டவனுகவும் கட்டுப் படாதவனுகவும் இருக்கவேண்டும். சிவன், ஒரு காலத்திலும் சனன் மரணம் இல்லாதவர் ஆவர். ஆன்மாவோ, கணப்போதில் எண்ணற்ற பிறப்பு இறப்புக்களை எய்துவதாகும். ஆதலால், ஆன்மா, படைத்தலாதி தொழிலைச் செய்யக்கூடும் என்பது தகர்தபேச்சாம். ஆகவே, ஆன்மா எந்தக்காலத்திலும் பஞ்சகிருத்தியத் தொழில்களை நிறைவேற்றுவதாகாது என்க என்று கூறிச் சித்தாந்தப்படுத்தலும், மேற்கொண்டு இதுகுறித்துச் சிவசமவாதி ஏதும் பேசவில்லை, ஆதலால், உன்மத்தத்தோடு கூடியிருப்பவனே என்றனர் சித்தாந்தியர் என்ப.

## ஆன்மா சர்வஞ்ஞத்துவம் உடையது என்பதை மறுத்தல்

எல்லாம் அறிதல் வல்லதாகும், சிவனைப்பெற்ற ஆன்மா என்று கூறுதலும் பொருத்தமற்றபேச்சாகும். எல்லாவற்றையும் அறிந்திருக்கும் திருவருள் ஆன்மாவினிடம் பதிந்திருப்பதால் ஆன்மாவும் எல்லாம் அறியவல்லதாகும் என்று ஒருவேளை கூறப்படும். அது

முற்றும் தவறுகும். ஆன்மாவுக்குச் சிற்றறிவுடைய தென்பதே பெயராக வழங்குவது தெரியப்படவேண்டும். அப்படிக் கொள்ளவில்லையானல் 'ஆன்மா கிஞ்சிக்ஞன்' என்ற பிரமாணவாசகம் பொய்யாகிவிடும். ஆகலால், அங்ஙனம் பிரமாண வாசகத்தை மறுத்து இஷ்டப்படிக்கோடல் பொருந்தாதாகும். பேயின் பதவியைப்பெற்றோர், அப்பேய்க்கு உள்ள தன்மை யாகிய வருங்கால நிகழ்ச்சிகளை எல்லாம் கூறுகிறார் களே;அவ்வாறே சிவனைப்பெற்றோர், சிவனின் தன்மை யான சர்வஞ்ஞத்துவம் அடையப்பெறுவர் என்றால் பழுது என்ன? என்று கேட்கலாம். அப்படியானல் ஊமையாயும், குருடாயும் உள்ள ஒருவன் பேயினுல், பிடிக்கப்பட்டிருப்பினும் பேசவும் முடிவதில்லை; பார்க்கவும் முடிவதில்லை. ஆதலால், பேயின்தன்மை எல்லாம் அது பிடியுண்டவனுக்கு வாய்க்கும் என்பது பொருத்தமற்றதாகும் என்க. மேலும், கடலில் அள விட முடியாதபடி தண்ணீர் இருக்கிறது. அதனுள் ஒருநாழி அளவுள்ள பாத்திரத்தை எவ்வளவுதான் அழுத்தி முகந்தாலும் அது அந்த நாழி அளவு நீரே பெற்றிடுமல்லால் கடல்நீரவ்வளவும் அதுபெறமாட்டாது. ஆதலால், ஆன்மா பொறியோடும் கூடியிருப் பினும் அதற்குள்ள அளவு அறிவே இருக்குமல்லாமல், கர்த்தாவுக்குள்ள அறிவவ்வளவும் பெற இயலாது. ஆகவே அருளோடு கூடிய ஆன்மாவும் ஆன்மத் தன்மைக்கேற்ற அறிவைப் பெற்றிருக்குமே அல்லா மல் எல்லாவற்றையும் அறியப்பெறும் என்பது பொருந்தாதாகும். இதனுல் 'எல்லாம் உடைமை' சிவனுக்கியல்பாம். அவன் அனைத்திலும் தோய்வற நிற்பவன்; ஒப்பற்றவன். அச்சர்வஞ்ஞத்துவத்தை

ஆன்மா எப்படி அடைந்துவிட முடியும்? ஆதலால், சிவனைப் பெற்றபோதும் எல்லாமறியும் அறிவுகூடாது என்பதே சித்தாந்தமாகக் கொள்ளப்படவேண்டும் என்க.

## பரமுத்திநிலையை மறுத்தல்

பரமுத்திநிலையில் ஆன்மாவும் சிவமும் ஒன்று ஆய்விடும் என்றால் ஒருமுதல் இல்லை ஆம். அங்ஙனம் அடையாமல் சரீரத்தைப்பெற்றுச் சீவன்முத்தனாக இருக்கும் என்றால், அங்ஙனம் உள்ள ஆன்மா சிவ சமானம் ஆகாது. ஆதலின் இருவகையும் பொருந்தும் கொள்கையாகாது. அல்லாமலும், முன்பே திருவருளைப் பெற்றோர் முத்தியடைந்திருக்கும் நல்ல தவத்தைக்கொண்ட பெரியோர் கூட்டத்து நடுவே சென்று இருப்பதாகும் என்று சொன்னால் அங்ஙனம் சென்று சார்ந்திருப்பது சாலோக்கிய முத்தியாகுமேயல்லாமல் சாயுச்சியமுத்தியாகாது. சாயுச்சியமுத்தியையே இங்ஙனம் பெற்றிருப்பர் என்றால் அங்ஙனம் ஒரு கூட்டத்தைச் சேரப்பெற்றவர்க்குப் பரமுத்தியின்கண்ணும் ஒரு சரீரம் இருக்கவேண்டிவரும். இவ்வாறிருத்தல் பிரியாது கர்த்தாவோடு ஒன்றுபட்டிருக்கும் இயல்பு எனப் படமாட்டாது. ஒருவேளை கர்த்தாவின் திருவருளைப் பெற்றுப் பரமுத்தி அடையாமல் இந்தச் சரீரத்தோடே இருந்தாரானால் அவரைச் சீவன்முத்தர் என்று சொல்வரேயல்லார் பரமுத்தர் என மாட்டார்கள் நல்லோர்கள். பரமுத்தியினும் இப்படி ஒரு சரீர தொந்தம் இருக்குமானால் அந்தப் பரமுத்தி மேலான முத்தி என்று சொல்லப்படத்தக்கதன்று. ஒருவேளை பரமுத்திநிலையில் அடையும் சரீரம் இந்த அசுத்தமாயா தேகம் அன்று; சுத்தமாயாதேகம் ஆகும் என்று

சொன்னுல், அதுவும் தேகமர்தலால், தேக் தொந்தனை அதன்கண்ணும் இருந்தே தீரும். வேப்பமரத்தினுடைய அடிக்கட்டை கசக்கிறதென்று கண்டு அதை விட்டு அம்மரத்தின் நுனிக்கொழுந்தைக் கசக்காது என்றெண்ணிக் கொள்வாரிருக்கமாட்டார்கள். அப்படித்தான் இருப்பது அசுத்த - சுத்தமாயா தேக விஷயம். அவ்வாறின்றிச் சாருபம் சுவேச்சையினுற் கொண்டு கூடியிருப்பர் என்று சொல்லின், மலமாயை கன்மங்கள் நீங்கிவிட்டதாகச் சொல்லமுடியாமற் போம். எப்படியும் சரீரத்தோடு கூடியுள்ள முத்தி பரமுத்தி ஆகாது; பதமுத்தியே ஆகும். ஆதலால், இவ் விதமான முத்தநிலை பழுதுடையதாகும். சித்தாந்த முத்தி எப்படிப்பட்டதென்பதைக் கேட்டறிதலே தக்கதாம் என்க. இவ்வாறு கூறிப் பரமுத்திநிலை மறுக்கப்பட்டது என்க. மற்றும் சிவசமவாதப் பொருத்தமின்மை ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகளால் சிவஞானமாபாஷியத்தின் பொது அதிகார இறுதி அதிகரணத்தே மிகவும் விரித்துக் கூறப்பட்டிருத்தலாலும் அறியப்படும்.

சிவசமவாதி நிராகரணம் முற்றிற்று.

## செய்யுள்—13.

## VI—அ

## சிவசங்கிராந்தவாதி சங்கற்பம்

### பெத்தநிலை

நீங்கா(து) ஒளிர்உயிர்
விளக்கென நிற்கும் அளப்புறும் அறிவின்(று)
இறைவற்(கு) ஏதும் அறியவேண் டின்றே
மன்னும் ஆன்ம சன்னிதி அளவில்
காந்த பசாசத்(து) ஏய்ப்ப வாய்ந்த
உயிர்உடல் இயக்கும் செயல்உறு பூட்டைப்
பலவகை உறுப்பும் இலகிய தொழில்போல்
ஐம்பொறி புலன்கள் இன்புறும் அன்றே
இனைய வாய்தலின் நிகழ்தரு பயனவை
அந்தக் கரணம் முந்தி உணர்ந்திடும்
இவைஅகல் வுழிஐம் பொறிபுலன் நிகழாது
உயிர்நீங் கிடில்உடல் செயல்இல தன்றே
இவ்வகை வினையின் செவ்விதின் நடத்தும்.

### முத்திநிலை

பழமலம் நீங்க நிகழும் காலை
ஏற்றோர் முகஒளி தோற்றும் கலன்எனத்
தலைவன(து) அருள்உயிர் நிலவிடும் நிலவக்
காட்டத்(து) அங்கி மாட்டத் தங்கிய
தன்மையும் அளத்துப் புல்வையின் நீப்பும்

போன்றது ஆகித் தோன்றிடும் அதனல்
பசுகர ணங்கள் சிவகர ணங்கள்
ஆக மாறி அறிவும்
ஏக மாம்உயிர் யான்என(து) இன்றே.

## பொழிப்பு

முன்புபோற்கொள்க.

## விளக்கம்

இப்போது சிவசங்கிராந்தவாதத்தின் கொள்கைகள் இச்செய்யுளில் தரப்படுகின்றன. முதற்கண், சிவசங்கிராந்தவாதம் இன்னதெனச் சுருங்க அறிவோம். அது வருமாறு;- ஆன்மாவின் சந்நிதியில் காந்தமும் இரும்பும்போல உடல் இயங்குகையில் அதனிடம் நின்று கருவிகளை விடயங்களை அநுபவிக்கும். மலம் நீங்கும்போது, கண்ணாடியின் முக ஒளி தோன்றுவது போல முதல்வன் திருவருள் ஆன்மாவினிடம் சங்கிரமித்துத் தோன்றும். அப்போது உப்பளத்தில் இட்டவை எல்லாம் உப்பாமாறுபோல ஆன்மாச் சிவமே ஆய் அவ்வான்மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுகரணங்களும் சிவகரணமாய் மாறிச் சிவத்தை அறியும் என்பதாம். சிவசங்கிராந்த சமவாதி எனப்படுவோன், சிவன் தன் குணங்களை முத்தான்மாக்களிடத்துப் பற்றச்செய்வன் என்று சொல்பவனுவன். மற்றும், முத்தியில் உயிர் சிவத்துடன் ஒன்றுய்ப்போகுமேயல்லாமல் அடிமையாதல் இல்லை. விளக்கின் முன்னிலையில் கண்ணெளி பொருளை அறிவதுபோலவே பெத்தநிலையில் ஆன்ம முன்னிலையில் கரணங்கள் விஷயங்களை அறியும். அதுபோலவே, முத்திநிலையில்

அந்தக்கரணங்களே சிவகரணமாகி ஆன்மமுன்னிலை யில் நின்றே சிவத்தை அறியும். கண்ணுடியின் சந்நிதி யில் அதன் நிழலுக்குப் பிரகாசம் உண்டாவதுபோல, ஆன்மசந்நிதியில் சடமாகிய கரணங்கட்கு அறிவு உண்டாகின்றது. பாசஞானம் என்ற சொல் வழக் கத்தால் பாசத்தையும் அறிவுடையதென்றே சொல்ல வேண்டும். ஐம்பொறிகளே சிவகரணமாய் நின்று தத்துவ ஞானத்தை விளக்குதலால் முதல்வன் குரு வாய் வருதல்வேண்டாம் என்பனவும் இந்தச் சங்கி ராந்தவாத சமயக்கொள்கைகளாகும்.

## பெத்தநிலை

ஆன்மாவானது நீங்காத பிரகாசத்தை உடையது. விளக்குப்போலச் சுட்டு அற நிற்கும். அது இது என்று சுட்டி அறியும் அறிவு ஆன்மாவுக்கு இல்லை.

முதல்வன் விகாரமில்லாதவன். ஆதலால் அவற்கு எது ஒன்றையும் அறியவேண்டுவது இல்லை.

காந்தம் யாதொரு விகாரப்பாடும் அடையாமல் இருக்கிறது. அதன் முற்பட்ட இரும்பு காரியப்படு கிறது. அதுபோலவே, ஆன்மா விகாரமின்றி உள்ளது. அதன் சந்நிதியில் பொருந்தியதான பிராணவாயுவே உடலைக் காரியப்படுத்துகிறது. தண்ணீர் இறைக்கும் பூட்டையில் உள்ள பலவகையான பாகங்களும் தத்தமக்குரிய தொழில்களைச் செய்வதால் முழுக்காரி யம் நடைபெறுகிறது. அதுபோலவே, பஞ்ச இந்திரி யங்களும் தத்தமக்குரிய சப்தாதி விஷயங்களை அநுப விக்கின்றன. இந்திரியங்கள் எந்த எந்த விஷயங்களிற் பொருந்துகின்றனவோ அந்த அந்த விஷயங்களை

அந்தக்கரணங்களே முந்தி அறிகின்றன. இந்த அந்தக் கரணங்கள் நீங்கிவிட்டால் பஞ்சேந்திரியங்களுடன் சப்தமுதலான விஷயங்கள் பொருந்தமாட்டா. இப்படியே, பிராணவாயு நீங்கிவிட்டால், உடல் சேட்டைப்படாமல் கிடக்கிறது. இதேமாதிரிதான் ஆன்மாவின் சந்நிதியில் பிராணவாயு இயங்கிப் பிராரத்துவத்தைப் புசிக்கச்செய்கிறது. இப்படியே பிராரத்துவப் புசிப்பு நிகழும்போது அநுபவ முதிர்ச்சிப்பட்டு ஆணவமலம் நீங்குகிறது.

## முத்திநிலை

இந்த அநாதிமலம் நீங்குகையால் இருவினை ஒப்பும் சத்திநிபாதமும் நேரும். கண்ணுடியை எடுத்துப் பார்த்தால் பார்த்தோரின் முகபிம்பம் தோன்றுவது போல, கர்த்தாவின் திருவருள் ஆன்மாவினிடத்திலே பொருந்தப்பெறும். இப்படித் திருவருள் பொருந்துவதனுல், விறகினிடத்திலே தீயைக் கொளுத்தின பொழுது அந்த விறகு கெட்டுத் தீயாவதுபோலவும், உப்பளத்தில் போட்ட புல்லும் வைக்கோலும் தம் தன்மைகெட்டுப் போவதுபோலவும், இந்த ஆன்மாவும் தன் உண்மை கெட்டு அருட்சொருபமாய்த் தோன்றும். இதனுல் பசுகரணங்கள் சிவகரணங்கள் ஆகும். அறிவு இரண்டுபட்டிருந்த தன்மைபோய் அருளோடும்கூடி ஒன்ருகிவிடும். பிறகு இந்த ஆன்மாவுக்கு யான் எனது என்கிற தன்மை அற்றுப்போய் விடும். இதுவே முத்திநிலை ஆகும்.

சிவசங்கிராந்தவாதி சங்கற்பம் முற்றிற்று.

## செய்யுள்—14.

## VI—ஆ

## சிவசங்கிராந்தவாதி நிராகரணம்

### பெத்தநிலைமறுப்பு

இன்(று)உனது உரையின் அன்றி உயிர்ஒளிர்
தீபம் போலத் தாபம் தரின்இருள்
செறியும் தன்மைஎன் அறிவில தாகில்
ஒளிஎன உரைத்த தெளி(வு)அதற்கு ஏதுஆம்
சன்னிதி அளவில் மன்னும் செயல்உடல்
காந்தம் போல வாய்ந்த(து)·என்ற
தன்மையும் உணராப் புன்மைய(து) அன்றே
உயிர்உடல் இயக்கில் துயில்பெறுங் காலைச்
செய்வ(து)என் மஞதி எய்(து)உயிர் பொறிபுலன்
நடத்த ஆவியும் சடத்தன ஆயின்
பூட்டையில் பூணி கூட்டல் பெறாதே
புலன்ஐம் பொறியில் நிலவிடும் என்றனை
அஞ்சும் ஒருகால் துஞ்சா(து) அறிதற்(கு)
அழி(வு)என் தருச்செழு மலர்இலை யொடுபலம்
கனிதரு வதுபோல் இனையவை ஐந்தும்
ஒன்றென் றாக நின்(று)அறி வுறும்எனில்
ஒன்றின் பயன்நனி ஒன்(று)அறி யாதால்
இதுவே அல்லது கதுமென இருசெவி
இருகூற்(று) ஒருகால் தெரியாத் தன்மைவந்(து)
எய்தும் மஞதியும் மெய்உயிர்ச் செயலும்
தனக்(கு)இல(து) ஒருவர்க்(கு) எனத்தெளி கிலையே

## முத்திமறுப்பு

நோக்கும் முகஒளி நீக்கா தான்எனக்
கவரும் தன்மை முகுரம் போலக்
கொடுத்தது கோடற்(கு) அடுத்ததுஉண் டன்றே
காட்டத்(து) அங்கி கூட்டக் கூடும்
இந்தனத்(து) இயற்கை வெந்தழல் தாங்கா
உப்பளத்(து) அடுத்த புல்பலா லங்கள்
சடத்த ஏனும் கொடுத்தது கொள்ளும்
தன்மைஉண்(டு) உனக்(கு) இன்மைஅது அன்றே
அவம்உறு கருவி சிவமயம் ஆம்எனக்
கூறினை ஆகம் வேறுருக் கவரா(து)
என்பது(என்) அவைமுன் துன்பம் துடைக்கும்
திருவருள் மருவ உரியன என்னில்
அருள்உரு மாயா இருளின(து) ஆம்கொல்
சத்த பரிச ரூப ரசநறை
எத்திறத் தின(து)அருள் இயம்புக அன்றியும்
நிறைந்து நீயாய் நின்றனை யேனும்
மறைந்(து)ஐம் புலனாய் வாராய் என்றும்
கரணம் எல்லாம் கடந்தனை என்றும்
மரணம்ஐ ஐந்தின் அப்புறத்(து) என்றும்
முன்அருள் தலைவர் பன்னினர் எனவும்
இனையவை ஒழிய அறிகுவ(து) எவ்வா(று)
என்ற நிற்(கு)அலிக்(கு) ஒன்றிய இன்பம்
கூறுதல் தகும்அருள் பேறினை அன்றே
ஏகம் உயிர்அறி(வு) ஆக மொழிந்தனை
இருபொருள் ஒருமை மருவிய(து) இலதே
இவ்வகை கிடக்க மெய்வகை கேண்மதி.

## பொழிப்பு

*முந்திய முறையாற்கொள்க.*

## விளக்கம்

பெத்தநிலை, முத்திநிலை என்கிற இரண்டையும் பற்றிச் சிவசங்கிராந்தவாதி சொன்ன வாசகங்களை ஆராய்ந்து பாராமல் ஏற்றுக்கொள்ள இயலாது. இப்போது அவ்வாதி பேசின பேச்சின்படியே ஆராய்வோம்.

## பெத்தநிலை மறுப்புகள்

ஆன்மாவானது பிரகாசமுள்ள தீபத்தைப்போலத் தாவும் என்பது உண்மையானால், அதற்கு அஞ்ஞான மென்கிற இருட்டு எப்படி வந்து கூடியிருக்கும்? விளக்கு உள்ள இடத்தில் இருட்டு இராது என்பது வெட்டவெளிச்சமான செய்தியாச்சுதே. ஒருவேளை, ஆன்மாவிடம் அறிவு இல்லாதபடியால் அஞ்ஞான இருள் கூடியது என்றால், தீபம்போன்றது ஆன்மா என்றசொல் வியர்த்தமாகுமன்றோ! இது நன்றாக ஆராயப்படவேண்டிய செய்தியாகும் அல்லவா?

அப்பால், ஆன்மாவின் சந்நிதியிலே பிராணவாயு காரியப்படுத்துகிறது; அதனால் உடல்காரியப்படுகிறது; அது எதுபோல என்றால், காந்தத்தின் சந்நிதியில் இரும்பு காரியப்படுவது போலாம் என்று கூறப் படுகின்றது. இதுவும் நன்கு விசாரித்தறியவேண்டிய செய்தியே ஆகும். பிராணவாயுவானது ஒருவன்

தூங்கிக்கொண்டிருக்கும்போதுகூடக் காரியப்படுத்திக்கொண்டுதானே உள்ளது. அப்போது உடம்பு கட்டைபோல அசைவற்றுக் கிடக்கிறதொழியக் காரியப்படக் காணேம். ஆகவே, இதனுல் நாம், உடம்பைக் காரியப்படுத்துவது பிராணவாயுவன்று: ஆன்மாவேதான் என்று தெரிந்துகொள்ளுவதே சரியான முடிபாகும்.

ஆன்மா அவிகாரியாய் இருப்பதாகும். ஆதலால், அது உடம்பைக் காரியப்படுத்துகிறதென்பது பொருந்தாது என்று சொல்லக்கூடும். அப்போது ஆன்மாவும், மனம் முதலிய அந்தக்கரணங்கள்போலவும், பிராணவாயுப்போலவும், இந்திரியங்கள் விஷயங்கள்போலவும் சடமாக அன்றே இருப்பதாகிவிடும். ஒருவேளை நீரிறைக்கும் கவலைபோலத் தொழிற்படும் என்றுல், கவலையிற் கட்டப்பட்டுள்ள எருதினுலே, நீரிறைக்கும் கவலையாகிய அவயவங்கள் காரியப்படுகிறதைக் காண்கிறேம். அப்போது செயற்படும் மாடுபோன்று ஆன்மாவும் செயற்படுவதாக ஏற்படும். செயற்படும் கருவியாகவும் கருதப்படும். ஆதலால் நீரிறைப்புக் கருவியை ஆன்மாவுக்கு உவமையாகக் கூறுதல் பொருந்தாமை திருஷ்டாந்த விரோதமாகும். ஆகையால், இந்த உவமை ஆன்மா அவிகாரி என்பதற்கு ஏற்றதன்று எனத் தெரியலாகும்.

சப்தம் முதலான விஷயங்களைப் பஞ்சேந்திரியங்கள் பொருந்தி அநுபவிக்கும். ஆதலால். ஆன்மா அவிகாரிதான் என்று சொல்லலாம். ஆனுல், பஞ்சேந்திரியங்களும் ஏககாலத்தில் தத்தமக்குரிய எல்லா விஷயங்களையும் அறிவதில்லை. மேலும் ஒன்று அறிவதை

மற்ற நான்கும் அறிவதில்லை. ஆகவே, இந்தக் குறைவு பாடு இருப்பதைக் கவனிக்கவேண்டும்.

நல்ல ஒரு மரமானது ஏககாலத்தில் இலை காய் பழம் முதலிய யாவற்றையும் தாராது. ஒவ்வொரு காலத்திலே ஒவ்வொன்றைத் தோற்றுவிக்கும். அது போலவேதான் ஐந்து இந்திரியங்களும் ஒவ்வொரு விஷயமாக அறிகின்றன. இதனால் அவை ஒன்றும் அறிவின் தோற்றங்களேயாகும் என்று கூறினால் தவறில்லை என்னலாம். ஆனால், ஐந்து இந்திரியங் களும் ஓர் இந்திரியத்தின் விஷயத்தை மற்ற ஒன்று அறியமுடியாமல் உள்ளன ஆதலால், ஒரே அறிவின் சமூகம் இவை என்பது பொருத்தமில்லையாம். மேலும், ஒரே இந்திரியமாயிருக்கும் இரண்டு செவிகளிலும் இரண்டு பேர்கள் ஒரேகாலத்தில் சடக்கென்று வேறு வேறு விஷயங்களைச் சொல்வாராயின் ஒருவன் கூறி யதையே அவை அறிகின்றன. மற்றவன் கூறியதை அறிய முடிவதில்லை. ஆகையால், இந்திரியத்தின் தொழில்கள் இந்திரியத்தின் அநுபவமே என்பது பொருந்தாமல் ஆன்மாவிற்கு உரியது என்பதே பொருத்தம் என்பது முடிபாம். இதனால், அந்தக் கரணத்துக்கும் சரீரத்துக்கும் பிராணவாயுவுக்கும் உண்டான தொழில்கள் யாவும் அவைகளுக்கே அநு பவமாவன; ஆன்மாவுக்கு அநுபவமாகா என்பது தவ றாகும். ஆன்மாவிற்கே இந்த அநுபவங்கள் உரியன என்பது பிரசித்தமாம். இச்செய்தியை, மனதியும் மெய் உயிர்ச்செயலும் தனக்கு இலது ஒருவர்க்கு எனத் தெளிகிலே என்ற வரிகள் செப்புவனவாகும். இனி முத்திநிலைபற்றிய செய்திகள் மறுக்கப்படுதலைக் காணலாகும்.

## முத்திநிலை மறுப்பு

சுத்தமான கண்ணாடியினிடத்திலே உருவம் தோன்றுவது போலவே, கர்த்தாவின் திருவருளானது மலம் நீங்கிய ஆன்மாவில் பிரகாசிக்கும் என்று கூறுவார்கள் சங்கிராந்தவாதியர். கண்ணாடியானது பார்த்தவர்களுடைய முகத்தில் உண்டான ஒளியைத் தன்னிடத்தில் கவர்ந்துகொண்டு நிற்கும். அதைப் போலக் கொடுத்ததைக்கொள்ளும் தன்மை ஆன்மாவுக்கு அடுப்பதன்று என்பதே உண்மையாம்.

விறகினிடத்து நிற்குந்தீயை ஆன்மாவினோடுகூடி நிற்கும் அருளுக்கு உவமை ஆக்கிக் கூறுவர். ஆனால், தீயானது தான் பற்றிய கட்டையைக் கெடுத்து ஒழித்துவிடுகின்றது. அப்படி அருளானது தான் கூடிய ஆன்மாவைக் கெடுத்தொழிக்காது. ஆதலால் விறகைச் சுட்டொழிக்கும் தீயினை அருளுக்கு உவமையாக்கிக் காட்டுதலும் பொருத்தமில்லை என்பது உண்மையாகும்.

உப்பளத்தில் போட்ட புல்லும் வைக்கோலும் போலத்தான், அருளோடு கூடிய ஆன்மாத் தன்மை கெடுமேயன்றித் தான் கெட்டொழியாது என்று கூறுதல் உண்டு. இந்த உவமானம் மிகவும் பிரசித்தமாகச் சொல்லப்படுகின்றது சங்கிராந்தவாதிகளால் என்பர். ஸ்ரீ அம்பலவாணதேசிகர் அருளிய சித்தாந்தப்பஃறொடையில், "ஈசன் அழிவிலாச் சத்திநிபாதத்தால் ஒழிய மலம் – உப்பளத்துப் புல்லும் உறும்தீ விறகும் எனச் செப்பும் அருளோடு ஆவி சேர்ந்தழிந்து – கப்பின்றாய் நண்ணும் பசுகரணம் எல்லாம் நசித்து

ஒன்றுய் எண்ணும் சிவகரணமாய் என்றும் கண்ணிய தோர் சங்கிராந்தவாதி சாற்றுவான்" என எடுத்துக் காட்டப்படுகின்றமை காணலாம். மற்றும் சிவஞான போதமாபாடியம் சூத்திரம் 7 அதிகரணம் இரண்டி லும் இந்த உவமை எடுத்துக்காட்டி உண்மை புலப் படுத்தப்படுதல் காணலாகும். இந்த உவமையின் உண்மை சிவஞானபோதம் 8 ஆம் சூத்திரத்து 4 ஆம் அதிகரணத்து 2 ஆம் வெண்பா மாபாடியத்தே தெளிவாய்த் தரப்பட்டுள்ளமையின் ஆங்குக்கண்டு உணர்தல் கூடும்.

உப்பளத்தே கிடக்கநேரிட்ட புல்லானது தன் புறத்தெல்லாம் உப்புப் படியப்பெற்றுத் தான் உள்ளே அடங்கி உப்புச் சுவையே தன் சுவையே ஆய் மட்கிவிடும். வைக்கோல் உட்டுளையுடையது ஆதலால் உப்புநீர் அதன் உள்ளும் சென்று தோய்வ தோடு புறத்தும்படிந்து, இங்ஙனம் உள்ளும்புறம்பும் உப்புமயமாய் ஆகித் தன்மை மாறிடும். ஆகவே, அந்தக்கரணம் புறக்கரணங்கள் சிவகரணமாம் தன் மைக்கு இந்த உவமை காட்டப்படுதல் காணலாம். இதனுல், ஆன்மாப் பசுத்தன்மை நீங்கிச் சிவத்துவம் பெற்றபோது பசுகரணமும் சிவகரணமாதல் தெரிய லாம். அப்போது, புல்லின் தன்மையும், வைக் கோலின் தன்மையும் புறத்தும் உள்ளும் மாறிவிட் டமைபோலவே பசுஞானமும் பாசஞானமும் சிவ ஞானமே ஆகும் என்பது உண்மைப்பொருளாகும். இதுவே இந்த உவமைதரும் மெய்ப்பொருளாகக் கருதப்படவேண்டும் என்க. ஆகவே, புல் பலாலங்கள் சடத்தன எனினும், கொடுத்தது கொள்ளும் தன்மை யுடையனவாம். ஆன்மாவுக்கு அத்தன்மைதானும்

இன்று. மேலும், அஞ்ஞானத்துக்கு ஏதுவாம் கருவி களைச் சிவரூபம் என்று சங்கிராந்தவாதம் சொல்லு கின்றது. சரீரத்தோடு கூடிய ஆசை அடியோடு ஒழிதரவேண்டும். அங்ஙனமில்லாத இம்மாயாசொரு பம் அசுத்தமலமயமாம். இது சுத்தநின்மலமான சிவ சொரூபம் ஆயிற்றென வாயினுற் கூறிக்கொள்வதிற் பயன் ஏதும் இல்லையாம். அப்படியன்று; மாயாகருவி கள் தொன்று தொட்டு வருகின்ற பிறவித் துன் பத்தை நீக்கித் திருவருளை அடைந்து சிவசொரூபம் ஆகுவதற்கு உரியவையாகும் என்றால், அப்போது திருவருளும் மாயையாகிய அஞ்ஞானம் ஆகவேண்டி வரும். சப்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்கிற இவற்ரேடுகூடி அறிந்து வரும் மாயாகருவிகட்கும் திருவருட்கும் வெகுதூரம் உண்டு என்பதே தெளி வாம். இங்ஙனம் கூறுவதனுல், பசுபாச ஞானங்களை அடியோடு தன்மை கெடுத்தாலன்றிச் சிவஞானத் திருவருள்வாய்ப்பு எய்தப்பெறுதல் இன்றெனப் படும். அவ்வாறன்றிச் சிவசொரூபமாய் விளங்கப்பெற் றுள்ளோம் என்று சொல்லுமளவும் அஞ்ஞானம் உள்ளமை தேறப்படும் என்ப. இதுபற்றியே, எத்தி றத்தினது அருள் இயம்புக என்றுள்ளார் ஆசிரியர். இக்கருத்து மிகவும் கஷ்டப்பட்டு அநுபவபூர்வமாக அறியப்படவேண்டிய ஒன்ருகும்.

இந்திரியங்களைவிட்டால் பசு, பாச ஞானங்கள், ஜீவியாமற்போமே! அப்படி ஆன்ம அறிவு ஜீவியாமற் கெடுமாகுல் திருவருளை எப்படி அறியமுடியும்? ஆகையால், பசு பாச ஞானங்களைக்கொண்டே திரு வருளை அறியப்பெறவேண்டும். அப்படித் திருவருளை அடையப்பெற்ருல், எங்கும் நிறைந்தவனுகலாம்;

இன்றேல் இயலாது என்று சங்கிராந்தவாதம் செப்பக் கூடும். இதனை விளக்குவது எளிதன்று. ஆன்ம சொரூபமும் இன்றிச் சிவசொரூபமும் இன்றி இரண் டுங்கெட்டாறுகை இருப்பவர்க்கு முற்றிலும் சிவ சொரூபத்தியல்பை எப்படி எடுத்துக்கூறமுடியும்? அங்ஙனம் கூறப்புகின் அது இன்பத்தை அநுபவித்து அறியமாட்டாத அலிக்கு, ஒருவனும் ஒருத்தியும் தாம் கூடி அநுபவித்த இன்பத்தியல்பை எடுத்துச்சொல்லு வதுபோல் ஆகுமே அன்றி உணர்த்தற்கு இயலாது. இருப்பினும், சீவகரணங்கள் யாவும் சிவகரணமாகப் பெற்ற திருவருட்செல்வர்கள் சொல்லியுள்ள வாச கங்களை எடுத்துச் சொல்லுவதனால் அந்த நிலையின் இயல்பு எத்தகையதாகும் என ஒருவாறு தெரிதல் கூடும். அத்தகைய பாடல்கள் சிலவருமாறு காண்க.

"நிறைந்தெங்கும் நீயேயாய் நின்றாலும் ஒன்றின்
மறைந்(து)ஐம் புலன்காண வாராய்! — சிறந்த
கணிஆரும் தண்சாரல் காளத்தி ஆள்வாய்
பணியாயால் என்முன் பரிசு"

இது நக்கீரதேவநாயனார் அருளிச்செய்தது ஆகும். கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதியில் உள்ளது. இந்நூல் இவ்வாதீனத்து 46-ஆம் வெளியீட்டில் உரையுடனிருப்பதாகும். இதனை அடுத்தது திருவாசகத் துள்ள பாடலாகும்.

"கரணங்கள் எல்லாம் கடந்து நின்ற கறைமிடற்றன்
சரணங்கள் சென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென்(று) இவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

இச்செய்யுள் திருவாதவூரர் அருளிச்செய்ததாகும்.

" பையஞ் சுடர்விடு நாகப்
பள்ளிகொள் வானுளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக்
கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப்
புகழ்புரிந் தார்க்கருள் செய்யும்
ஐயஞ்சின் அப்புறத் தானும்
ஆரூ ரமர்ந்த அம்மானே "

இது நான்காந்திருமுறைக்கண் உள்ளது; திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியது ஆகும்.

மேலே கூறப்பட்ட பாடல்கள் திருவருட் செல்வர்களாவார் அநுபவித்து உரைத்தவை ஆகும். இந்த நிலைமையின் உண்மையினைத் திருவருள் வயப்பட்டவர்களாம்போதுதான் உணர இயலும் என்க. அவ்வாறு இன்றி, மாயைக்குள் மயக்கப்பட்டுவரும் பொருள்களை அறிவது போன்ற ஆசைகொண்டு காணத்தக்கதாகாது என்பதே சித்தாந்தமாம்.

இறுதியாக, அருளும் ஆன்மாவும் கூடிய இடத்து இரண்டும் ஒன்றாய்விடும் என்று கூறுதலும் பொருத்தமில்லை. இரண்டு முதல்கள் கூடி ஒருமுதலாக ஆகிவிடுவது என்பது இயலாததொன்றாம். அப்படிக் கொண்டால் முப்பொருள்களுண்டெனஒப்புக்கொள்ளப்பட்டதில் ஒருபொருள் கெட்டொழிந்ததாகுமாதலால் பிரமாணவிரோதப்படுதலே அன்றி உண்மை முத்தி இன்னதென்ற நுட்பமும் அறியப்படாமை காட்டிவிடும்; ஆதலால், இவ்வாறு பற்பலவிதமாக

முன்னுக்குப்பின் மலேவாகவும் உண்மை அறியா மலும் கூறும் சிவசங்கிராந்தவாதத்தைக் கைவிட்டு மேலும் சொல்லப்படும் உண்மையைப் புத்திபண்ணிக் கேட்டலே சிறப்புடைத்தாகும் என்க. இதுகாறும் சிவசங்கிராந்தவாதக் கொள்கைகள் ஆராயப்பட்டு உண்மை புலப்படுத்தப்பட்டது. இனி ஈசுவர அவிகார வாதம் பற்றி ஆராயப்படுவதாகும்.

சிவசங்கிராந்தவாதி நிராகரணம் முற்றிற்று.

## செய்யுள்—15.

## VII—அ

### ஈசுவர அவிகாரவாதி சங்கற்பம்

### பெத்தம்

பல்துளேக் குடத்தின் உள்விளக்(கு) ஏய்ப்ப
அறி(வு)உள ஆகும் உருஉறும் உயிர்கள்
கண்ணுல் ஓசையும் கரணமும் கருத
ஒண்ணு(து) என்னும் உணர்(வு)உடை மையினுல்
அவ்வப் புலன்கட்(கு) அவ்வப் பொறிகள்
செவ்விதின் நிறுவிச் சேர்ந்தவை நுகரும்;

### முத்தி

மூல மலத்தின் பாகம்வந் துதவுழீஇ
இருள்தரும் இயல்புக்(கு) ஒருபொருள் கவரத்
தீபம் வேண்டும் ஆனவா போல
மோகம் ஆ(ம்)மலம் போக ஞான
விளக்(கு)அரன் அருளால் துளக்(கு)அறப் பொருந்தி
நீர்நிழல் அனேய சீர்பெறு கடவுளேச்
சலம்இலன் ஆகிச் சார்ந்தவர்க்(கு) என்றும்
நலம்மிக நல்கும் நாதனே அணேந்து
பூழி வெம்மை பொருந்தா(து) உயர்ந்த
நீழல் வாழும் நினேவினர் போலத்
திருவடி நீழல் சேர்ந்து
கருஉறு துயரம் களேந்(து)இருந் திடுமே.

## பொழிப்பு

*முன்பு உரைக்கப்பட்ட வழியிற்கொள்க.*

## விளக்கம்

நாம் முதற்கண் ஈசுவர அவிகாரவாதியின் கொள்கை இன்னதெனத் தொகுத்துத் தெரிவோம். அது வருமாறு: பல துளைகளை உடைய குடத்திலே ஏற்றிய தீபம்போல நவத்துவாரமுடைய உடம்பில் ஆன்மா அறிவாய் நிற்கும். அப்படி நிற்பினும் அந்த அந்தப் பொறிகளளவாய் அவ்வவற்றைக் கூடி அறியும். அந்த ஆன்மா, மலபரிபாகமும் சத்திநிபாதமும் சேர்ந்தபோது முதல்வன் திருவருளால் ஞானத்தைப் பெற்று, வெய்யிலில் திரிந்தவனொருவன் மரநிழல் அடைந்து ஆறுவதுபோல; அம் முதல்வன் திருவடி நிழலை அடையப்பெறும். இப்படிக் கூடிய பின்னர் உயிரானது முதல்வனுடைய உபகாரத்தை விரும்பா திருப்பதாம். உயிர் முதல் உபகாரத்தை விரும்புமாயின் முதல்வனும் பிறிதொன்றன் உபகாரத்தை விரும்புவன். இந்திரியங்கள் உயிர்கொண்டு அறிவதனாலே உண்டாகும் பயன் உயிர்க்கே ஆகின்றது; இந்திரியங்களுக்கில்லை. அப்படியே முதல்வன் துணைகொண்டு அறிதலால் ஆம் பயன் உயிர்க்கின்றி முதல்வனுக்கே ஆம். உயிர்களுக்குப் பல்வேறுபட்ட அறிவுகள் நிகழ்கின்றன. அது முதல்வன் உணர்த்தும் வேறுபாட்டால் நிகழுமாதலின் நிர்விகாரி என்பதனோடு முரண்படும். உயிர், இறைவன் அறிவிக்க அறியும் தன்மை இன்றித் தானே அறியுந்தன்மை உடையது என்பதாம்.

## பெத்தநிலை

உயிர் உடம்புக்குள் இருப்பது. உடம்பு ஒன்பது வாயில்களை உடையது. அவ்வாறிருப்பினும் உயிரானது குடத்திலிருக்கும் ஓட்டைகளால் நீர் ஒழுகி ஓடிவிடுவதுபோல ஓடிவிடாது. உள்ளே வியக்கத் தக்க வகையில் தங்கி இருப்பதாம். இந்த வியப்பினை, "வருந்தும் உயிர் ஒன்பான்வாயில் உடம்பில் பொருந் துதல் தானே புதுமை" என்ற நன்னெறிப்பாடல் கூறும். ஆதலால் நீர்போல்வதன்று. ஒரு குடத்துள் விளக்கு எரிந்து ஒளியோடிருக்குமாயின் அவ்வொளி குடத்தில் எவ்வளவு துவாரங்களிருப்பினும் அவற் றின் வழியே ஒழுகி ஓடிவிடாது. அப்படியே, ஆன் மாக்கள் அறிவாயிருத்தலால் அவை இவ்வுடம்பினுள் வியக்கத்தக்க முறையில் தங்கி இருக்கின்றன. அநித்த மான ஞானத்துக்கிடனுதல் சீவான்மாவின் சிறப்பிலக் கணம் எனத் தருக்கநூல் கூறுதலும் காணலாகும். இதனால் ஆன்மா அறிவாயிருப்பது என்பது கொள் கையாயிற்று. பல்துளைக் குடத்தி னுள்விளக்கு ஏய்ப்ப அறிவு உளதாகும் உருவு உறும் உயிர்கள் என்றவரி இதனைத் தெரிவிப்பதாம்.

உடம்பினிடம் ஐம்பொறிகள் உள்ளன. அவற் றுள் அறிதொழிலால் சிறப்புடையது கண். அது சென்றறியும் சிறப்புடையது; என்றாலும், உருவத் தைத்தான் கண்டறியும். ஓசை, வாசனை முதலிய வற்றை அறியாது. இந்த விஷய ஞானம் ஆன்மாவுக் குள்ளது. அதாவது, இன்னுனைக் கொண்டு இன்ன தைச் செய்வித்துக்கொள்ளவேண்டும் என்று தெரி கின்ற தலைவனைப்போலவே, கண்ணைக் கொண்டு

உருவத்தையும், காதைக்கொண்டு சத்தத்தையும், இப்படியே அவ்வப் பொறிகளைக்கொண்டு தனக்குக் கொள்ளவேண்டிய விஷயங்களைக் கொள்ளவேண்டுமென்ற அறிவு ஆன்மாவிற்கு உள்ளதாம். ஆதலால், ஆன்மாவானது, பஞ்சேந்திரியங்களையும் மாறுபாடு இன்றி நிறுத்தி அவைகளினிடத்தே பொருந்தப்பட்டு வரும் விஷயங்களைப் புசித்திருக்கும். இதுவே பெத்த நிலையாம் என்பது இந்த ஈசுவர அவிகாரவாதக் கொள்கை எனப்படும்.

## முத்திநிலை

இப்படிக் கன்மத்தைப் புசித்துக்கொண்டே வருகையில் ஆணவம் எனப்படும் மலம் நீங்கும், பரிபாகம் ஏற்படும். அப்போது, இருட்டுவீட்டில் உள்ள ஒரு பொருளை எடுத்துவரக் கருதுபவன், ஒரு விளக்கை முன்னிட்டுக் கொண்டுசென்று அந்தப் பொருளை அடைவதுபோல, அஞ்ஞான இருள் எனப்படும் மலமானது நீங்க, ஞானமாகிய விளக்கைச் சிவனுடைய அநுக்கிரகத்தால் நிலைபெற அடையப் பெறுவான்.

தண்ணீரானது, 'ஆளுக்கு ஏற்றபடி ஆசனம் போடுவ'தாகிய பக்ஷப் பிரதிபக்ஷம் உடைய பொருள் அன்று. அப்படியே நிழலும் தன்னடியில் தங்கும் எவருக்கும் பக்ஷபாதமின்றி உதவும் இயல்புடையது. இந்தப் பொருள்களைப் போலவே வேண்டுவோர் வேண்டாதோர் இல்லாது கருணைபுரிவோன் கடவுள் ஆவான். அவனே கர்த்தா எனப்படுவன். என்றாலும், தன்னடைந்தார்க்கு மிகுதியாக நன்மை தருபவன் ஆவன். நச்சினார்க்கு இனியவன். ஆதலால் அத்தகைய

இறைவனடியை ஆன்மாவானது தான் அடைந்த ஞானத்துணையால் நண்ணும். இதுவே இறைவன் திருவடிநிழல் அடைதல் ஆகும்.

மணல்வெளியிலே நடுப்பகலிலே வழி நடந்தவர்க்கு அந்த வழியிலே பொடிச்சூடு நீங்கத்தக்கதான உயர்ந்த மரத்தின்நிழலிலே வந்து பிரியத்தோடு தங்கியிருக்கும் நிலேவே இருக்கும். அப்படியே ஆன்மாவும் கர்த்தாவின் திருவடிநிழலைப் பொருந்தித் தனக்குப் பிறப்பும் இறப்புமாகிய துக்கம் யாவும் நீக்கிக்கொண்டு இருக்கும். இவை, முத்திநிலை பற்றிய கொள்கை ஆகும்.

**ஈசுவர அவிகாரவாதி சங்கற்பம் முற்றிற்று.**

## செய்யுள்—16.

## VII—ஆ

## ஈசுவர அவிகாரவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

இருந்த(து)உன் கேள்வி திருந்திடும் உயிர்கள்
அறி(வு)எனில் வாயில் பொறிபுலன் என்னே
மற்(று)அவை பற்றி உற்(று)அறிந் திடுதலின்
அறி(வு)என வழங்கும் உயிர்என உரைத்தல்
காணும் கண்ணினன் கைகொடு தடவிப்
பூணும் பொருளின் பெயர்பல புகறல்
என்னும் கிளவி தன்னொடு தகுமே.
அவ்வப் புலன்கட்(கு) அவ்வப் பொறிகளைச்
செவ்விதின் நிறுவலின் அறி(வு)எனச் செப்பினை
அறி(வு) இலாமை கண்டனம் அணைபுலற்கு
பொறிகள் ஏவலின் அறிவொடு பொருந்தில்
கண்ட(து)ஓர் பொறியால் கொண்டிட வேண்டும்
உதவிய(து) ஒன்றால் கதுமென இயற்றினர்
உண்டோ என்னில் கண்டனம் மேல்நாள்
கடவுளின் கடிமலர் முடுகிய மதனன்
அங்கம் அனங்கம் தங்கிடக் கிடந்தது
வையின் திரளில் செய்ய சிறுபொறி
மாட்டி மூட்டின(து) அன்றே மீட்டும்
தேன்அமர் தவிசின் நான்முகன் உச்சி
அறுத்ததும் கருவி பொறுத்ததோ அன்றே

ஈசன(து) இயல்பு பேசுதல் தவிர்க
காழி மாநகர்க் கவுணியர் கடவுள்
ஞான மாகிய நல்பதி கங்கள்
எழுதுறும் அன்பர்தம் இன்புறு மொழியால்
களிறென அணைந்த கல்மனப் புத்தன்
முருட்டுச் சிரம்ஒன்(று) உருட்டினர் அன்றி
வாய்ந்த வாள்ஒன்(று) ஏந்தினர் இலரே
என்றதும் ஈர்வாள் கொன்ற(து)என் பதுபோல்
தனித்துணை அருளால் துணித்தனர் என்பர்
ஆதலின் வாயில் அளவினில் அறிதலில்
ஏதம்இல் அறி(வு)உயிர்க்(கு) எய்துதல் இலதே

## முத்தி மறுப்பு

இருட்கு விளக்(கு)ஒன்(று) ஏந்தினர் போல
மருட்கு ஞானம் மன்னுதல் உளதே
என்றனை கருவிகள் யாவும் அசேதனம்
துன்றிய உயிரும் துரியத் தன்மையன்
ஆதலின் அந்தர் அனைவரும் கூடித்
தீதற அருநெறி தெரியும்என் றற்றே
நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்
சேர்ந்தவர்க்கு இன்பம் வாய்ந்திடும் என்றனை
பாதவம் என்றும் சேதனம் இன்மையின்
இளைத்தோர் வம்மின் என்பதும் துன்பம்
விளைத்தோர் தம்மில் வெறுப்பும்ஒன் றிலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்
வெய்ய பூழியின் உள்உற அழுங்கி
ஆற்றுதல் இன்றி ஆ(று)இயங் கினர்முன்

தோற்றிடும் என்று சொல்லவும் இலதால்
இவ்வகை கடவுட்(கு) இயம்புதல் தவறே
பாச ஞானப் பழிவழி ஒழிக
ஈசன(து) அருள்வழி இயம்புவன் கேள்மதி.

## பொழிப்பு

*நூல் துணைகொண்டறிக.*

### விளக்கம்

### பெத்தநிலை மறுப்பு

ஈசுவர அவிகார வாதியானவர், சித்தாந்தியை நோக்கியும் பிறரை நோக்கியும் தாம் கூறியகொள்கை தான் எவ்வகையாலும் குற்றமில்லாதது என்று சிறப்பித்துக் கூறினர். அதுகேட்ட சித்தாந்தியார், அக்கொள்கையில் உள்ள குறைபாடுகளை அவிகாரவாதி கூறிக்காட்டிய உவமைகளைக்கொண்டே அமைதியாகமறுக்கலுற்ருர். அம்மறுப்புரைகள் வருமாறு;- ஆன்மா அறிவோடு உள்ளது; அறிவே ஆகும் என்று கூறிஞல், அறிவு எனப்படுமது நின்ருங்கு தெரியும் இயல்பினதாகும். அதற்குத் துணைகள் தேவை இல்லை. ஆகவே, ஆன்மாக்கள் அறிவோடும் கூடியிருப்பனவாஞல் சப்தம் முதலான விஷயங்களை அறிவதற்கு இந்திரியங்களின் உதவி அதற்குத் தேவை இல்லையாகும். ஆஞல், ஆன்மாவானது ஏதொன்றை அறிவதற்கும் இந்திரியங்களைப் பொருந்துவதஞல், தானே விஷயத்தை அறியும் திறனுடையதன்று எனத் தெரிகிறது. ஆகையிஞலே, அறிவு என்று கூறியமை பொருந்தாது. எப்படி எனில், கண் இரண்டும் நன்ருகப் பார்க்கமுடிந்த பார்வையுடையான் ஒருவன்,

ஒருபொருளைக் கண்டறிவதற்குக் கைகளால் தடவி அறியவேண்டிய அவசியமிராது. கைகளால் தடவி யும் தட்டிப்பார்த்தும் பண்டங்களின் பெயர்களைச் சொல்லுவானாயின் அவன் கண்தெரியாத குறைபாடு உடைய குருடன் என்றே சொல்லப்படுவன். இப் படித்தான் உள்ளது அறிவாயுள்ளது ஆன்மா என்று அதற்கு லக்ஷணம் சொல்லிவிட்டு அது இந்திரியங்களைப் பொருந்தி விஷயங்களை அறியும் என்று சொல்வது.

ஒருவேளை, விஷயங்களை அறிய உதவும் கருவிகளை அதாவது பொறிகளை அந்த அந்த விஷயங்களை அறிய வேண்டிய தன்மைக்கு ஏற்ப மாறுபாடு இல்லாமல் நிறுத்தி அறிவதால் ஆன்மாவை அறிவு என்று கூறி யிருக்கலாம். இப்படிச் சொல்வதே ஆன்மாவுக்கு அறிவுக்குறை இருப்பதைத் தெளிவுறுத்துமன்றே.

தான் அறிந்துகொள்ள விரும்பும் விஷயத்துக்கு ஏற்ற புலனுடைப்பொறியை ஏவி ஆளுவதனால் ஆன்மா அறிவுடையதுதான் என்று கூறக்கூடும். அதுவும் சரியன்று. 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்பதுபோல எந்த இந்திரியம் வந்து பொருந்தினும் அதனைக்கொண்டு தனக்கு விருப்பமுள்ளதை ஆன்மா அறியவல்லதாய் இருப்பின் அதனை அறிவைப் பெற் றிருப்பதென்னலாம். அப்படிச் செய்துகொள்ளும் ஆற்றல் ஆன்மாவிடம் இன்மையால் அதனை அறி வோடு கூடியது என்பது குறைபட்ட கொள்கை ஆகும்.

உலகத்திலே அறிவுடையார் எவரும் சப்தம் முதலியவற்றை அவ்வவற்றிற்கு உரிய இந்திரியங் களைக்கொண்டே அறிவர். ஓர் இந்திரியங்கொண்டு

இன்னொரு இந்திரியத்தின் செயலை நிகழ்த்தமாட்டார். இந்த இயற்கைநெறியே ஆகும். இதுகொண்டு ஆன்மா அறிவோடு கூடியதன்று என்பது பொருந்தாது என்று சொல்லி மறுக்கக்கூடும். ஆனால் அறிவு என்பதன் இயற்கை, எதையும் ஏதுகொண்டும் செய்யும் வன்மை உடைமையேயாகும். அப்படி ஒரு பொறிகொண்டு வேறொரு பொறி செய்யக்கூடிய காரியத்தை நிகழ்த்தியமைக்குச் சான்றும் உள்ளது. முன் காலத்திலே, மன்மதன் அறியாமையினால், இறைவன் யோகநிலையைக் கலைப்பதற்காக எண்ணி மணம் மிக்க மலர்க்கணைகளை அவன்மீது எறிந்தான். அவனைச் சிவபெருமான் அங்கம் அனங்கம் ஆக்கிவிட்டான். அப்படி அவன் சரீரத்தைச் சாம்பராகச் செய்வதற்கு அவன் வைக்கோல்திரளைக் கைகளால் அவன்மீது குவித்துச் சிவந்த தீப்பொறி வைத்துக் கொளுத்தினானிலன். கண் என்கிற பொறிகொண்டே எரித்தொழித்தான். எனவே பார்த்தற்காம் பொறிகொண்டு எரித்தலாம்செயலை அவன் பேரறிவுடைமையால்செய்தான் என்றுதான் சொல்லவேண்டும்.

மேலும், அச்சிவபிரான், தாமரைத் தவிசுடையோனாகிய பிரமனைத் தண்டிக்கவேண்டியகாலை, அவனுடைய நடுத்தலையைத் தன் கைந்நகம்கொண்டே களைந்திட்டானாவன். வாள் என்னும் கருவியைக் கையில் தாங்கிச்சென்று துண்டித்தானிலன். இங்ஙனம் அவன் புரிந்த செயலானது அறிவாளிக்குக் கருவியின் துணையும் தேவையில்லை என்பதைக் காட்ட வல்லதாம். ஆன்மா கருவியின் துணையை நாடுவதாலேயே அறிவுக் குறைவுடையதென்று ஏற்படுகின்றது என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும்.

சிவபெருமான் கடவுளாதலால் இப்படிச் செய்ய வல்லன் ஆனுன்; மனிதர் யாரும் இப்படிச்செய்திலரே என்று கூறிக் கேட்கலாம். அதற்கும் சமாதானம் உள்ளது கேட்டிடுக.

சீகாழியிலே கவுணியர் கோத்திரத் தலைவராக உள்ள திருஞானசம்பந்தரால் அருளிச்செய்யப்பட்ட ஞானமாகிய நல்ல திருப்பதிகங்களை எழுதப்பெற்ற வன்மைவாய்ந்த *சம்பந்தசரணுலயருடைய வாக்கினுலே, மதயானைபோல எதிர்த்துவந்த புத்தனுடைய முருட்டுச்சிரம் உருண்டு விழுந்தது அறிந்த செய்தியாயிற்றே. இந்த நிகழ்ச்சியிலும், கூரிய வாளாயுதத்தைக் கையில் தாங்கி அவர் அங்ஙனம் செய்தாரிலர். ஆதலால், ஆன்மாக்கள், கண்டதோர் பொறிகொண்டும் எச்செயலும் அறிவு அடையப்பெறின் ஆற்றவல்லவாம் என்று தெரிதல் கூடும். இதனுல்,அறிவு, பிறிது துணையின்றி எதுவும் செய்யும் என்பது விளங்குகின்றது என்னலாம்.

ஒருவனை ஒருவன் வாளால் துணித்தால் உலகினர் வாள் துணித்தது என்று பேச்சுவழக்கில் சொல்வர்; என்ருலும் உண்மையில் வாள் துணித்தது ஆகாது. அவ்வாளைக்கொண்டு ஒருவன் துணித்தான் என்றே கருதவேண்டும். அதுபோலவே, கர்த்தாவினுடைய

---

* இவர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கு அம்மான். இவர் போதிமங்கைக்குச்செல்லும் நம் சுவாமிகளைத் தடுத்த புத்தநந்தி தலையில் இடிவிழும்படிச் செய்தவர். பிள்ளையாருடன் வாதுக்குவந்த சாரிப்புத்தனை வாதில் வென்றவர். திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திருமுறையினை எழுதியவர்.

அநுக்கிரகத்தினுல் புத்தனுடைய தலையைத் துண்டித்தனர் என்று பெரியோர் பேசுவர். ஆகவே இறை அருளின் துணையால் இது நிகழ்ந்ததல்லால் ஆன்ம அறிவால் இது நடைபெற்றதன்ரும். இதனுல், இந்திரியங்களின் எல்லையளவில் நின்று ஒரு காரியத்தை நிகழ்த்தும் தன்மை ஆன்மாவுக்கு இருத்தலால் குற்ற மற்ற அறிவு ஆன்மாவுக்குண்டு என்பது பொருந்தாது. திருவருள் அறிவிக்க ஆன்மா அறிவதாகும் என்பதே பொருந்தும்.

## முத்திநிலை மறுப்பு

இருளில் உள்ள பண்டத்தை எடுக்க விரும்பினோர், கையில் ஒரு விளக்கைப் பிடித்துக்கொண்டு எடுப்பர். அதுபோலவே, ஆன்மாவின் அஞ்ஞானமாகிய இருள் நீங்குவதற்கு ஞானமாகிய விளக்கு நிலைபெற இருக்குமாறு கருத்தா அருள்புரிவன் என்பது அவிகாரிவாதமாம். இது சரியன்று. குருடர்கள் பலர் தமக்குள்ளே கூடிக்கொண்டு, நல்லதொரு வழியைக்கண்டு அந்தவழியிலே போய் ஓர் ஊரை அடைந்தார்கள் என்பது எவ்வளவு பொருத்தமானதாகாதோ அவ்வளவு பொருத்தமற்றதாம் மேற்கூறப்பட்ட வாதம். தத்துவங்கள் யாவும் சடம். ஆன்மாவோ ஆணவமலத்தில் செறிப்புண்டவன். இப்படிப் பாசத்துக்குள்ளே அழுந்திக்கிடப்பவனுக்கு திருவருள் எப்படி வந்து வாய்க்கப்பெறும். அப்படிப் பெற்ருலும் அது நிலைக்குமா? கருவிகளோடு கூடியிருக்கையில் அவை கூடுதலும், பிரிதலுமாகிய அவத்தைப்படுமேயன்றித் திருவருட்கு இலக்காதல்

இயலாது. "திருவருட்கு அயலுமாய்ப் புன்மை யேன் ஆவன் அந்தோ" என்பர் இந்நிலையினைப் பெரியோர்.

நீரைப்போலவும் நிழலைப்போலவும் பக்ஷபாதம் அற்ற தன்மை உடையவன் இறைவன். ஆதலால் தன்னைக்கூடிய பக்குவமுற்ற ஆன்மாக்களுக்குப் பேரின்பம் உண்டாகும்படி அவன் அருள் புரிவன் என்று சங்கற்பம் கூறுவர் அவிகாரவாதியர். இதுவும் பொருத்தமற்றதே. மரம் அறிவில்லாதது. அறிவு குன்றியதெனினும் சரியே. அது வெயிலால் இளைத்த வரைத் தன்பால் வருமாறு ஒருபோதும் அழைப்ப தில்லை. "மரம் பழுத்தால் வெளவாலை வா என்று கூவி இரந்தழைப்பார் யாவரும் அங்கில்லை" என்ற இடத்தும் இக்கருத்திருத்தல் காணலாம். ஆகவே, மரம் ஒருவனது இளைப்புக்கண்டு இரங்கி அழையாது. "மாந்தர் குறைக்குந்தனையும் குளிர்நிழலைத் தந்து மறைக்குமாம் கண்டீர் மரம்" என்பதனால் தன்னை வெட்டினவரிடம் வெறுப்புக்காட்டுதலும் மரத்தின் இயல்பு அன்று. ஆதலால், நிழல்தரு தருவினிடம் வெயிலால் வருந்தியவனே செல்லவேண்டியுள்ளது. ஆகவே, இறைவன், தானாக அருள்செய்வன் என்பது காட்டுதற்கு இந்த மரத்துவமை சரியன்றாம். பொடி வழியில் கால் கொப்புளிப்பவும் கொப்புளங்கள் உடைந்து வருந்தவும் வழிநடந்தவன் எதிரிலே எந்த மரமும் சென்று அவனுடைய விசனத்தைத் தீர்த்த தில்லை. ஆதலால், பாசம் நீங்கப்பெறாமலே திரு வருளை இறைவனிடம் எதிர்பார்த்தடைதல் இயற்கை யன்றாம். கர்த்தாவையும் இந்த நிலையிலிருந்து கொண்டே அவிகாரவாதத்துக்குள்ளாக்கிக் கூறுதல்

சரியன்றாம். ஆகையால் திருவருளின்வழி எப்படிப் பட்டதென்று விளக்கமாகக்கேட்டுத்தெரிதலே நன்றாம். சூரியன் ஒளியின் துணையால் கண் வேறுவேறு விதமாக அறிந்து விகாரப்படுகிறது. ஆனால் சூரியன் விகாரப்படமாட்டான். ஆகவே, முதல்வன் விகாரமின்றியே நின்றாலும், அவன் அருள் (சத்தி) சங்கற்பத்தினால் உயிர் வேறுவேறு விதமாய் உணர்வுறும் என்பதே இறைவன் நிர்விகாரி என்பதன் திரண்ட கருத்தாகும் என்க.

ஈசுவர அவிகாரவாதி நிராகரணம் முற்றிற்று.

## செய்யுள்—17.

## VIII—அ

## நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம்

### பெத்தம்

புவனம் யாவையும் புனிதன(து) உருவாம்
சிவமும் சத்தியும் எனத்தெளி அவற்றுள்
அசேதனம் என்றென்(று) அறைதற் கில(து)அது
சேதனன் நுகர்பொழு(து) இரண்டும்ஓர் திறத்தே
இதுஎனும் ஒன்றை அதுஆய்ப் படுத்துப்
பொதுமையில் நிற்கும் போதம்என்(று) அறிக
பொன்பணி பேதம் புரைவழி ஒருவழி
நல்பொனில் திகழ்(வு)என் நயப்ப(து)ஒன் றன்றால்
ஆவதும் ஆகா(து) ஒழிவதும் எனும்இப்
பாவகம் உண்மை பாரா தோர்க்கே
பாரா தோர்எனப் பல்உயிர் பகர்தலின்
ஆராய்ந்(து) உரைக்கின் அவைபிற அல்ல
பலபல பேதம் இலஎன் போரும்இல்
கண்ணின(து) ஒளியைக் கண்ணின(து) எனில்அது
திண்ணிய இருளில் செறிபொருள் தெரித்ததும்
இன்மை மின்மினி எனஇரு கண்மணித்
தன்மை தானும் தாவில(து) அதனால்
கண்ணின(து) உருவும் அதில்கதிர் ஒளியும்
நண்ணரும் சத்தி சத்தர்கள் நடிப்பே
உல(கு)ஏழ் எனத்திசை பத்தென ஒருவன்

பலவாய் நின்ற படிஇது என்றும்
ஊனாய் உயிராய் உணர்வாய் என்றும்
மானக் கண்ணே மணியே என்றும்
தாமே தாமாய்ச் செய்தனர் என்றும்
நாமே சிவமாய் நண்ணினம் என்றும்
காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வும்
ஓயா துண்போன் தானே என்றும்
அறிவோன் தானும் அறிவிப் போனும்
அறிவாய் அறிகின் றோனும் அறிவுறு
மெய்ப்பொருள் தானும் வியந்(து)இது எனப்படும்
அப்பொருள் யாவும் அவனே என்றும்
தாய்தலைப் பட்டங்(கு) ஒன்றாய்த்(து) என்றும்
ஏதம(து) அறநான் கெட்டேன் என்றும்
இன்னும் இன்னும் இறையோன் அளித்தவை
பன்னில் எண்ணரும் பான்மைத்(து) ஆதலின்
தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோன்
ஒருபொருள் இவ்வியல் உவப்(பு)என உணர்க
நுகர்பொருள் சத்தி நுகர்வோன் சத்தன்என்(று)
இகல்அறும் உணர்வுவந்(து) எய்துதல் அரிதே;

## முத்தி

நான்அவன் எனும்இது நவைவழி நல்வழி
தான்அவன் ஆகை இதுசா யுச்சியம்
இத்திறன் தெளிய உய்த்திடும் அளவும்
யாதொரு வகையில் நீதிஅது ஆகத்
தான்அறி வழியே தலைநின்(று) என்றும்
ஊன்உயிர் சிவத்தில் ஒடுங்கிட நடத்தி

மூடும் முழுமலம் வீடும் காலைக்
கருவிகள் அளவில் புரிதரும் அறிவு
சாக்கிரம் கனவு நீக்கம்இல் சுழுனை
துரியம் என்றிவை பயில்தரும் அறிவு
துரியா தீதம் திரியாத் தன்மையில்
இறைஅருள் உதவும் கறைஅற மாறி
அறிவே ஆகும் பிறியாக் கருவிகள்
நிறைமுதல் அவத்தையில் அறிவில(து) ஆகத்
துரியா தீதத் தோற்றம்
திரியா ததுநல் சிவகதித் திறனே.

## பொழிப்பு

*முன்புபோல் தெரிக.*

## விளக்கம்

இதுகாறும் அகச்சமயத்துப் பிரிவுகளில் ஐந்து சமயங்களின் சங்கற்பமும் அவற்றிற்கான நிராகரணங் களும் கூறப்பட்டன. இது அப்பகுப்புட்பட்ட ஆறு வது சமயம் ஆகும். இதன்பெயர் சிவாத்துவிதசைவம் என்பதாகும். இதற்கே வேறு ஒரு பெயர்தான் நிமித்தகாரண பரிணமவாதம் என்பது. சிவாத்துவித சைவர், நிமித்தகாரணமாகிய முதல்வன் மாயை யோடும் கூடி முதற்காரணமாகப் பரிணமிப்பன் என்னும் கொள்கையுடையவர் ஆவர். ஆதலால் இச் சிவாத்துவித சமயமானது இவ்வாறு, நிமித்தகாரண பரிணமவாத சமயம் எனப்படுகிறது. இந்த உண்மை சிலருக்குத் தெரியாமலும் இருப்பதுண்டு. அங்ஙனம் தெரியாதவர்கள் சிவாத்துவிதம் என்பது சுத்தசைவம்

என்று மயங்கிக் கூறுவர். சுத்தசைவம் என்பது சித்தாந்த சைவத்தின் வேறல்ல எனினும் சில நுட்ப மான கொள்கைகளில் வேறுபாடுடையது. ஆதலால் கருத்து வகைப்படுத்தின் சுத்த சைவம் சித்தாந்த சைவத்துள் அடங்குவதொரு சமயம் ஆகும். இது பற்றியே, சிவப்பிரகாச நூலில், "நிலவுல காயதாதி நிகழ் சிவாத்துவிதாந்தத்துட் குலவினர் அளவளாவாக் கொள்கையதாகி" என்று ஏனைய மதங்களை எடுத்தோதி விலக்கிவிட்டுச் சுத்தசைவத்தை அங்ஙனம் விலக்கா தொழிந்தார் இந்நூலாசிரியர் என்ப.

சித்தாந்த சைவம் என்பது அகச்சமயம் முதலிய அனைத்திற்கும் மேலானது. அகச்சமயங்களெல்லாம் தன்பால் ஏகதேசத்தில் அடங்க நிற்பது. அது வேதம் ஆகமம் என்ற இரண்டாலும் தலையான சன்மார்க்கம் என்று புகழப்படும். இது சுத்தாத்துவித சித்தாந்த சமயம் என்று வழங்கப்படுவதாகும். இது முப்பத்தாறு தத்துவங்கட்கும் அப்பாற்பட்டதான உண்மை முத்தி நிலையை அடைவிக்கும் சிறப்புடைய சமயம் ஆகும். இவை எல்லாம் தெரிதரும்பொருட்டே இந்நூலில் அகச்சமயங்களில் ஆறுவதாகச் சிவாத்துவிதம் எனப் படும் நிமித்தகாரண பரிணாமவாதம் பற்றிப் பேசப் பட்டு, இறுதியில் சித்தாந்த சைவத்தோடு கருத்து வகையால் ஒன்றுபடுவதாகிய சுத்தசைவம் பற்றித் தனியாகப் பேசப்படுகின்றதென்க. சுத்த சைவத்தை யும் தன்னுட்கொண்டு விளங்குவதே சித்தாந்த சைவம் என்பது தெளிவாகத் தெரியவேண்டும். இனிச் சிவாத்துவிதம் எனப்படும் நிமித்தகாரண பரிணாமவாத சைவசமயத்தின் கொள்கைகளைச் சுருக்கமாகப் பார்ப் போம். அது வருமாறு :-

பதி பசு பாசங்களது இயல்பும், தத்துவங்களுக்குத் தோற்ற ஒடுக்கங்களும், அஞ்சு அவத்தை வேறுபாடுகளும் ஆகிய எல்லாம் சித்தாந்த சைவத்தோடு ஒப்பக் கூறுவது இச்சமயம். ஆனால், பசு பாசங்கள் பதி வியாபகத்தின் வியாப்பியமாய் நிற்பன என்றும், தனித்த முதல்களல்ல என்றும், முப்பொருள்களுக்குள்ளும் குணகுணிகட்குள் உள்ளது போன்ற வேற்றுமைதான் உள்ளது என்றும், ஆகவே உட்பேதமேயன்றிப் புறப்பேதம் இல்லை என்றும், மரத்தில் அடங்கிய கிளை முதலன மரமேயாமாறுபோல சதசத்தும் அசத்தும் ஆகிய எல்லாம் சத்து எனவே படும் என்றும் கூறப்படும். ஆதலால் பதித்தன்மைக்கு வேருகப் பசுவுக்கு அறியும் தன்மை கிடையாது. அப்படி இருந்தால், பசுவும் ஒரு தனிமுதல் எனப்பட்டு வழுவாம். சத்தாகிய பதிப்பொருள்தான் ஆன்மாவின் இடமாக நின்று அறியும். இவ்வாருயின், எல்லாம் சத்துப்பொருள் எனப்பட்டு வேருகப் பெறப்படும் பொருள் ஒன்றும் இல்லாமையால் எப்படி நின்றறிய முடியும் என்று கேட்பின் புறப்பேதம் இல்லை; அகப்பேதம் உள்ளதாகி அசத்தாகிய பாசம் இருப்பதனுல் அஃது நின்றறிதல் நிகழ்கிறது என்பது இச்சமயக் கொள்கைகளாம்.

மற்றும், குடாகாயம் மகாகாயத்தின் வேருகாதது போலவே உடலிற்கட்டுப்பட்டிருக்கும் உயிர் சிவத்தின் வேருகாமையால் உயிரின்பொருட்டு உண்டாகும் தோற்றமும் அழிவும் சிவத்திற்கேயாம். முதல்வனைக்கூடப்பெற்ற உயிர் அம்முதல்வனேடு ஒன்ருகுமாதலால் முத்திநிலையில் அவன் அருளால் உயிர் அறியும் என்பதும், முதல்வன் அறியப்படுவன்

என்பதும் சரியல்ல. உயிருக்காக இறைவன் அவ்வுயிருடன்பொருந்தி உலகத்தை அறிவன் ஆதலால் இறைவன் முன் உலகம் சூனியம் என்பது பொருந்தாது. முற்றுணர்வுடைய சிவத்திற்குப்பிரபஞ்சத்தைச்சுட்டி அறிவதாகிய சுட்டுணர்வும் உண்டு. அதனால், இறைவனால் பிரபஞ்சம் சுட்டி அறியவும்படும். பிரபஞ்சத்தை முதல்வன் சுட்டி அறியமாட்டாதவனாயின் முதல்வன் முற்றுணர்வுடையன் என்பது செல்லாது. எல்லாம் சிவமாய்க் காணப்பெற்றவர்கட்குக் குற்றமும் இல்லை; குணமும் இல்லையாம். கடலிற்கலந்த நீர், மழையாக மீளுதலும் உண்டாதலால் அரன் திருவடி அடைந்த உயிர்க்கு இந்திரியத்தில் மீளுதலும் உண்டு என்பதும் இச்சமயக்கொள்கைகளாம். சுருக்கமாகச்சொன்னால், எல்லாப் பிரபஞ்சமும் சிவசொரூபமே. அருவமாய் இருப்பது சிவம். உருவமாய் இருப்பது சத்தி. இவ்விரண்டன்றி அசேதனம் என்பதொன்று இல்லை. ஆகவே, ஆன்மா, பிரபஞ்சம் என்பன கிடையா. யாவும் சிவமாம் பாவனை பிறக்குமளவும் ஆணவம் முதலியன நீங்கமாட்டா என்பதாம். குயவனே குடமாகிறான் என்பது போன்றதொரு பொருந்தாக் கொள்கை இச்சமயத்திருத்தல் நிராகரணத்துக்கு இடம் கொடுப்பதாயிற்றென்க. இனிப் பாடலின் படிச் சங்கற்பம் யாவை எனக்காண்போம்.

## பெத்தநிலை

இப்பிரபஞ்சமெல்லாம் சிவசொரூபமே. இதில் அருவாய் இருப்பது சிவம். உருவமாய் இருப்பது சத்தி. ஆகவே அறிவில்லாதது என்று சொல்லக் கூடிய பொருள் எதுவும் இல்லை. அருவமாய்

அறிவாய் இருப்பவன் அநுபவிக்கும்பொழுது அந்த இரண்டுபகுதியும் ஒன்ருயிருக்கும். இன்னது என்று ஒருவிஷயத்தைச் சுட்டி அனுபவிக்கும்போது விஷய மயமேயாய் அது விஷயம் என்றும் அறிவு என்றும் இரண்டுபடாமல் பொதுமையாக நிற்கும்.

பொன் ஒரே பொருள்தான். என்ருலும் பொன்னுக்கும் அதனுலான ஆபரணத்துக்கும் பேதம் சொல்வது போன்றதுதான் அறிவுக்கும் பிரபஞ்சத்துக்கும் பின்னம் சொல்வது. நல்ல பொன்னிடத்தே உள்ள மாற்று அதனுலான ஆபரணத்தினிடமும் காணப்படும். ஆகவே பொன்னும் பணியும் ஒரே தன்மையவாம். இதனுலேதான் பொன்னை அறிவிற்கும், பணியினைப் பிரபஞ்சத்துக்கும் உவமையாகச் சொல்வர். இந்த உவமை பொருந்துவது என்றும் பொருந்தாதது என்றும் சொல்லும் பாவகமானது உண்மை காணமாட்டாதவரிடத்து இருப்பதாம். உண்மை அறிந்தவர் என்றும், அறியாதவர் என்றும் கூறியதனுல் அறிவிலே பின்னம் உண்டு என்ருல் அவை ஆன்மாக்கள் என்று கூறப்படும். ஆகவே ஆன்மாக்கள் பலவாதலின் அவற்றைத் தனித்து ஒரு முதலாகக் கொள்ளுதற்கில்லை. ஆன்மாக்கள், சிவனுக்கு வேருய் இருப்பதொன்றன்று. எல்லாம் சிவம் என்கிற ஒரே முதல்தான். சிலர், சிவமும் ஆன்மாக்களும் பிரபஞ்சமும் தனித்தனிமுதல்கள் என்று பேதப்படுத்திக் கூறுவார்கள். அது உண்மையன்று. காணும் திறத்தது கண் என்பது போல அறிந்து வருமியல்புடையது ஆன்மா என்று ஒரு தனிமுதல் கொண்டால் என்ன என்று கேட்கக்கூடும். கண்ணுக்கு உண்டானபடிக் காண்பது கண் எனப்படும்.

காணும்திறம் தனக்கிருப்பதொருதனிப்பொருளாயின் இருட்டிலேயும் கண் காணவேண்டும். அப்படி அது காண்பதில்லை. மின்மினிஒளி இருட்டை நீக்கி ஒளிர்கிறது போலக் கண்ணொளி இருளை நீக்கக் கண்டோமில்லை. ஆதலால், கண்ணுக்குள்ள வடிவமும், சூரியப்பிரகாசத்தால் உண்டாகும் காட்சியும். ஆகிய இவை எல்லாம் மனத்துக்கு எட்டாத அரிய சிவம் சத்திகளுடைய நாடகமாம். (இங்கே பிரபு லிங்க லீலை என்ற சொற்பொருள் கருதிப்பார்த்தல் நன்றாம்.)

இப்படியெல்லாம் சொல்வதற்கும் கொள்வதற்கும் ஆதாரம் என்ன என்று கேட்கலாம். அவை வருமாறு ;- 1. திருவாசகம் :

" *நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்*
*புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்*
*உலகேழ் எனத் திசைபத்தெனத் தான் ஒருவனுமே[ருன்*
*பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ* "

என்றும், 2. தேவாரம் :

" *ஊனாகி உயிராகி அதனுள் நின்ற*
*உணர்வாகிப் பிறவனைத்தும் நீயே நின்றாய்*
*நானேதும் அறியாமே என்னுள் வந்து*
*நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்*
*தேனாரும் கொன்றையனே! நின்றியூராய்!*
*திருவானைக் காவிலுறை சிவனே! ஞானம்*
*ஆனாய்நின் பொற்பாதம் அடையப் பெற்றால்*
*அல்ல கண்டம் கொண்டடியேன்*
[என்செய்கேனே"

என்றும், 3. திருவாவடுதுறைத் தேவாரம்:

" திருவேஎன் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதீ மிக்க
உருவேஎன் உறவேஎன் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவேஎன் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் துறையுறையும் அமரர் ஏறே."

என்றும், 4. திருக்கடைக்காப்பு: "பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள்" என்கிற திருத்தாளச் சதியில்,

" தாமே தானாகச் செயுமவன் "

என்றும், 5. திருவாசகம்: "அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே" என்கிற திருப்பாட்டிலே,

" நாமொழிந்து சிவமாவன "

என்றும், 6. தேவாரம்: "தீயாகி நீராகித் திண்மையாகி" என்னும் திருப்பாட்டில்,

" காயாகிப் பழமாகிப் பழத்தில் நின்ற
இரதங்கள் உண்போனும் தானே யாகி "

என்றும், 7. கரைக்காலம்மையார் அந்தாதி;

" அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளும் தானே அவன் "

என்றும், 8. திருவிசைப்பா: "மோதலைப்பட்ட கடல்" என்னும் திருப்பாட்டில்,

"தாய்தலைப் பட்டங் குருகி ஒன்றாய்"

என்றும், 9. திருவாசகம்: "வான் கெட்டு மாருதம் கெட்டு" என்னும் திருப்பாட்டில்,

"நான் கெட்டேன்"

என்றும், இப்படி முதல் இன்னதென்றே அறியக் கூறிவந்த திருவாக்குகள் பல உள. இன்னமும் அநுக்கிரகம் பெற்ற தம்பிரான்மார்கள் அருளிச்செய்த சான்றுகளும் உள. ஆகையால், கொடுக்கும்பொருள் - கொள்ளும்பொருள் - கொடுப்போன் - கொள்வோன் எல்லாம் ஒரு பொருளே; இதுதான் உண்மை என்று அர்த்தம் பண்ணி அறிவதே நன்றாம். இதனால் நாம் அறியவேண்டுவது யாதெனில், புசிக்கப்படும் சப்த முதலான விஷயங்களும், அவ்விஷயங்களைப் புசிப்பவனும் சத்தியும் சிவமும் ஆகிய சைதன்னியமே. இவை இரண்டும் வேறல்ல. இந்த அறிவு உண்டாவது அருமையாகும். இதுவே பெத்தநிலைக் கோட்பாடு ஆகும்.

## முத்திநிலை - கேவலம்

ஆன்மா ஒரு தனிமுதல் என்றும், சிவம் ஒரு தனி முதல் என்றும் துவிதபாவனையாகச் சங்கற்பித்துக் கொண்டிருத்தல் குற்றம். தான் ஒரு முதல் என்ற எண்ணம் அறச் சிவமுதலே ஆய் வருதலே சாயுச்சியம் ஆம். இப்படிப்பட்ட அறிவு ஆன்மாவுக்கு உண்டாகவேண்டும். இது உண்டாகுமளவும் சஞ்சாரம் செய்பவன் முத்திக்குவழி இன்னதுதான் எனக் கண்டு அதிலே கூடிநிற்கவேண்டும். கனவிலும்

னவிலும் இந்த உடம்பையும் உயிரையும் சிவத்திற்குள்ளே அடையச் செலுத்தவேண்டும். அப்போது ஒன்றையும் அறியவொட்டாமற் செய்துவந்த ஆணவ மலம் நீங்கும். சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் என்கிற நான்கு அவத்தைகளிலும் அறிகருவிகள் ஏற்றக் குறைச்சலாக இருக்கும் ஆதலால், இக்கருவிகளெல்லாம் கழன்று ஒன்றும் அறியாமல் கிடக்கும் நிலையே துரியாதீதம் எனத் தெரியவேண்டும்.

## சகலம்

மேலே சொன்னபடி, துரியாதீதநிலை பிறக்க அதைவிட்டு நீங்காமல் நின்றால் கர்த்தாவின் திருவருள் கருவிகளைக் கூட்டிப் பெத்தத்தைச் சீவிக்கப் பண்ணும். அப்போது ஆணவம் நீங்கிய கருவிகளோடுகூடி அறிவாய் நிற்கலாகும்.

## சுத்தாவத்தை

சாக்கிர அவத்தையில் விட்டுநீங்காக் கருவிகளாகிய முப்பத்தாறும் நிறைந்து நிற்கும். ஆகையால், எல்லாக் கருவிகளும் கழன்றநிலை எனப்படும் துரியாதீதம் தோன்றின்பொழுது அதைவிட்டுநீங்காமல் நிலைபெற்றிருப்பதுவே சிவகதியாம். மேற்கூறப்பட்ட மூன்றும் முத்திநிலைபற்றிய கொள்கைகளாகும்.

நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம்
முற்றிற்று.

## செய்யுள்—18.

## VIII—ஆ

## நிமித்தகாரண பரிணாமவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

திறம்பெற நீஇங்கு அறைந்தமை கருதில்
புவனம் யாவையும் புனிதன(து) உருஎனில்
அவன்முதற் காரணம்; அன்றும் என்னில்
நிமித்த காரணம் நிகழ்த்துக; என்நீ;
அவனே காரணம் அனைத்தும்என்(று) அறைந்தனை
மண்தனிக் குலாலன் தண்டசக் கராதி
காரணம் மூன்றும் ஓர்பேர் அணைந்த(து)இத்
தாரணி தன்னில் கண்டது சாற்றுக
அத்தன் இயற்றும் இத்தொழில் பிறர்க்கோ
தனக்கோ வீணோ எனக்(கு)ஈ(து) இயம்புக
வீண்எனில் பித்தர் மாண்பறு தொழில்போல்
தலைமையும் அறிவும் இலதென இகழ்வர்
தனக்கெனில் அஃதுமுன் நிற்பதொன்(று) அன்றே
தன்போல் அறிஞரும் தலைவரும் இலரால்;
மின்போல் நிலைமையை வேண்டலும் பழுதே
பிறர்க்(கு)எனில் பிறரும் பிறர்க்(கு) ஆம் பொருளும்
பொருட்(கு)அமை கருவியும் அதற்(கு)உபா தானமும்
செய்கையும் என்(று)ஓர் ஐவகை தானொடும்
மாறாச் சைவர் கூறார் என்றால்
நின்சித் தாந்தம் அவச்சித் தாந்தம்

என்சித்(து) ஆன்ற அசித்தைமற்(று) ஈஞ(து)
அசித்(து)இல(து) என்னில் வசித்த(து)என் உலகில்
உலகா யதனும் பூதக் கூட்டம்
சலம்மேல் கொப்புள் தகும்எனச் சாற்றினன்;

## ஆன்மா உண்டு என்றல்

தீய கருமச் சீனர்சா வகர்பிறர்
நேயம் இல்என நிகழ்த்தினர் இலரே;
காண்டல் விரோதம் நிற்பிறர் கணித்திலர்
ஈண்(டு)உன(து) உரைக்(கு)மற்(று) யார்கரி உடலும்
சித்தோ சித்தின் சேர்வால் சித்(து)எனில்
கடப டாதியும் உடற்கண் சிதை(வு)என்
தாவர உயிர்போல் தனுஒழிந்(து) இவற்றின்
மேவிய உணர்வு வரவிடும் என்னில்
சடத்(து)உயிர் போல்எனச் சாற்றினை ஆகலின்
உடற்(கு)உயிர் இறையை ஒழிந்(து)உண்(டு) அன்றே
தருதிட் டாந்தமும் தாட்டாந் திகமும்
ஒருபொருள் ஆகில் உவமை பெறுதே
ஒன்றே ஆகில் உடற்(கு)இறை தாபரத்(து)
ஒன்றிய நிலையில் விசேடம்என் உரைக்க
பூதச் சேர்வைப் பேதம்என்(று) அறையில்
சேர்வைப் பேதம் என்கொடு செப்புக
கருமத்(து) அளவில் வரும்எனில் பித்தர்
உரையில் திகழும் உணர்(வு)ஒழிந் தனையே
கருமம் செய்வோன் கடவுள்அன்(று) உடலும்
மருவிநின்(று) இருவினை வளரா நுகரா
கடவுளும் உடலின் கண்படல் துஞ்சல்

இடர்நலம் உறுதல் இறங்குதல் ஏறுதல்
எவ்வகை யேனும் செய்கைஇன்(று) ஆதலும்
பலகலை உலகில் நிலவுத லானும்
எண்ணரும் பொருளும் இரவியும் ஒழியக்
கண்என ஒன்று காண்கையி ஞனும்
பாசப் பகுதியும் ஈசனும் ஒழியப்
பசுவும் உண்(டு)என்(று) இசையவேண் டின்றே
இதுஎனும் ஒன்றை அதுவாய்ப் படுத்துப்
பொதுமையில் நிற்கும் மாயையின் பொற்(பு)எனப்
பொற்பணி யாவும் பொன்ஆம் தன்மையின்
நிட்கள சகளத்(து) இருஉரு நிலையும்
ஈச னேஎனப் பேசுவர் அன்றி
அருஉரு ஆகி வரும்உல(கு) என்னின்
அனைத்தும் மாயை எனத்தெளி கிலையே
ஆவதும் ஆகா(து) ஒழிவதும் இல(து)எனும்
பாவகம் உலகா யதனது பான்மை
கள்கொலை வெகுளி காமம் களவுகள்
உட்படும் இவைவிட மொழியா தார்இலர்
சோம பானம் சுரா பானங்கள்
ஆமென மறைகள் ஆர்செவி பறைந்தன?
மறையோன் புலைச்சியை மருவும் என்பது
முறையோ எனில்அது புனைமொழி என்னில்
சாதி பேத நீதிநீ தவறினும்
மேதியை ஏறு விழைஆ விரும்பும்
கண்ணின(து) உருவும் அதில்கதிர் ஒளியும்
நண்ணரும் சத்தின் நாடகம் எனில்அதற்(கு)
ஏதுவும் பயனும் ஓத வேண்டும்.

நின்மொழி விரோதமும் நீடுல(கு) இயற்கையும்
தன்மசாத் திரமும் சகலமும் என்செயும்?
உலகுஏழ் எனஇறை பலஆம் தன்மை
கடமொடு சார்வம் கலசம் ஆதிகள்
அடல்உறு குயவன் ஆயினன் என்றால்
தாமே ஆகா அவைதான் ஆகான்
ஆயினன் என்ப(து) ஆக்கினன் எனவே
ஆனாய் என்ப(து) அனைத்தும் அவ்வகை
தான்ஆ காமையைச் சாற்றிடும் என்க
தாமே எனும்இத் தனிஏ காரம்
அழிந்திலர் அதுவே ஆய்த்திலர் அதுவிட்(டு)
ஒழிந்திலர் பிரிவிலர் எனும்இவை உணர்த்தும்
காயும் பழமும் சுவையும் நுகர்வ
தாய்அவன் தானும் அவன்முதற்(று) என்னும்
அகிலமும் தெளிய அறிவோன் தானும்
அகிலமும் அறிஞரை அறிவிப் போனும்
அறிஞர்க்(கு) அறிவாய் அறிகின் றோனும்
அறிவிற்(கு) அறிபொருள் ஆவோன் தானும்
அகிலமும் மேனி ஆனவன் என்னும்
தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோன்
ஒருபொருள் ஆயின் உவப்(பு)உண்(டு) என்க.
நுகர்வோன் தனக்கு நுகர்பொருள் வேண்டில்
இகல்அறக் கிடையா(து) இருந்த(து)என் நிரயமும்
வேண்டார் ஆயினும் மெய்உறு வியாதிகள்
ஈண்டா(து) ஒழியா(து) இறைக்(கு)இவை ஈடுஅல
சத்தியும் சிவமும் தாமே நுகரும்என்(று)
இத்திறன் உணர்வுவந்(து) எய்துவ(து) எவர்க்கோ?

தமக்கே என்னில் தாம்உண ராமையும்
அமைப்பற உணர்தலும் அவர்க்(கு)அடை(வு) அன்றே.

## முத்தி மறுப்பு

நானும் அவனும் நவையும் நலனும்
தான்அவன் ஆகையும் நின்சா தனத்(து)இல்
சகயோ கத்தைச் சாயுச் சியம்எனப்
பகர்வது பதிபசு பாசத் தவர்க்கே
யாதொரு வகைஎன ஓதிய(து) இறைநூல்
சொன்னவற்(று) ஒன்றன்(று) என்னில் வீ(டு)எளிதே
தான்அறி வழியே தலைப்பொருள் பிடிக்கின்
மேல்நிகழ் பலமும் வீ(டு)அளித் திடுமே
நிலையாக் கருவியை நிலையாக் கருதிப்
புலைஆ டுதலும் உலகா யதன்பொருள்
குட்டியம் இன்றிநல் கோலம் எழுதுதல்
இட்டம்அ(து) ஆயின் கருவியும் இடங்களும்
கருத்துற உரைக்கத் தெரித்திடும் அதீதத்(து)
அறி(வு)ஒன்(று) இல்லோர்க்(கு) இறைஅருள் உதவுதல்
பிறி(வு)அறி(வு) அரிய செறிஇருள் இடத்(து)ஓர்
அந்தகன் காண வந்தோர் எம்மை
நீவிரும் காண வேணும்என்(று) ஆங்கு
எடுத்தொரு தீபம் கொடுத்ததை ஒக்கும்
இச்செயற்(கு) இறைவன் கொச்சையன் அன்றே
கருவி வசத்தில் தெரிவுறக் காண
வேண்டுநர் இலரால் ஈண்(டு)அறி(வு) யாவும்
சிவமே என்று செப்பினை அவம்உறு
பொறிபுலன் அறியா அறிவது பிரமம்

என்றோர்க்(கு) உன்போல் இடர்ப்படல் இலதே
ஏற்றம் கருவி இருபதோ(டு) இரண்டும்
போற்றும்ஐந்(து) அவத்தையும் புகல்திரி மலமும்
ஈசனும் உயிரும் பேசினை அஃ(து)ஒழிந்(து)
ஒன்றே ஆகும் என்றநின் இயல்பும்
தாயர் மனைவியர் தாதியர் தவ்வையர்
ஆயவர் எவரையும் ஓர்மையில் காணும்
கோகழி தூர்த்தர் கொடும்தொழில் தகுமே
ஆக மற்(று)அதன் அருள்நிலை தன்நிலை
ஏக நாயகன் ஆகிய இறைநிலை
நாசம்இல் பாசம் வீசிய வியன்நிலை
இனையவை ஒன்றும் நினைவினும் இன்றி
உண்(டு)எனும் உணர்வில் கண்டது கருதில்
இழுக்(கு)எனும் புலன்வழி ஒழுக்கமும் அதுஆய்க்
கொண்டு பண்டையில் எண்தரு மடங்கு
வந்தவா செய்யத் தந்ததை அன்றே
புன்மைகள் நீங்க உண்மை கேள்மதி.

### பொழிப்பு

*நூலுரையால்கொள்க.*

### விளக்கம்

## பெத்தநிலை மறுப்பு

பெத்தநிலை முத்திநிலை என்கிற இரண்டு நிலைகளையும் பற்றி நாம் முதலில் நன்கு தெளிவடைய வேண்டும். இவ்விரண்டுள்ளும் பெத்தநிலையைப்பற்றி ஐயமறத் தெரியத் தெரியத்தான் முத்திநிலைத்தன்மை

தெளிவாகும். ஆதலால், பெத்தநிலைபற்றி நிமித்த காரண பரிணமவாதி கூறியுள்ள செய்திகளை இனி ஆசிரியர் மறுப்புரைத்துத் தெளிவிக்கின்றாராவர். கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்றில் இப்போது நாம் உடம்போடு கூடியுள்ள நிலைக்குச் சகலநிலை என்பது பெயராம். இந்த நிலையே பெத்தநிலை எனப்படும். எனவே ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் நிகழ் தற்கான கருவிகளோடு உயிர் கூடியுள்ள நிலையே பெத்தநிலை ஆகும். இனி மேலே கூறப்பட்ட வாதி யார் சொன்ன பெத்தநிலைத் தன்மைகளில் உள்ள குறைபாடுகள் காரணம் உரைத்து விளக்கப்படுதல் காணலாகும்.

நாம் காணும் பிரபஞ்சம் எல்லாம் கர்த்தாவின் சொரூபம் என்பது பொருந்தாது. அப்படியானால் கர்த்தாவே பிரபஞ்சமாக மாறியுள்ளான் எனப்படும். அதாவது, மண்ணனது குடமாகவும் சட்டி முதலி யனவாகவும் மாறியுள்ளமைபோன்று, கர்த்தா, விசுவ ரூபியாக ஆனான் என்றால், அவன் மண்போன்று முதற்காரணம் எனப்படுவான். அப்படி, இறைவ னுக்குப் பரிணமங்கூறுதல் முறையன்று. ஏனெனில் மறைகள் அப்பொருளை விசுவாதீதன் என்னும். ஆத லால், கர்த்தாவானவன் குயவனைப்போன்று நிமித்த காரணனே ஆவன். இப்படி ஒப்புக்கொள்ளாமல் சிவாத்துவிதவாதியர் அந்த விசுவாதீதனை சிவனே நிமித்தம், துணை, முதல் என்கிற மூன்று காரணமும் ஆம் என்று கூறுவர்.

மூன்று காரணங்களும் ஒரே பொருளாயிருத்தல் இயல்பாகாது. மண் என்பது முதற்காரணம்; குயவன்

நிமித்தகாரணம்; அவனுக்குரிய கருவிகளாகிய தண்ட சக்கரங்கள் துணைக்காரணம். ஆகக்காரணம் மூன்றாக இருத்தலே முறை ஆகும். இந்தமுறையிலே நிமித்த காரணம் என்றது சிவன்; துணைக்காரணம் என்றது சத்திகள்; முதற்காரணம் என்றது விந்து - மோகினி - மான் என்ற உபாதானத் திரவியங்கள் என்றே கொள்ளப்படல் தக்கதாகும். இதைவிட்டு மூன்றும் ஒரு காரணமாயிருப்பது உலகில் காணப்படாததாகும்.

மேலும், கர்த்தா ஐந்தொழில்களை நிகழ்த்துகின்றான் என்பது, யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட செய்தியாகும். அப்படியானால் அந்தத் தொழில்களை இறைவன் யாருக்காகச் செய்கிறான்? தனக்காகவா? பிறருக்காகவா? அல்லது ஒருவேளை ஒருபயனும் இன்றி வறிதே செய்கின்றானா?

இவற்றுள், வீணாகச் செய்கின்றான் எனக்கொண்டால் பித்தர் செயல்போல மாட்சிமையற்ற தொழிலாகக் கருதவேண்டி வரும். அப்படிக் கருதினால் கருத்தா முழுமுதன்மையும் பேரறிவும் உடையான் அல்லன் என்னப்பட்டு வழுவாகும். பெரியோரும் இகழ்வர். ஆதலால், இறைவன் பஞ்சகிருத்தியம் வீண் செயல் அன்றாம்.

ஒருவேளை, கர்த்தா ஐந்தொழில்களையும் தனக்காகச் செய்கிறான் என்று வாதிக்கக்கூடும். அப்படி அவன் தனக்காகச் செய்துகொண்டான் என்றால் அவனுக்கு ஏதோ குறைபாடுண்டு என்று கருதப்பட்டு அவனது சர்வமுதன்மைக்கும் சர்வஞ்ஞத்துவத்துக்கும் பழுதுண்டாகும். மின்னலைப்போலத் தோன்றி

மறையும் இப்பிரபஞ்ச இயற்கையால் அவனுக்கு ஆகவேண்டியதொன்றுமில்லை. ஆதலால் தனக்காகச் செய்து கொள்ளுகிறன் என்பதும் பொருத்தமற்ற பேச்சாம். அமுதமுண்டு பசியறப்பெற்றவன், வயிற்றுப் பசிக்கென்று கஞ்சி காய்ச்சமாட்டான் என்பது வெளிப்படையாம். இதனைத் தன்போல் அறிஞரும் தலைவரும் இலராால் என்றவரி தெரிவிக்கும் என்க.

அப்படியன்று; பிறருக்காகத்தான் செய்கிறன் என்று ஒப்புக்கொண்டால், தன்னைவிட்டு வேருயிருப்பவனுகிற ஒருமுதலுண்டு என்று கொள்ளவேண்டும்; பிறகு அந்தப்பிறர் எனப்படும் அவர்கட்கு வேண்டும் விஷயங்கள் தரப்படவேண்டும். பிறகு அவ்விஷயங்களைப் புசிக்கத்தக்க கருவிகள் அவர்கட்கு உண்டாக்கித்தரவேண்டும். அப்பால், அந்தக்கருவிகள் தோன்றுவதற்கான உபாதானமும் வேண்டும். அந்த உபாதானத்திலிருந்து பிரபஞ்சத்தைப் படைக்கவேண்டும்; இப்படிச் சிவன் செய்கின்றுறுதலால் சிவன் ஐந்தொழிலாற்றுபவன் என்று சைவராயுள்ளோர் யாவரும் கூறுவர். சிவனை வழிபடுவோர் எவரும் இந்தக்கொள்கைக்கு மாறுபடக் கூறமாட்டார். ஆதலால், சிவாத்துவிதவாதியர் சித்தாந்தம் அவம்பட்டதொன்றுதல் காணலாம்.

சித்துப்பொருளாகிய சிவம் அசித்தாகிய பிரபஞ்சத்தைத் தன்னிடமிருந்து தோற்றுவிக்காது. சித்திலிருந்து அசித்துப்பிறவாதென்பதே நியாயம். இதனுல் பிரபஞ்சம் எனப்படும் அசித்தாம்முதல் வேறு உண்டு என்று கொள்ளப்படும். ஆனல் சிவாத்துவிதவாதியர் அசித்து என்பது பிரபஞ்சத்துக்கில்லை; எல்லாம்

சித்சொரூபமே என்பர். இது சரியன்று. எல்லாச்சாத்திரங்களும் இப்பிரபஞ்சம் சடப்பொருள் என்றுதான் கூறுகின்றன. உலகாயதர்கள்கூட இந்தப்பிரபஞ்சம் பூதக்கூட்டம்; இது நீர்மேற் குமிழிபோன்று நிலையற்றது என்றுதான் கூறுகின்றனர். அப்படியிருக்கையில் சிவாத்துவிதவாதியர் இப்பிரபஞ்சத்தைச் சித்சொரூபம் என்று உரைப்பது பொருந்தாதென்னத் தடையில்லை. இதனுல் பிரபஞ்சம் சித்துப்பொருள் அன்று என்பது சாதிக்கப்பட்டது.

## ஆன்மா உண்டு

இந்தச் சரீரத்தில் ஓர் அறிவு உண்டு என்று புத்தர் சமணர் முதலிய புறப்புறச்சமயத்தவரும் கூறுகின்றனர். இங்குப்புத்தரை ஆசிரியர் தீயகருமச்சீனர் எனக் குறிக்கின்ருராவர். வேதமுதலான நூல்களைக் கெடுத்துப்போடற்கண் இவர்கள் பெரிதும் ஆதிக்கம் பற்றிமுயன்றனராதலால் இங்ஙனம் குறிக்கலுற்ருர் ஆவர். " நீதிஆர் வேதநூலின் நெறிஅல்லா அறங்கள் நாளும் ஓதியவர்" என்பர் சித்தியாரில். மற்றும், கோணஆர் குதர்க்கங்கள் கொண்டே குழப்பும் பவுத்தர்கள்" என்பார் பிறரும். இப்பவுத்தர்கள் " சர்வம் சூந்யம்" என்பவராயினும் மதி உண்டு மற்று ஒன்று இலது என்பர். இனிச்சமணர்கொடுமைகள் பெரிய புராணம் முதலிய சைவநூல்களால் அறியப்படும். இவர்களும் உடம்பில் அறிவு உண்டு; தான் உள்ள பொருளளவுக்கு அது வியாபகமுடையது என்பர். இவர்களை " வாசமா மலர் அசோகு பேணி மறை நீதியோடு மலையும்" என்னும் சித்தியார்ப்பாடல் கூறுதல் கண்டு அறியலாகும். இவர்களைச் சாவகர் என்று

இங்குக் குறித்துள்ளார் ஆசிரியர். இவர்களெல்லாரும் வேத விரோதிகளாக இருப்பினும் அறிவு என்று ஒரு முதல் உடலுள் இருப்பதை ஒப்புக்கொள்கின்றனர். அப்படியிருந்தும் வேதம் பேணும் சிவாத்துவிதியர் ஆன்மா என்றதொருமுதல் இல்லை என்று கூறுவது அநுசிதமாம். இவர்கள் இவ்வாறு கூறுதல் பிரத்தியக்ஷ விரோதம் எனப்படும் என்க. ஆன்மா என்பதொரு முதல் இல்லை என்பதற்கு எவரும் சாக்ஷியங்கூறுர்.

சரீரம் அறிவுடைப்பொருளா? அன்று? என்றல் அறிவுடைப்பொருளோடு கூடி வாதனைப்படுதலால் இவ்வுடம்பும் அறிவுதான் என்பர் இவ்வாதியர். அப்படியானுல், குடம் துணி முதலியவைகளும் ஓர் உடலாக இருக்கையில் ஏன் அவை சஞ்சாரமின்றி உள்ளன என்று நாம் கேட்டால், அதற்கு அவர்கள், பேரறிவு என்பதொன்று எல்லாவடிங்களிலும் கலந்திருப்பதுதான்; என்றலும், அது உயிர்கூடியுள்ள இவ்வுடம்பில் தாக்கியிருப்பது போன்று கடபடாதிகளில் தாக்கி நில்லாமையால் அவை சஞ்சாரம் பெறவில்லை என்பர்.

இப்படி அவர்கள்சொல்வதிலிருந்து உயிரிருக்கும் உடம்புகளில் பேரறிவு தாக்கி நிற்பதுபோல, உயிரில்லாத உடம்புகளில் அப்பேரறிவு தாக்கிநிற்கவில்லை என்று ஏற்படுகின்றது. இதனுல், இந்த உடம்புக்குள் அப்பேரறிவு அல்லாததான ஓர் உயிர் என்னும் பொருள் உண்டு என்பது சித்தியாகிறது. கடபடம் என்ற திருஷ்டாந்தம்கொண்டு இப்படி உயிர் என்னும் ஒரு பொருள் பேரறிவின் வேருக உண்டு என்று எப்படிக் கொள்ளப்படும் என்று வாதிக்கக்கூடும்.

உபமானமும் உபமேயமும் எப்போதும் வேறுவேறு பொருள்களே ஆகும்; ஒரே பொருளாக இரா. அதாவது ஒன்றற்கு உவமையாகச் சொல்லப்பட்ட திருஷ்டாந்தமும் அந்த உவமையைப்பற்றி நிற்பதான தாஷ்டாந்திகமும் ஒரு பொருளல்ல. அப்படி ஒரு பொருளாகவே கருதப்படுமாயின் "பொன் போலும் கொன்றை" என்னும் உவமை இந்த உலகில் உண்டாகியிராது. இதனால் பொன் வேறு பொருள். கொன்றை வேறுபொருள்தான். ஆகவே, உடல் தோறும் உள்ள உயிர் என்கிறபொருள் பேரறிவின் வேறானதே என்பது பெறப்படும் என்க.

இன்னமும் இதனைப்பற்றி ஆராய்வோம். பேரறிவும் உடலுள் உயிரும் ஒரே பொருளே என்று கொண்டால், மரங்கள் முதலியவற்றினும் நம்முடைய உடற்கு விசேடம் ஏன் கூறப்படுகிறது? ஒருவேளை பூதக்கூட்டுறவின் ஏற்றத்தாழ்வினால் இப்படி இருக்கக் கூடும் என்று சொல்லலாம். அப்படியானால் பூதங்கள் கூடுவதில் இந்த ஏற்றத்தாழ்வாகக்கூடும் பேதம் எதனால் வந்தது? அது கன்மபேதத்தால் வந்தது என்று கூறக்கூடும். கன்மத்துக்கு ஈடாக இப்பேதம் உண்டாயிற்று என்கிற பதில் உரை பித்தர் பேசும் பேச்சுப் போன்றதாகும். அதாவது அறிவில்லாத பேச்செனப்படும். ஏனெனில், கன்மம் செய்பவன் கர்த்தா எனப்படமாட்டான். அதாவது சிவம், கன்மம் செய்வது அன்று என்பதாம். இதனாலும் உடலுள் இருந்து கன்மத்தைச்செய்யும் ஆன்மா உண்டு என்று ஒப்புக்கொள்ளவேண்டும்.

மற்றும், உடம்பு சடப்பொருளாதலால் அது கர்மத்தைச் செய்யாது. கன்மத்தை இன்னொரு

கன்மத்துக்குக் காரணமாக்கிக் கொள்ளவும் உட லுக்கு இயலாது. பிராரத்தகன்மத்தை உடல் தானே புசிக்காது. ஆகவே உடம்புள் நின்று புசிப்பவனும், கன்மத்தைச் செய்பவனும் ஆன்மா என்று ஏற்றுக் கொள்ளவேண்டும்.

அப்படியன்று; சிவன் கூடிநின்றே கன்மம் புரிந்து கன்மபலனைப் புசிப்பன் என்று சொன்னல், சிவனுக்குக் கன்மத்துக்கேற்றற்போல் பிறப்புண்டு என்றும், கன்மம் விட்டதும் சிறப்புண்டு என்றும், இதனிடையிலே புண்ணியபாவங்களைச் சிவன் புசித்துக் கொண்டு சாக்கிரம் முதலான அவத்தைகளில் தங்கியும், அதீதப்பட்டும், மீண்டும் உணரும் முறையில் சாக்கிரப்பட்டும் இவ்வாறெல்லாம் அவத்தைக்கு உள்ளாவன் என்றும் கூறவேண்டி வருமாதலால் அப்படிச் சொல்லுதல் சற்றும் பொருந்தாக்கூற்றுகும். இப்படிப்பட்ட பிறப்பு - இறப்பு - இருப்பு - சிறப்பு ஆகிய தொழில்கள் ஒருபோதும் சிவனுக்கில்லை என்பதே சிவத்தியல்பு. சிவத்துக்குப் பாசம் இல்லை யாதலால், பாசத்தை நீக்கிக்கொள்வதற்கான வழி கூறும் சாத்திரங்களை அவன் ஓதவேண்டுவதில்லை. ஆகவே உடலுள் கூடியிருக்கும் ஆன்மா ஓதிப் பாச நிவிர்த்தி தெரிந்துகொள்ளும்பொருட்டுத்தான் பல பல சாத்திரங்கள் இவ்வுலகில் உண்டாகியிருக்கின்றன. சிவத்துக்கு இச்சாத்திரங்கள் ஒருபோதும் தேவை யில்லை. எனவே, உலகில் பாசநீக்கம் கூறும் சாத்திரங்கள் பலவாக இருத்தல் கொண்டும் ஆன்மா என்கிற அறிவுக் குறைபாடுடையதொரு பொருள் கர்த்தாவின் வேருக இருப்பதொரு முதலாகும் என்று தெரிதலே தக்கதாம்.

மற்றும் அச்சாத்திரங்களிலே கூறப்படும் உவமை யைக்கொண்டும் இவ்வுண்மை தெரியலாம். அதாவது. பிரபஞ்சப் பொருள்கள் பல உள்ளன. அவற்றை விளக்கும் ஆதித்தன் உள்ளது. பிரபஞ்சப் பொருள் கள் ஆதித்தனைக் காணமாட்டா; அவை சடம். ஆதித்தனுக்குச் சடப்பொருளைக் காணவேண்டுவ தில்லை. காண்பதனுலாம் பயன் ஏதும் ஆதித்தனுக்கு இல்லை. பொருளைக் காட்டுகிறது அதன் உதவியாகும். இவற்றினிடையே பொருள்களைக் கண்டுகொள்வது பிரபஞ்சப் பொருளுமாகாததும், ஆதித்தனுமாகாதது மான நம் கண்களே ஆகும். இதனுல் பாசமுமாகாமல், பதியுமாகாமல் பசுக்கள் எனப்படுவதொருவகை உண்டு என்று தெளியலாகும்.

## மாயை உண்டு

இது என்று ஒரு பொருளைச் சுட்டி விஷயத்தை நுகரும்போது அவ்விஷயமேயாக ஆவது எனப்படும் அறிவானது பொதுவானது என்று சொல்லுவது மாயாமயக்கத்தின் பெருமையைத் தெரிவிக்கின்றது என்னலாமன்றே!

பொன்னில் உண்டாம் பணிகள் யாவும் அப் பொன்போலவே இருந்த தன்மைபோன்று நிஷ்கள மாகிய அருவமும், சகளம் ஆகிய உருவமும் என்கிற இரண்டும் கர்த்தாவினுடைய சொரூபமாய் இருக்கும் என்று பெரியோர் கூறுவர். இதனுல், அருவாயுள்ள சிவமே உருவாயுள்ள பிரபஞ்சம் ஆகும் எனப் படாது. பிரபஞ்சம் மாயையாயிருப்பது. சிவம் இப் பிரபஞ்சமாகிறதென்றுல் பிரபஞ்சத்தின் முதற்காரண மான சிவமும் மாயை என்று ஏற்பட்டுத் தவறுபடும்.

ஆகவே, பிரபஞ்சத்துக்கு உபாதானம் சிவம் அல்ல; மாயை என்பதாம். இதனால் மாயை என்பதொரு சிவத்தினும் உயிரினும் வேருன முதல் உளதென்பது தெளியலாம். இது ஆகும்; இது ஆகாது; இவை இரண்டுமில என்னும் பாவகம் உலகாயதன் கொள்கை ஆகும். ஞானிகட்கு இந்த முறைமை இல்லை.

மதுபானம் செய்தல், கொலைபுரிதல், கொள்ளையடித்தல், கோபித்தல், பிறர்மனையை நயத்தல், திருடுதல் இப்படிப்பட்ட பொல்லாங்குகள் ஆகா, ஆதலால் இவற்றை விட்டுவிடுங்கள் என்று யாருமே சொல்லுவர். இவைகளைப் புரியினும் ஞானிகட்குத் தோஷம் ஏருதென்று சாத்திரங்கள் சொல்லும். சோமபானம் செய்யலாம், சுராபானம் செய்யலாம் என்று வேதங்கள் யாருடைய செவியில் இரகசியமாகச் சொல்லின? இல்லையே! மறையோன், புலைச்சியை மருவலாம் என்பது முறைமையாகுமா? முறைமையன்றே! அப்படியில்லை மறையவன் புலைச்சியைத் தொடக்கூடாது என்று ஒரு வரம்பு கூறப்பட்டதை ஆதாரமாக வைத்துக்கொண்டு அவளிடத்திற்கூடினல் இன்பம் விளையாதென்று எவர் சொல்வர்? என்று கேட்கலாம். இவை எல்லாம் குதர்க்கமான வினக்களாகும். இப்படிக் கேட்பது சாதித்தன்மைமேல் உள்ள விரோதம் பற்றி எழுவதெனவே படும். இதனால் சாதி தவிர்ந்து விட்டதாகாது. மிருகங்களும் இப்படி முறை பிறழ்ந்து கூடமாட்டா; இடபமானது ஒருபோதும் எருமையைப்புணர விரும்பாது; பசுவையே விரும்பும். ஆதலால், நாங்கள் ஞானிகள்; எங்கட்கு இந்த வரம்பு அர்த்தப்படாது என்பது பொருந்தாது. இதனல்,

மாயையின் மயக்கும் திறன் உணரப்படுதலே ஒழுங்காகும் என்பது தெரியப்படும்.

மற்று, கண்ணினுடைய ஒளியும், அதில் கூடி நிற்கும் சூரியனாலுண்டாகும் காட்சியும் சிவசத்தியினுடைய நாடகம் என்று கூறுவர் சிவாத்துவித வாதியர். இப்படி ஒரு காட்சியைச் சிவன் அனுபவிப்பதானால் அவன் ஓர் உருவத்தைக் கொள்ளவேண்டி வரும். அப்படி ஓர் உருவத்தைக் கொள்வானாயின், அந்த உருவம் கொள்ளும்படிச் சிவனுக்கு ஏதோ ஒரு குற்றம் இருந்தேதீரவேண்டிவரும். பிறகு அந்தக் குற்றத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டுச் சிவன் இப்படிப் புசித்தான் - நடித்தான் - என்றெல்லாம் சொல்லவேண்டிவரும். இங்ஙனமெல்லாம் சொன்னால் "விசுவாதீதனும் சிவன் கன்மப் புசிப்பினை உடையானாயினன்" என்கிற சொல்விரோதம் சம்பவிக்கும். இதனால் இவன் நல்லவன்; பொல்லாதவன் என்கிற அங்கீகாரம் ஏற்பட்டுவிடும். இன்னது புண்ணியம்; இன்னது பாவம்; பாவஞ்செய்தாரை அரசன் தண்டிப்பன் என்று தருமசாத்திரங்கள் சொல்லுகின்றன. ஆன்மா என்கிற ஒருமுதல் அங்கீகரிக்கப்படாவிட்டால் மேலே சொல்லப்பட்ட சாத்திர ஒழுங்குகளால் என்ன பயன் உண்டாகும்? ஆதலாலும், மாயை வயப்பட்டுக் குற்றம் புரியும் ஆன்மாக்கள் உள என்பது சித்தாந்தமாம் எனக் கொள்வதில் தடையேது? இனி, சிவாத்துவிதியர் காட்டிய சில மேற்கோளுண்மைகளைப் பரிசீலனை செய்வோம்.

உலகு ஏழ் என இறை பல ஆம் தன்மை:

திருவாசகத்தே மணிவாசகப்பெருமான் இறைவன் ஒருவனே ஏழ் உலகங்களாகவும் திசைகள் பத்து

என்னும்படியாகவும் நின்றான் என அநேகன் ஆம் தன்மைக்குக் கூறிக்காட்டியுள்ளார். இதனில் நின்றான் என்பது தான் பலவாகத் துண்டுபட்டு நின்றான் எனக் குறிக்காது. ஏழுலகங்களும், திசைபத்தும் அவ்வொருவன் வியாபகத்தே விளங்குமாறு பிரேரகமாய் நின்றான் எனப் பொருள்படுவதாம். எனவே நின்றான் என்பது நிற்பித்தான் என்ற குறிப்புடையதாகும். ஏழு என்றும் பத்து என்றும் வரையறையிட்டுச் சொல்வோர் நாமே யல்லால் இறைவன் அல்லன். அவன் எல்லையற்றவனாதலால் இவ்வுலகங்களுள்ளும் திசைகளுள்ளும் கட்டுப்பட்டு நிற்பானல்லன். பின், இவ்வாறு சொல்லப் பட்டிருப்பதன் கருத்தை உவமை வழியால் கவனிப் போம். "குடங்கள் சட்டிகள் கலசங்கள் செய்யப் பட்ட குயவனாயினன் இவன்" என்று கூறினால், குயவன்பாத்திரங்களாக ஆயினனல்லன். பாத்திரங்கள் குயவனை இயக்குவனவும் ஆகா. ஆயினன் என்பது ஆக்கினன் என்று பொருள்படும் என்பது இலக்கணங் களின் உடம்பாடாகும். இவ்வாறே தேவாரத்துள் ளும் "ஆனாய்" என்ற சொல் பொருள்படுவதாகும். இதனால், சிவன், மண்ணாகவும் பிறவாகவும் ஆயினான் என்னப்படாது; அவ்வாறு அவன் ஆகான் என்பதே கருதப்படவேண்டும். இவையெல்லாம் ஆக்குகின்றா னவன் சிவன் என்க.

'தாமே தானாகச்செய்யும்" என்னும் திருக்கடைக் காப்பில் உள்ள "தாமே" என்னும் சொல்லில் உள்ள ஏகாரம், தன்னைச் செய்யவல்லார் எவரும் இல்லாத படி தான் ஒப்பற்றவன் என்ற பொருளைத் தருவ தாகும். இதனால், எவரும் தாங்கள் அழிந்தார்களும் இலர்; சிவமுதல் ஆனார்களும் இலர் என நாம்

தெரியலாம். யாரும் சிவமுதலையின்றிக் காரியப் படுதலும் இல்லை; அம்முதலுக்கு வேறாக இருந்தாரும் இல்லை என்பது இங்கு நாம் கருதவேண்டுவதாகும்.

"காயாகிப் பழமாகி..."

இத்திருவாக்கினால் காயும் பழமும் அவற்றின் நின்ற இரசமும் அந்த இரசங்களைப் புசிப்போனும் ஆகிய எல்லாம் சிவனாலே உண்டாகிய பொருள்கள்; இவற்றிற்கெல்லாம் சிவமே முதன்மையானவன் என்பது கருத்தாக அறியப்படவேண்டும். நுகர்வோன் என்பது அப்பழங்களின் இரசத்தை அனுபவிப்பவனாகிய மனிதன் ஆவான் எனப் பொருள்தருவதாம். சிவன், பசி உடையனல்லன்; அவன் நுகரவேண்டுபவனும் ஆகான் என்பது தெளிவாம். இதனால் சிவனுடைய கர்த்தாத்தன்மை புலப்படுத்தப்பட்டது என்க.

"அறிவானும் தானே..."

இறைவன் மாயை அற்றவன், ஆன்மா மாயை மயக்குடையது. ஆகவே பிரபஞ்சம் எல்லாவற்றையும் மயக்கமற அறிபவனும், அறியும் அறிவுப்பக்குவம் அடையப் பெற்றார்க்கு அறிவிப்பவனும், இவர்கள் அறிவுக்குள் அறிவாய் நின்று அறியச்செய்பவனும், முத்தி எய்திய ஆன்மாக்களுக்கு அறியப்படும் பொருளாக இருப்பவனும், பிரபஞ்சமெல்லாம் தனக்கொரு திருமேனியாக உடைய சிவபெருமானவன் என்பது இத்திருவந்தாதிப் பாடலின் கருத்தாகும். இதனால் இறைவன்தன்மை புலனாக்கப்பட்டதாகும்.

"தருபொருள் கொள்பொருள்"

கொடுக்கப்பட்ட பொருள், கொள்ளப்பட்ட பொருள், கொடுப்பவன், கொள்பவன் எல்லாம் ஒரு பொருளே என்பது பொருந்தாது. இவ்வெல்லாம் ஒரேபொருள் என்று எவரும் சொல்லமாட்டார். ஒரு பொருளைப்பெற விரும்புபவனுக்கு அவனுக்கு விருப்ப மில்லாத மாறுபட்ட பொருள் கிட்டுகிறது. எல்லாம் ஒன்றுயிருப்பதானுல் இவன் நினைத்ததே கிடைக்கப் பெறுவானல்லவா? நினைத்தபொழுது கிடைக்கவும் காண்கிலோம். எல்லாம் ஒன்றென்றுல், நரகம் என்ப தொன்று இருக்கவேமுடியாது. குன்மம், சூலைமுதலிய நோய்களை ஒருவன் அநுபவிக்க விரும்பவில்லை. என்று லும், அவன் உடம்பில் உண்டாகிய அந்நோய்கள் அவனைப்பொருந்தி அநுபவிக்கச் செய்கின்றன. அநுப விப்பது ஆன்மா அல்ல; சிவம்தான் என்றுல், வேண் டியபொருள் கிடைக்காமையும், வேண்டாதநோய் கிட்டுதலும் இப்படி மாறுபட நிகழ்வது சிவத்துக்கு அன்று; ஆன்மாவுக்கே ஆம். சத்தி சிவங்கட்கே இந்த அநுபவம் என்று சொன்னுல், சூரியன் இருளை அறியான்; இருளும் சூரியனை அறியாது. கண்தான் இரண்டையும் அறிவது. அதுபோலச் சத்தி சிவங்கள் பிரபஞ்சத்தை அறியமாட்டா; பிரபஞ்சமும் சத்தி சிவத்தை அறியாது. ஆதலால், பிரபஞ்சத்தை அறி வதும் சிவத்தை அறிவதுமாகிய இருவித அனுபவமுங் கொண்டதொரு பொருள் உண்டு. அது ஆன்மாவே என்னத் தடையில்லையன்றே! சுட்டியறிதலும், தடை யற எல்லாவற்றையும் இருந்தாங்கறிய முடியாமையும் ஆகிய இரண்டு நீர்மைகளும் சிவத்தியல்பல்ல. ஆன்ம வியல்பே ஆகும். இதைவிட்டு, ஆன்மா ஒருமுதல்

சிவம் ஒருமுதல் என்று தனித்தனி முதல்கள் கொள்வது குற்றமுடைய மார்க்கம் என்று சிவாத்துவிதியர் கூறுதல் நல்வழியாகிய சாயுச்சியப்பேற்றுக்கு உரிய தன்றும் என்க.

## முத்திநிலை மறுப்பு

நான் என்னும் ஆன்மா, அவன் என்னும் சிவம், குற்றம், நன்மை, ஆன்மா சிவன் ஆகவேண்டும் என்கை ஆகிய இவைகள் யாவும், "எல்லாம் ஒன்றே" என்பவருடைய சாதனத்துக்கு உட்பட்டவையல்ல. சிவனோடு ஒன்றாய்க் கூடுவதான சாயுச்சியம் என்னும் பதம், திரிபதார்த்த நிச்சயம் உள்ளவர்கட்கே உரிய தாகும். "நின்றதே நிலையாகக் கொண்டொழுகுவதே முத்தி" என்கிற இந்த வழி எந்த ஆகமத்திலும் கூறப் பட்டதன்று. அவ்வளவு எளிதில் மோட்சம் கிடைப் பதாயிருப்பின் வீடுபெறுதல் அரிது என்று சொல்லப் படவேண்டுவதில்லை; யாவருமே எளிதில் அடையப் பெறலாம். ஆசாரியன் உபதேசப்படி நில்லாமல், தன் இஷ்டப்படி நடப்பதன் பலனே முத்திதரும் என்பது பொருந்தாது. இந்த உடம்பையும் பிரபஞ்சத்தையும் நிலையுடையவை என எண்ணிக்கொண்டு தகாதகாரிய மெல்லாம் செய்து ஒழுகுதல் உலகாயதன் மேற் கொள்ளும் ஒழுக்கமாகுமல்லால் சைவர் கொள்ளு வது ஆகாது.

சுவர் இல்லாமல் சித்திரம் எழுதுவது எவருக்கும் ஆகாது. தனு கரண புவன போகங்கள் ஆன்மா விற்கு உரியவை என்று சொன்னால் இவை சிவ னுக்குத்தேவையில்லை; அவன் விசுவாதீதன் என்பது

கருத்தாம். இவையெல்லாம் ஆன்மாவிற்குத் தேவை என்பதனால் அவை ஆன்மாவிடம் இல்லையானவை என்பதும் பெறப்படும்.

சற்றும் அறிவற்றவர்கட்கும் கர்த்தாவின் அருளானது அறிவைக் கொடுக்கும் என்பது ஒரு சிறிதும் பொருந்தாது. எந்த தந்தையும் வயதுவந்தபிள்ளைக்கே ஆஸ்தியைக் கொடுப்பான். குழந்தையிடம் ஒப்படைக்கமாட்டான். மேலும் இருளில் இருக்கும் குருடன் ஒருவனைக் காண விரும்பிவந்தவன் விளக்கைக் கொண்டுவந்து காண்பான். ஆனால், அந்த விளக்கைக் குருடன்கையில் தந்து, தன்னைக் காணும்படிச் சொன்னால், கண்ணின்மையால் குருடன், விளக்கிருந்தும் எப்படிக் காணமுடியும்? குருடனும் விளக்கின் உதவியால் கண்டான் என்பதுபோ லுள்ளது அறிவற்றவர்க்கும் கர்த்தாவின் அருள் அறிவை நிரேதுகமாக உதவும் என்று சொல்வது. ஆகவே பக்குவ அறிவற்றவர்க்குக் கர்த்தா அறிவைக் கொடுக்க வரமாட்டான். அப்படி இறைவன் தன் அருள் தன்மையால் அறிவற்றவர்க்கும் அறிவைக் கொடுப்பான் என்றால், கர்த்தாவும் ஆன்மாவைப் போல் அறிவில்லாதவன் என்றே கருதப்படுவன்.

எல்லாம் சித்துப்பொருளேயாதலால் கருவிகளைக் கொண்டு சிவஞானிகள் தேகாதிப் பிரபஞ்சத்தை நன்றாக அநுபவிக்கும் காட்சியை வேண்டியிருப்பார் என்பது பொருந்தாது. கருவிகளைக்கொண்டு இவ்வுலகில் அறியும் அறிவெல்லாம் சிவமே என்பதும் சரியன்று. இந்திரியங்கள் சடமாதலால் அவை அறிய மாட்டா. எல்லாவற்றையும் பிரமம் அறிவது என்கிற

மாயாவாதியின் கொள்கையானது இச் சிவாத்துவிதியரின் கொள்கை யளவு குற்றமன்று என்று கொள்ளலாம். ஏனெனில், மாயாவாதியானவன் பிரமத்தை அறிவு என்றும், பிரபஞ்சத்தைச் சடம் என்றேனும் ஒப்புக்கொள்ளுகிறவனாக உள்ளான். சிவாத்துவிதியோ எல்லாவற்றையும் சித்துப்பொருள் என்று கூறுகிறான். ஆதலால், இது பெருங்குற்றமாம். மாயாவாதி, பதினான்கு கருவிகளும் மூன்று அவத்தைகளும் கூறியுள்ளான். சிவாத்துவிதியரோ அவனிலும் வேறு இருபத்திரண்டு கருவிகளும், சைவர்கள் கூறுவது போலவே ஐந்து அவத்தைகளும் மூன்று மலங்களும், கர்த்தாவும், ஆன்மாவும் உண்டு என்கின்றனர். அப்படியெல்லாம் கூறிவிட்டு உடனே எல்லாம் சிவன் என்ற ஒரேபொருள்தான் என்று கூறுகின்றார். தாய், மனைவி, வேலைக்காரி, தமக்கை என்றெல்லாம் வேறு வேறாக உறவுமுறையிட்டு மேலுக்குக் கூறிவிட்டு அவரையெல்லாம் ஒரேவித மகளிர்தாம் என்று தூர்த்தர்போலக் கொண்டனுபவிக்கக் கருதினால் அது கொடுந்தொழிலாகும். ஆகவே சிவாத்துவிதவாதியர் ஞானம் இம்மாதிரியான குற்றமுடையதாகும்.

உண்மையாய்க் கூறினால், அருளே ஆன்மாக்கட்கு உபகரித்து நிற்கின்றது. ஆன்மாக்கட்குத் தமக்கெனச் சுதந்தரம் கிடையாது; அடிமைப்பட்டிருப்பனவாகும். கருத்தா எவற்றிலும் நிறைந்து நிற்கும். என்றாலும் ஒன்றிலும் தாக்குறாது நிற்பதாம். அழிவில்லாப் பாசமானது எல்லா ஆன்மாக்களையும் பந்தித்து நிற்பதாகும். இவைகளையெல்லாம் பற்றின உண்மை முறைமையினை அறிவதே தக்கநெறியாம்.

அப்படியில்லாமல், ஆன்மாவுக்கு அறிவு கிடை யாது; அறிவது சிவனே என்று சொன்னால், இந்திரிய வாதனை கெட்டது என்று சொல்லிவிட்டுப் பிறகு இந்திரியவாதனையையே ஆசாரமாகக் கொள்வது போன்றது ஆகும். இப்படி இந்திரிய வாதனையை ஆசாரமாகக்கொண்டு பெத்தநிலையில் ஒழுகினால் முத்தி நிலையிலும் இத்னினும் எட்டுமடங்கு அநாசாரம் புரியும் மயக்கந்தான் இருப்பதாகும். ஆதலால், இப் படிப்பட்ட உண்மையறியாததும், முன்பின் மாறு பாடு உடையதுமான மயக்கத்தைத்தருகிற அஞ்ஞா னத்தையே அதனையுடைய சிவாத்துவிதியரை வெறுப் பதினும் அதிகமாக வெறுக்கவேண்டும். அதுதான் நேர்மை. ஆதலால், அஞ்ஞானம் நீங்குவதற்கு வேண் டுவதாயிருக்கிற சத்தியமான ஞானத்தை விவரமாக அறிதலே செய்யத்தக்க புத்திசாலித்தனமான முறை என்னலாம்.

நிமித்தகாரண பரிணமவாதி நிராகரணம்
முற்றிற்று.

## செய்யுள்—19.

## 1X—அ

## சைவவாதி சங்கற்பம்

### பெத்தநிலை

அறிவாய் அறியும் அறிவுயிர் கேவலத்து
அறிவிலன் இருளொடும் பிறிவிலன் அண்ணல்
கலைமுத லாக நிலவிய கருவிகள்
விளக்கென உதவும் துளக்கறப் பொருந்தி
இருவினை நுகர்வில் வருவினை செய்து

### முத்திநிலை

மாறிப் பிறந்து வருநெடுங் காலத்து
இருள்மல பாகமும் சத்தி நிபாதமும்
மருவுழி அருள்உரு மன்னவன் அணைந்து
செல்கதி ஆய்ந்து பல்பணிப் படுத்திக்
கருவியும் மலமும் பிரிவுறப் பிரியா
ஞானம் நல்கலும் தான்அது நோக்கித்
தன்னையும் அதனையும் தன்முதற் பொருளையும்
இன்னஎன்(று) அறியா இருவரும் முயங்கி
ஒன்றாய் உறுபயன் உவப்பும்
இன்றாய் நிற்கும் இதுசிவ கதியே;

பொழிப்பு

முன்முறையில் அறிக.

விளக்கம்

இதுகாறும் அகச்சமயம் ஆறன் சங்கற்பங்களும் நிராகரணங்களும் கூறிவந்த ஆசிரியர், கருத்துவகையால் சித்தாந்தசைவம் போல்வதாய் நுட்பப்பொருளுணராமை மாத்திரத்தால் வேறு கூறப்படுவதான சுத்தசைவவாதம் பற்றிய தடை விடைகளைக் கூறுகின்றாரவர். இனிச் சுத்தசைவர் கொள்கைகளைச் சுருக்கமாகக் காண்போம். அவை வருமாறு:-

முதல்வனைக் கூடப்பெற்ற உயிர், அம் முதல்வனோடு ஒன்றாய்விடும். ஆதலால், முத்திநிலையில் அவன் அருளால் உயிர் அறியும் என்பதும், முதல்வன் அறியப்படுவன் என்பதும் கூடாது. சிவபெருமானோடுகூடிய பொழுது உயிர் ஒன்றாய்விடுதலால் சிவானந்தத்தை உயிர் அனுபவிக்கும் என்பது இல்லை. உடம்புள்ள வரையிலும் வினைப்பயனது முயற்சியில்லாமல் வாராது. ஆதலால், வினைப்பயனும் முயற்சியும் உடம்புள்ள வரையில் எவ்வழியாலும் நீக்குதல் முடியாது. எனவே ஏகனாய் நிற்றற்கு இந்த இரண்டும் தடையாம். இந்தத் தடையைக் கடத்தலியலாது. ஆகவே, பதி பசு பாசம் என்ற மூன்று பொருள்கள் உண்டு; அவை மூன்றிற்கும் மூன்று அறிவுண்டு; இந்த மூன்று அறிவும் கெட்டு ஓரறிவாவதே முத்தி என்று இச்சுத்த சைவம், பெறுவானும் பேறுமில்லதான ஒரு நெறியினை வகுத்துரைப்பதாம் என்பர். "சத்தும் அசத்தும்

சதசத்தும் தான் கண்டு'' என்னும் திருமந்திரப்பாடல் இங்குக் காண்டல் நன்றாம்.

## பெத்தநிலை

ஆன்மாக்கட்குக் கேவலம் சகலம் சுத்தம் என்கிற மூன்று நிலைகள் உண்டு. இவற்றுள் கேவலம் எனப் படும் நிலையில் ஆன்மா எதனையும் அறியாது. ஆணவ மலத்தோடு பந்திப்புண்டு கிடக்கும். இங்ஙனம் அறி வின்றியும் இருளொடு பிரிப்பின்றியும் உள்ள நிலையே கேவலமாம். ''காரிட்ட ஆணவக் கருவறையில் அறி வற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டு இருந்த'' நிலை என்பர் இதனைத் தாயுமானார். ஆணவம் எனப்படும் சகசமலத்துடன் உயிரானது தனித்துக் கிடப்பதால் இதனைக் கேவலநிலை என்பர். கேவலம் = தனிமை. இங்குக் கூறப்பட்டது மருட்கேவலமாம். அதாவது, அறிவை மறைத்து மயக்கத்தைச் செய்யும் ஆணவமலத்தால் அறிதியேகூடி உயிர் அறிவின்றிக் கிடக்கும் நிலை என்பதாம். ஆணவம் உயிருடன், செம்பிற் களிம்புபோல இயல்பாகவே விரவியுள்ளது. அது சம அளவில் விரவியிருத்தலால், ஆணவத்தை உயிரும் வெல்ல முடியவில்லை. ஆணவமும் உயிரைக் கெடுத்துவிடக் கூடவில்லை. இவ்விரண்டுள் ஏதேனும் ஒன்றிற்குத் துணை தரப்பட்டால் ஒன்றை ஒன்றை வென்று தீர்க்கும். இவற்றுள் ஆணவம் என்பது சடம். உயிர் என்பது சித்து. ஆதலால், தன்னோடு சித்துத் தன்மையில் ஒருபுடை, உயிர் ஒத்து இருத் தலால் பரமகருணையனாகிய சிவன் உயிருக்குத் துணையாகிறான். அதாவது, அவ்வுயிர், ஆணவத்தின்

நீங்குதற்காக அதனைச் சகலநிலைக்குட்படுத்தியுதவு கிறான். இறைவன், உயிருக்கு அறிவு விளக்கம் உண் டாவதற்காகக் கலை முதலாக நிலவிய கருவிகளை விளக்குப்போலும் உதவுகின்றான். இவ்வாறு ஆன்மா, கருவிகளோடு கூட்டம் பெற்ற நிலையே சகலநிலை எனப்படும். இந்த நிலை ஏற்பட்டதுமுதல் ஆன்மா வுக்குச் சிறிதளவு அறிவுவிளக்கம் உண்டாகின்றது. இதனாலேயே அறிவு ஆய் அறியும் அறிவு உயிர் எனப் பட்டது.

இப்படிச் சரீர முதலான கருவிகளுடன் கூடிய ஆன்மா அந்தக்கருவிகளோடும் அசைவு அற இருந்து பிராரத்த கன்மமான புண்ணிய பாவங்களைப் புசித்து வரும். அப்படிப் புசித்துவரும்போதே ஆகாமியம் எனப்படும் புதிய கன்மத்தையும் தேடிக்கொள்ளும். இந்தக் கருமச் சுழலினாலே, கன்மத்துக்கு ஈடான பிறப்புக்களில் ஆன்மா அச்சுமாறிப் பிறந்துவரும். அப்படி வருங்காலத்துச் சிவபுண்ணியம் வாய்க்கப் பெறும். அதனால், மலம் பக்குவப்படும், இதனால் திருவருள்பெறுதல் நிகழும். இவ்வளவும். பெத்த நிலையில் ஆன்மாவுக்கு ஏற்படும் சம்பவங்களாம் எனச் சுருக்கமாகக் கூறலாம்.

## முத்திநிலை

மேலே கூறப்பட்டபடி, சத்திநிபாத சம்பவத் தின்போது அருளே திருமேனியாக உடைய கர்த்தா ஆசாரியமூர்த்தமாக வந்து ஆன்மா அடையவேண்டி யுள்ள முத்திக்கு ஏதுவை ஆய்ந்து சரியை முதலாக

உள்ள ஞானமார்க்கத்தின் தவத்துறையிலே நிறுத்தி யருளும். இப்படி உண்மைப்பட்ட சரியை கிரியை யோகங்களை முற்ற ஆன்மா செய்து அல்லது மேற் கொண்டு முடித்தலும், கேவலம் சகலம் ஆகிய இரண்டு அவத்தைகளையும் நீக்கி அநாதியே ஆன்மா வுக்கு உபகரித்து வருவதான உண்மை ஞானத்தை ஆசாரியன் தந்தருளும். அப்படிச் செய்தவுடனே, இந்த ஆன்மா, உண்மைஞானத்தை எய்தி ஞாதுரு எனப்படுகிற தன்னையும் - ஞானம் ஆகிய உண்மை யறிவையும் - ஞானத்திற்கு முதலாகவுள்ள ஞேயத் தையும் ஆக இந்த மூன்று முதல்களையும் சுட்டியறி யாமல் ஆன்மாவும் சிவமும் தம்மிற்கூடி இரண்டும் ஒருமுதலாகிவிடும். இதனுல் பெறுவானும் பேறும் இலவாம். இதுவே உண்மையின் சிவசாயுச்சியம் எனப்படும் என்பது சைவவாதியின் சங்கற்பமாம். கேவலம் – சகலம் - சுத்தம் – தத்துவங்கள் - கருவி கள் - சரியையாதிகள் - உண்மை ஞானநிலைகள் ஆகிய இவை முதலியனபற்றிய விவரங்களை மெய்கண்ட சாத்திரத்துப் பிறநூலுரைகளால் தெளியலாகும். விரிவு அஞ்சி ஈண்டு அவை விவரிக்கப்பட்டில.

சைவவாதி சங்கற்பம் முற்றிற்று.

## செய்யுள்—20.

## IX—ஆ

## சைவவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

இதுகதி ஆக முதல்அறி(வு) உயிரேல்
பொறிபுலன் நீங்க அறி(வு)உயிர் அன்றே
அடைகாய் நூறின் இடைசேர் சிவப்பென
இந்தியத் தொகையின் வந்(து)அறிவு ஒன்றுநின்(று)
இன்(று)ஆம் என்றல் அன்றே எந்தை
அறிவிலன் அதீதச் செறிவில் என்றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலேவும்
மன்வயின் நிகழா மலம்இருள் இறைஒளி
ஆன்மா விளக்கில் தகும்மருள் கலாதிகள்
ஈனம்இல் இவனிடத்(து) எவ்வா(று) இசைந்தன
இசைந்த தாயினும் இசையா தாயினும்
அசைந்திடும் முத்தி சாதனம் அவமே.

### முத்தி மறுப்பு

சத்தி நிபாதமோ தகுமல பாகமோ
உய்த்த காரண காரியம் ஓதுக
பாகம் காரணம் ஆகில் மற்றது
காலஅு வதியின் காயஅு வதியின்
மேலாம் என்னும் வினைஉறும் அவதியில்
துயர்என உயிர்க்குத் தோன்றிடும் அவதியில்

நயம்மிகும் இறைவன் நல்கிடும் அவதியில்
ஏதிற் கூடும் ஓதுக இருவினை
ஒத்த எல்லையில் வைத்தனர் என்னில்
அருவினை தூக்க வருவினை நில்லா(து)
ஒருவினை புரிகால் இருவினை ஆகா
ஒப்புறு மாறு செப்புக தேசிகன்
அருள்உரு என்ற பொருளினை ஆயின்
மாயா உருவன் மாயா உருவினை
ஏயான் ஏய்ந்தவர் எம்ம னோரே
பல்பணி ஞான காரணம் என்னில்
தொல்பணி தொறும்பயன் தொடுப்பத னாலும்
ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும்
அரசர் ஆய தருணத் தலைவரும்
முதிர்பர சமயத்(து) இதம்உறும் அரசரும்
ஞானம் பெற்ற நன்மையி னாலும்
ஈனம்இல் பணிஅருட்(கு) ஏதுஅன்(று) என்றால்
ஞானஉற் பத்தி நிமித்தம் இத்தொழில்என
ஏனோர்க்(கு) இறைநூல் இயம்பிற்(று) என்னும்
கருவியும் மலமும் பிரிவுற அருள்தரும்
என்றனை கேவலத்(து) ஏதும் அறிவிலன்
துன்றிய சகலத்(து) அருள்நிலை தோன்று(து)
எவ்அவத் தையில் இறைஅருள் பெறுகுவம்
செவ்விய ஞான தரிசனம் ஆவது
நால்வகை மாயைப் பால்வரு ஞானம்
பண்டை ஞானம் இதுவறி(து) ஆவரக்
கண்ட ஞானம் இதுவரக் காணில்
ஈன ஞானிகள் என்போர் யாரும்இல்

ஞான வேற்றுமை நாடலும் அரிதே
தானும் ஞானமும் தலைவனும் என்றனை
ஆனபின் இவனும் இவனது ஞானமும்
பாசமும் பாச ஞானமும் என்றிவை
பேசுவர் ஒன்றாப் பெற்றியர் ஆகலின்
மும்மைப் பொருட்கும் மும்மைத் தன்மை
செம்மைத்(து) என்னில் செலவுகள் எழுதுக
இருவரும் கூடி ஒருபயன் ஆய்த்(து)என்(று)
அருளினை இஆறு அபேதிகள் நிலையே
பதிபசு பாசம் முதிர்அறி வுகளுடன்
ஆறுஆம் முன்னர்க் கூறாப் பின்னர்
இருபொருள் நீத்துமற்(று) ஒருநால் வகையையும்
ஈனம்இல் ஞாதுரு ஞானம் ஞேயம்என்(று)
இசைய மூன்றாய்ப் பசுபதி என்(று)அவற்(று)
இரண்டாய் இரண்டும் ஒன்றின் ஒன்(று)ஆகத்
திரண்(டு)ஆம் பயன்எனும் திருவருள் தெளியில்
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்
என்றிறை இயற்கை இயம்புதல் தகுமே
ஒன்றாம் என்றல் அன்றியும் உவப்பும்
இன்றாம் என்றால் என்பயன் இயம்புக

## முடிபு

என்றனை வினவும் யாவும் விளங்க
வென்றிகொள் கருத்தில் வேண்டினை ஆயின்
நதிக்கரை ஆன்எனக் கொதித்(து)அல மந்து
வெண்ணெயம் பதிதிகழ் மெய்கண் டவன்அருள்
உள்நிலை உடையோன் ஒருவன் உரைத்த

தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமிழ் உண்மையை
அருளுடன் ஆய்ந்து கொள்ளத்
திருவருள் வினவல் திருந்திடும் அன்றே.

## பொழிப்பு

முன்புபோலக்கொள்க.

## விளக்கம்

### பெத்தநிலை மறுப்பு

ஆன்மா அநாதியில் அறிவாயிருக்கும் பொருளே ஆகும் என்று சைவவாதியர் சாற்றியதைச் சித்தாந்தியர் கேட்டு முதற்கண் அதுபற்றிய உண்மையை உணர்த்தலுறுகின்றாராவர்.

ஆன்மா, இந்திரியங்களைக் கூடினபோதுதான் அறியமுடிகிறது; அவை நீங்கினபோது அறியக் காணோமே. ஆதலால், ஆன்மாவுக்கு அறிவு அநாதியிலே உண்டென்பது பொருந்துமா ? இல்லையே. ஒருவேளை இந்திரியக் கூட்டம் ஏற்பட்டால் அறிவதும், நீக்கம் ஏற்பட்டால் அறியாமையுடைத்தாயிருப்பதும் ஆன்மாவின் இயல்பு என்று சொல்லக் கூடும். அப்படியானால், அவ்வித அறிவு இந்திரியக் கூட்டத்தின் எழுந்த விளைவென்றுதான் சொல்லப் படவேண்டும். ஏனெனில், பாக்கு, வெற்றிலை, சுண்ணாம்பு ஆகிய இவை மத்திக்கப்பட்டபோது அவற்றின் தன்மை தோன்றப்பெறாமல் இடையே ஒரு சிவப்பு நிறம் எழுகின்றது; இது போலவே

இந்திரியக்கூட்டத்தின் இடையே அறிவு தோன்றும்; பிறகு நீக்கத்தின் அழியும் என்று கணபங்கவாதியாகிய பவுத்தரும் கூறுவர். அதற்கு என்ன சமாதானம் கூறமுடியும்? ஆதலால் ஆன்மாவுக்கு அறிவு அநாதியானதென்பது எப்படி ஒப்புக்கொள்ளத் தக்கதாகும்? ஆன்மா. அறிவுள்ளதுதான்; ஆனால் மலத்தினல் செறிப்புண்டபோது அறிவில்லை என்று முன்னுக்குப்பின் மலைவுபடக் கூறுதல் பொருத்தமற்றதாகும்.

ஆணவமலமானது சுத்த இருளாய் இருப்பது; கர்த்தாவோ என்றால் மகா பிரகாசமாய் இருப்பவன். ஆன்மாவுக்கு அறிவு விளங்குதற்குக் கருவியாய் இருக்கும் கலை முதலிய தத்துவங்கள் மாயா காரியமாய் இருப்பன. ஆதலால் மயக்கமுடையவை; ஆகவே, ஆன்மாவின் கேவலநிலையில் அதாவது அறிவில்லாதிருக்கும் நிலையில் இந்தக்கருவிகள் எப்படிச் சென்று ஆன்மாவினிடம் பொருந்தின? ஆகவே, கருவிகள் கூடப்பெற்று ஆன்மா அறியலுற்ற விவரமும் அல்லது அறிவின்றிக் கேவலத்தில் கிடந்த நிலையும் தெளிவுறச் சொல்லப்படவில்லை. அவ்வாறிருக்கும்போது, முத்தி சாதன நிலைமைபற்றிச் சைவவாதியர் கூறுவது தெளிவுறுவது எப்படி முடியும்? ஆதலால், சைவவாதியர் கொள்கை தெளிவில்லாதிருப்பது என்னலாம்.

## முத்திநிலை மறுப்பு

முத்திப்பேற்றுக்குரிய இலக்கணம் கூறுகையில் சைவவாதியர், முதற்கண் மலபரிபாகம் வேண்டும் என்றார். அப்பால் சத்திநிபாதம் மருவும் என்றார். இவற்றுள் மலபரிபாகம் காரணமாகச் சத்திநிபாதம்

உண்டாவதா? அல்லது சத்திநிபாதம் காரணமாக மலபரிபாகம் விளைவதா? இவற்றில் காரணம் எது? காரியம் எது? என்பது தெளிவுறக் காட்டப்படவில்லை.

ஒருவேளை மலபரிபாகம் காரணமாகச் சத்திநிபாதம் உண்டாகுமென்றால், அது ஆன்மா கணக்கற்ற சரீரங்களை எடுத்துவருவதால் எந்தச்சரீரத்தில் உண்டாவது? அந்தச் சரீரத்தில் வாழ்ந்துவரும்காலத்திலே எந்தக் காலத்திலே நிகழ்வது? அந்தக் காலத்தில் புண்ணிய பாவங்கள் இரண்டும் துலை ஒப்பாகவந்த நேரத்தில் ஆவதா? அல்லது சனனமும் துக்கமுடையதென்ற உணர்ச்சி ஆன்மாவுக்கு நேரிட்ட சமயத்தில் உண்டாவதா? ஒருவேளை, கடவுளே இரக்கம் பாராட்டி இன்ன சந்தர்ப்பத்தில் ஆன்மாவைக் காத்தருள்வார் என்றுள்ள எல்லையில் நேருவதா? இவற்றுள் எது என்பது தெளிவாகக் கூறப்படவேண்டும்.

புண்ணியமும் பாவமும் ஆகிய இரண்டும் துலை ஒத்தகாலத்தில் மலபரிபாகம் விளைவதாகும் என்று சொல்வதானால், புண்ணிய பாவங்கள் அருவமானவை ஆதலால் அவற்றை எப்படித் துலையில் தட்டுக்கு ஒன்றாகவைத்து எடைபோட்டுச் சமம் காண்பது இயலும்? உருவப்பொருளாக இருப்பின் அவ்வாறு செய்யலாம். அப்படியில்லாதபோது எப்படிக் காண முடியும்? அன்றியும், ஒரு வினையைச் செய்யும்போது அதில் உள்ள பாவம் பாதியாகவும், புண்ணியம் பாதியாகவும் எப்படிப் பிரியும்? புண்ணியம், தன் அளவுக்குப் புண்ணியமாகவே இருக்கும். பாவம் தன் அளவுக்குப் பாவமாகவேதான் இருக்கும். ஆகவே, இவை

துலையொத்தல் என்பது எப்படிக்கூடும்? ஆகவே, இருவினை ஒப்புப்பற்றிய சைவவாதியர் கருத்தும் தெளிவில்லாததே ஆகும். அசாத்தியமானதாகவும் இருப்பதாகும்.

இனி, ஆசாரியனுடைய வடிவு அருள்வடிவா யிருப்பதென்று சைவவாதியர் கூறுவர். அழியாத் திருமேனியைக்கொண்டவன் கர்த்தா. அவன் அழியும் மாயா சரீரத்தை ஒருபோதும் பொருந்தமாட்டான். ஒருவேளை ஆன்மாக்களைக் காக்கும்பொருட்டுப் பொருந்துவன் என்று சொன்னால், யாரொருவர் இந்த மாயா சரீரமுடையவரோ அவர் ஆன்மவர்க்கத்தில் ஒருவர் ஆவர். ஆகவே, ஆசாரியனுடைய வெளிப் பாடுபற்றிய சைவவாதியர் கருத்தும் தெளிவில்லை எனப்படும்.

ஒருவன், சரியை கிரியை யோகங்களைச் செய்தால் ஞானம் உண்டாகும் என்றால், அவற்றிற்குப் பலனாக இருப்பன முறையே சாலோகம் - சாமீபம் - சாரூபம் என்கின்ற முத்திகளாதலாலே அவற்றை ஆன்மா அனுபவிக்கலுற்று அந்த அந்தப் புண்ணியமும் கழிந்து போய்விடுமே அல்லாமல் ஞானத்தை எப்படி உண் டாக்கும் என்பது தெளிவுபடவில்லை. மேலும், மேலே சொல்லப்பட்ட சரியை முதலனவற்றைக் கொஞ்சமும் செய்யாத சீகாழித் தலைவரான திருஞான சம்பந்தரும், அரசகோலம் பூண்டு வாலிபத்திலே நின்ற சுந்தரப்பெருமாள்நாயனாரும், அமணசமயம் புக்குப் பின் சைவசமயத்துக்குத் திரும்பிய திருநாவுக்கரை யரும் எங்ஙனம் ஞானம் எய்தப்பெற்றவராயினர் என்பது விளங்காமற்போம், ஆகவே, ஞானத்துக்குக்

காரணம் பதியே அல்லாமல் சரியையாதிகள் காரண மல்ல என்று ஏற்படுகின்றது. எனவே. மேற்கூறப் பட்ட இவைகள் ஞானத்தைப் பெறுதற்கு நிமித்த மாத்திரையேயாகும். அவை தாமே ஞானத்தைக் கொடுப்பன அல்ல. ஆதலால், அவை ஞானம் அடையும்பொருட்டுச் செய்யப்படும் தவமே ஆகும் என்னவேண்டும்.

அறிவதற்குக் கருவியாக இருப்பவைகளும், அறி யாமையாகிய மலமும் அருட்பிரகாசம் உண்டாவதால் நீங்கும் என்று சைவவாதியர் சாற்றுவர். கேவல அவத்தையின்போது ஆன்மா ஒன்றும் அறிவதில்லை என்பது யாவர்க்கும் உடம்பாடாம். ஆதலால், அந்த நிலையில் அருட்பிரகாசம் என்பது உண்டாவதற்கு ஏது இல்லை. சகல அவத்தையிலோ ஆன்மா கருவி களின் துணைகொண்டு அறிவதாகிய சுட்டறிவும் சிற்றறிவுமே பெற்றுள்ளது. ஆதலால், சகலாவத்தை யிலும் அருட்பிரகாசம் வாய்க்க வழியில்லை. இந்த இரண்டு அவத்தைகளும் ஞானம் அல்லது கர்த்தாவின் திருவருளைப்பெற வழியில்லை என்றால் ஆன்மா எந்தக் காலத்திலே கர்த்தாவின் திருவருளைப் பெறமுடிவது? ஆகவே அருட்பிரகாச விளைவுபற்றிச் சைவவாதியர் சொல்வதும் பொருந்தவில்லை என்னலாம்.

குற்றமில்லாத ஞானதரிசனம் என்று சொல்லப் படுவது எப்பொழுதும் நிலையாயிருப்பதான ஞான மாம். தனு கரணம் புவனம் போகம் என்ற இவற்றோடு ஆன்மா கூடியிருக்கும்போது அடையும்ஞானம் நிலை யானதாக இல்லை. ஒருவேளை இப்படிப்பட்ட மாயை யினால் வரும் ஞானம்தான் மெய்ஞ்ஞானமாகிறது:

அது தனு முதலியவைகளாகக் காணப்பட்டு மாயா ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானமாக்கிவிடுகின்றது என்று வாதிப்பதானால், இந்த உலகில் எல்லோருமே தனு கரண புவன போகரூபமான ஞானத்தைப் பெற்றிருத்தலால் யாவருமே ஞானிகள் எனத்தக்கவ ராவர். அவ்வாறு கொள்வது சரியாகாது. ஆகவே, எது பொய்ஞ்ஞானம்? எது மெய்ஞ்ஞானம்? என்று வேறுபாடறிவது சிரமமான காரியமாகிறது.

ஆன்மா, சிவம், சிவஞானம் என்று மூன்றுவித மாகச் சைவவாதியர் செப்புவர். சிவமும் சிவஞான மும் என்று சொல்லப்படுவதால், ஆன்மாவும் ஆன்ம ஞானமும்; பாசமும் பாசஞானமும் என்கிற மூன் றாகிய முதல்கள்பற்றிய ஞானமும் உண்டெனப்படும். இந்த மூன்றும் ஒன்றல்ல; ஒன்றுவனவும் அல்ல. ஒரு சமயம் ஆன்மாவானது சிவத்தோடு ஒன்றும்போது சிவஞானமே உள்ளது என்றால் மற்ற இரண்டு ஞானங் களும் எங்கேபோயின? எப்படிப்போயின? என்பது காட்டப்படவேண்டும். அவ்விஷயமும் சைவவாதியர் கூற்றால் தெரியப்பட்டிலது.

ஆன்மாவும் சிவமும் கூடி ஒருமுதல் ஆகிவிடும் என்று சைவவாதியர் சொல்வர். இப்படிப் பெத்த நிலையில் இரண்டு பொருளாக இருந்து, முத்தியில் ஒரு பொருளாகிவிடுகிறது என்கிற கொள்கை மாயா வாதியின் கொள்கை ஆகும். அது சைவவாதத்துக்குச் சற்றும் பொருத்தமற்றதாம்.

இனி ஒருமுதல் ஆகும் விதத்தைச் சைவவாதியர் எப்படிக் கூறுகின்றனர் என்றால், முதலில் அவர்கள்

பதி - பதிஞானம், ஆன்மா - ஆன்மஞானம், பாசம் - பாசஞானம் என்று ஆறு பொருள்களை உரைக்கின்றனர். பிறகு, பாசத்தையும் பாசஞானத்தையும் விட்டு விடுகின்றனர். பொருள் நான்கு ஆகிறதென்கின்றனர். பிறகு, பசுஞானத்தைமாத்திரம் நீக்கிவிட்டு ஞாதுரு - ஞானம் - ஞேயம் என்று மூன்று பொருளாக்குகின்றனர். இவற்றுள் ஜீவஞானத்தைநீக்கி ஆன்மா சிவம் என்கிற இரண்டு பொருளாகக் கூறுகின்றனர். பிறகு, இந்த இரண்டும் ஒன்ருகி ஒரு முதலாகிவிடுகின்றதாகச் செப்புகின்றனர். அதாவது ஆன்மா, சிவனிடத்தில் கூடிவிடுகின்றதென்பதாம். இரண்டும் ஒரு பயனும் என்பது இவர்தம்கொள்கை ஆகிறது. இது நின்மல சாக்கிர அதீத திருவருட் பகுதி எனப்படும். இது உண்மைமுத்தி அன்று. இதனை மணிவாசகப் பெருமான், "சென்று சென்று அணுவாய்" என்கிற வரியுள்ளதான "இன்றெனக்கருளி இருள் கடிந்து" என்னும் திருவிருத்தத்திலே கர்த்தாவின் தன்மையை அருளிச்செய்திருப்பதால் அறிதல் கூடும். இத்திருவிருத்தத்திலே தத்துவங்கள் யாவும் குறுகிக் குறுகி இறையிடம் முடியும் என்பது கூறப்பட்டுள்ளது. ஆன்மா ஒன்ருய்விடும் என்பது அன்று. "ஞாயிறே போன்று நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்" என்று கூறுமிடம் இதனைத் தெரிவிப்பதாகும். இது அடிகளின் அதீத நிலையினை உணர்த்துகின்றதாகும். உயிர்கட்கு அப்பாற்பட்டவன் என்பது "யார் உனை அறியகிற்பார்" என்பதால் பெறப்படும். தத்துவங்களெல்லாம் அணுத்தன்மைப்பட்டகாலை இறைவன் அவற்றை மீட்டும்வடிவுறச்செய்தற்கு வெளிப்படநின்றியக்குவன் என்றும், அவை வடிவங்களாயினகாலை

இறைவன் அந்த வடிவங்களின் உள்நின்று இயக்குவன் என்றும் இறைவன் இயக்கம் பேசப்படுதல் காணலாம். அன்றியும் இத்திருவிருத்தத்திலே "ஒன்றும் நீ அல்லை; அன்றி ஒன்றில்லை" என்று கூறப்பட்டிருத்தலால், "ஒன்றும் அல்ல; இரண்டும் அல்ல; ஒன்றும் இரண்டுமின்றும் அல்ல" என்ற முத்தி உண்மைநிலையின் இயல்பு புலப்படுத்தப்பட்டிருத்தலும் தெரியப்படல் தக்கதாகும்.

அன்றியும், பதியும் பசுவும் ஒன்றும் என்றால், இதனால் பயன் ஏதும் இல்லையாகும். அதாவது, இன்ப நிலையும், பத்தியுருக்கத்தால் அதனைப்பெறுவான் நிலையும் இல்லை எனவே கொள்ளப்பட்டுப் பயனற்றது முத்திநிலை என்ற இழிபு வந்துசேரும். பயனற்றதான ஒரு முடிபுக்கு இவ்வளவு முயற்சிகள் எற்றுக்கு? என்று கேட்கவும் நேரிடும். ஆதலால் பெறுவான் இன்மை என்கிற குற்றம் உண்டாம் என்க.

ஆகையால், நாம் இக்கரைக்கு அக்கரை பச்சை; அக்கரைக்கு இக்கரை பச்சை என்று பசுப்போல் மயங்கலாகாது. உண்மையானதொன்றினைப் பற்றி என்றும் அதனை விடாதிருக்கவேண்டும். அப்படிப் பற்றி ஒழுகி நிலையாம் பேரின்பம் துய்க்க விரும்பினால், திருவெண்ணெய்நல்லூரிலே விளங்கும் ஸ்ரீ மெய்கண்டதேவநாயனார்பால் திருவருளின் உண்மையைப்பெற்றுத் திகழும் ஸ்ரீ மறைஞானசம்பந்தநாயனார் அருளிச்செய்துள்ள சித்தாந்தசைவக் கொள்கைகளை மேற்கொண்டிடுதல்வேண்டும். அங்ஙனம் விளங்கும் அத்தேசிகரருளிச்செய்த உண்மைகள், சிவப்பிரகாசம் என்னும் தமிழ்ச்சாத்திர நூலிலே ஸ்ரீ உமாபதிதேவ

நாயனர் என்கிற இந்த நூலாசிரியரால் அருளிச்செய்யப்பட்டுள. அந்நூலினை உரிய ஆசாரமும் தீக்கையும் உடையராகி ஆசாரியருடன் கூடி ஆராயின் திருவருளின் பகுதி எத்தகையது என்கிற சித்தாந்தசைவ நுட்பம் திட்பமுறப் புலப்படும்.

இனிச் சிவப்பிரகாசம் முதலாம் சித்தாந்த நூல்களைப் படித்துச் சித்தாந்தசைவத்தின் கொள்கைகள் யாவற்றையும் அறியுமுன்பாக, இந்நூலினை ஓதுவோர் ஒருவாறு தெரிந்துகொள்ளுதற்பொருட்டுச் சித்தாந்த சைவத்தின் இன்றியமையாத சில கொள்கைகள் மட்டில் இங்குத் தரப்படுதல் காண்க.

சற்காரியவாதத்தினை அடிப்படையாகக்கொண்டதே சித்தாந்தசைவத்தின் தனிச்சிறப்பாகும். சற்காரியவாதம் இன்னதென்பது நூலினுள் கூறப்பட்டுள்ள இடத்தே தெரியலாகும். உள்ளதுதான் காரியப்படும் என்பதே இதன் சுருக்கமான லக்ஷணமாகும். எப்போதும் ஒரு காரியம் ஒடுங்கும்போது அதன் முதற்காரணத்திலேதான் ஒடுங்கும். ஒடுங்குதல் என்று கூறினும் இலயித்தது என்று சொன்னாலும் காரியம் காரணத்துள் ஒடுங்கியதென்றே கொள்ளவேண்டும். இதனால்தான் ஒடுங்கிய எதுவும் மீளவும் தோன்றுதற்கு முடிகின்றது. நிலத்தில் உள்ள வித்திலிருந்து முளை தோன்றுகிறது. அதுபோலவே, ஒடுங்கிய நிலையிலுள்ள மாயையினின்று உலகம்தோன்றும். இருவினை, ஆதி அன்று. அப்படிச்சொன்னால் முன்பு இல்லாதது பின்னே தோன்றியதெனப்பட்டு மேற்கூறப்பட்ட வாதத்துக்கு இழுக்குப்படும். தற்போது காணப்படும்

தால் உடம்புக்குக் காரணமாக இருப்பது சூக்கும உடம்பாகும். உயிருக்கு மாறிப் பிறத்தல் என்பது உண்டு. சகசமலத்தினேடுள்ள போதும் ஆன்மாவுக்கு உணர்வு உண்டு. ஆனால் சூக்குமப்பட்டுள்ளதென்னலாம். அப்படியில்லையாயின் பிறகு உணர்வுகள் தோன்றுதற்கு இடமில்லாமல்போம். ஆணவமலம் மேலே சொல்லப்பட்ட ஞானத்தின்தொழில் நிகழவொட்டாது மறைத்துக்கொண்டிருப்பதாகும். உயிரின் குணம் அறிவு, அதன் குற்றம் பற்றுந்தன்மை. முத்தியிலும் உயிர் உண்டு. ஆன்மா சித்துப்பொருளாம். முதல்வனுக்கு அநாதியே மலமில்லை. அந்தக் கரணங்களோடு கூடாமலே அறிவு நிகழப்பெற்றவனுவன். ஆன்மாவும் சிவமும் அநாதியே பிரிப்பற்றுள்ளன. ஆணவமே இதனை அறியவொட்டாமல் மறைத்திருப்பது. சிவ அநுக்கிரகத்தால் அம்மறைப்பு நீங்கும். அப்போது சிவனுடைய பிரிப்பில்லாமையை அநந்நியமாகக் கண்டு சிவானந்தபரவசத்தாலே முப்பத்தாறு தத்துவங்கட்கும் அப்பாற்பட்ட சிவபெருமான் திருவடிகளை உயிர் அடையப்பெறும். இந்த அளவுக்குச் சித்தாந்த சைவத்தின் கொள்கைகளை ஈண்டு அறியப்பெறுதல் நன்றும்.

இங்ஙனம் கூறியுள்ளமையால், ஸ்ரீ மெய்கண்டார் ஞானபரம்பரையிலே எழுந்தருளிய ஸ்ரீ மறைஞான சம்பந்தர் இந்த நூலாசிரியரின் ஆசாரியராவர் என்பதும், அவர்பால் தாம் ஐயமறப்பெற்ற அநுக்கிரகச் செய்திகளே இந்நூலில் ஆங்காங்கும், சிவப்பிரகாச நூலில் ஒருங்கும் கூறப்பட்டுள்ளன என்பதை ஸ்ரீ உமாபதியார், நாம் தற்போதம் அறும்வண்ணம்

தந்தருளுகின்ருர் எனவும் தெளிவோமாக! இதனுல், சித்தாந்தசைவ நுணுக்கங்களையெல்லாம் நாம் சிவப் பிரகாசம் என்னும் சாத்திர நூலால் அறியவேண்டும் எனத் தெரிவோமாக! ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவருள் அந்நூலையும் அடியேன் சிந்தித் தற்குத் துணைபுரிவதாகுக!

சைவவாதி நிராகரணம் முற்றிற்று.

## உமாபதியார்

# திருவருள்பெற வழிகூறியருளுதல்

### வெண்பா

தராவலயத்(து) உள்ளோர்கள் தந்தசங் கற்ப
நிராகரணம் என்னல் நிகழ்த்தும் - பிரானைஇனி
வெம்பந்தம் நீங்கத் தொழுமின்! வியன்மருதச்
சம்பந்தன் வந்(து)அருளும் தான்.

இந்தவெண்பா இந்த நூலாசிரியராகிய ஸ்ரீ உமாபதிதேவநாயனாரால் அருளிச்செய்யப்பட்டதாகும். ''என்னல்'' என்னும் சொல் இப்பாட்டில் இருத்தல் இதனைப் புலப்படுத்துவதாகும். இந்த நூலை உலகத்துள்ள யாவரும் ஓதி உணரவேண்டும் என்பதைத் தராவலயத்துள்ளோர்கள் தந்த சங்கற்பம் என்னும் சொற்றொடரால் அறியலாகும். இக்காலத்து அறிஞர்கள் உலக முழுவதும் ஒரேசமயத்துட்பட்டிருப்பின் நன்று எனக் கூறி அதற்கு இன்னசமயந்தான் ஏற்புடையதெனக் கூறுதலின் வேறுபாடுடையவராவர். அங்ஙனமின்றி, இந்நூலாசிரியர் சித்தாந்த சைவக் கொள்கைகள் உலகாயதம் முதலிய எல்லாச்சமயத்துக் கொள்கைகட்கும் இடந்தந்து அவை யாவற்றினும் வியாபித்திருப்பதாலும், தன்னின் மேம்பட்டதொரு கொள்கை எச்சமயத்தும் இல்லாமையாலும் இஃதொன்றே உலகப் பொதுச்சமயத்திற்குரியதென்பதை நிராகரணம் நிகழ்த்தும் என்ற சொற்றொடரால் சொல்லியருளுகின்றமை சிந்தையுட்கொள்ளத்தக்கதாகும். மற்றும், இந்நூலில் ஆங்காங்கு, உலகாயதம்,

பவுத்தம், சமணம், மாயாவாதம் முதலிய சமயங்களின் கொள்கைகளையும் எடுத்து ஆசிரியர் காட்டிச் செல்லு தலும் இக்கருத்தினை வலியுறுத்தும்.

ஆசாரியனைச் சிவனின் வேருக நாம் எண்ணுதல் கூடாதென்பதைப் பிரானை என்ற சொல்லாட்சியால் ஆசிரியர் அருளுதல் கண்டுகொள்ளத் தக்கதாம். இந்த நூற்கொள்கைகள், தம்மால் புதுவதாக இட்டுக் கட்டிச் சொல்லப்பட்டவை அல்ல; அவை பரம்பரை பரம்பரையாக அநாதி முதல் வருவனவாகும் என்பதை என்ஞல் நிகழ்த்தும் பிரானை என்ற இடத்தால் குறிப்பிக்கின்ருர் ஆசிரியர். மேலும், நாமனைவரும் கர்த்தாவின் எண்ணப்படி நடக்கும் கருவிகளேயன்றி- அடிமைகளேயல்லாமல் - முதன்மைத்தன்மை ஒரு போதும் உடையவராகமாட்டோம் 'என்பதையும் இத்தொடரால் நாமறியலாம்.

ஆசாரியர் திருவவதாரம் செய்தருளிய தலமும் நம்மனோரால் போற்றப்படத் தக்கதென்பதை வியன் மருத (மருதூர்) என்ற இடம் தெரிவிப்பதாகும். ஆசாரியனுடைய திருப்பெயரே திருமந்திரமாகும் என்ற சிறப்பினைச் சம்புந்தன் என்ற சொல்லால் ஆசிரியர் குறித்தல் காணலாம். ஏதும் செய்ய இய லாமற்போனலும், ஆசாரியனைத் தொழுது கிடந்தாலே போதும் என்றும், அதுவே எளிதில் நிறைவேற்றக் கூடிய தவமாகும் என்றும் நமக்குணர்த்தக்கருதியே தொழுமின் என்றருளியுள்ளார். அங்ஙனம் தொழுதிடும் ஒருபாயத்தால் பாசங்கள் நீங்குமா என்ற ஐயத்தினை அறுப்பதே வெம்பந்தம் நீங்க என்றுள்ள தொடர் ஆகும்.

பாசநீக்கம்மட்டில் வாய்ப்பதோடு நில்லாமல் சிவப்பேறும் அடைவிக்கும் அருட்டிறமும் ஆசாரியரைத் தொழுதாலே விளையும் என்பார் வந்து அருளும்தான் என்றார். இதுகாறும் கெட்டொழிந்தோமே: இச்சஞ்சிதம் என்ன ஆவது? என்று நாம் அச்சமுறுமைத் தெருட்டுதற்பொருட்டே இனி தொழுமின் என்றுள்ளார் என்னலாம். இன்னொருசமயத்தே புகச்செய்து பக்குவப்படுத்திடும் சங்கடமும் நமக்குத் தராமல் இப்போதே பக்குவப்படுத்தி ஆட்கொண்டருளுவர் ஆசாரியர் என்பதைத் தான் அருளும் என்பதனல் அறியலாகும். இப்பாடலின் மூலமாகவும் நாம் சித்தாந்த சைவ முறைமையினை உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெளியலாகும் என்க.

சங்கற்பநிராகரணம் சார்புக்கட்டுரை முற்றிற்று.

ஸ்ரீ உமாபதிதேவநாயனர் திருவடி வாழ்க.

---

